# கோட்டை கழட்ட வெட்கப்படுகிறான்



























**சன்லைட் சோப்** துணிகளை நீடித்தி
ருக்கச் செய்கிறது.

S. 220-50 TM

இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி

மலர் 14
இதழ் 40

மன்மத ௵
சித்திரை 18


## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்: சம்பவங்களும் கற்பனையே.

மலர் 14

இதழ் 40



*தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா.* - பாரதியார்

# இலங்கைக்கு வழிகாட்டும் ஒரு உடன்படிக்கை

இந்த வாரம் ஒரு மகிழ்ச்சியான செய்தி நமக்குக் கிடைத்தது. பாண்டுங்கில் தலைவர்கள் கூடியதன் விளைவாகச் சீனாவும் இந்தோனீசியாவும் தங்களுக்குள் ஒரு நல்லபடியான ஒப்பந்தத்தைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

இந்தோனீசியாவில் இருபத்தைந்து லக்ஷம் சீனர்கள் வாழ்ந்து வருகிறார்கள். எந்த தேசத்துப் பிரஜைகளாக இருக்க வேண்டும் என்று அவர்கள் பிரியப் படுகிறார்களோ, அந்தப்படியே அவர்கள் பதிவு செய்யப்படுவார்கள். இந்தோனீசியப் பிரஜைகளாகப் பதிவு செய்ய வேண்டும் என்று அங்குள்ள சீனர்கள் இஷ்டப்பட்டால் வேறு எவ்விதமான கேள்வியும் இராது. எந்த விதமான விசாரணையும் தகராறும் கிடையாது. இந்தோனீசிய சர்க்கார் அப்படியே ஒப்புக்கொண்டு அவர்களைப் பதிவு செய்து விடுவார்கள். சீன தேசத்தைச் சேர்ந்தவர்கள் எத்தனை லக்ஷம் பேர் இப்படி இந்தோனீசியாவில் அந்த தேசத்துப் பிரஜைகளாக ஆவார்கள் என்கிற கேள்வியை இந்தோனீசிய சர்க்கார் கேட்கமாட்டார்கள். அதைப்பற்றிப் பயப்படவும் மாட்டார்கள். இவ்வாறு பாண்டுங்கில் சீன சர்க்காரும் இந்தோனீசிய சர்க்காரும் கையெழுத்திட்டு ஒரு ஒப்பந்தம் முடிவாகி விட்டது. எவ்வளவு சுலபத்தில் எத்தனை நியாயமாக ஒரு பெரிய பிரச்னை தீர்ந்து போய் விட்டது!

"நீ என்ன சொன்னாலும் நீ சீனாக்காரன்தான். உன்னுடைய மனசுக்குள்ளே சீனாதான் உட்கார்ந்து கொண்டிருக்கிறது. உன் உள்ளத்தில் சீனப் பற்றே இருந்து வருகிறது" என்று சொல்வதும், "எந்தத் தேதியில் இந்தோனீசியாவுக்கு நீ வந்தாய்? உன் தகப்பன் எப்போ வந்தான்? நீ பிறந்தது எங்கே?" என்றெல்லாம் கேள்வி கேட்பதும் கிடையாது. யார் எந்த தேசத்தைச் சேர விரும்புகிறார்களோ அப்படியே இரண்டு சர்க்காரும் ஒப்புக் கொள்ளுவதெனக் கையெழுத்து இட்டு விட்டார்கள். இது பாண்டுங்கில் ஏற்பட்ட சரியான புத்திசாலித்தனமான நீதியான ஒப்பந்தம்.

இதைப் பார்த்துக்கொண்டு அங்கிருந்த இலங்கைப் பிரதமர், இதிலிருந்து பாடம் கற்பாரா? இலங்கையிலுள்ள இந்திய வம்சத்தினர் தங்களுடைய இஷ்டப்படி பிரஜா உரிமை கோரலாம், இந்தியா இலங்கை ஆகிய இரு நாடுகளில் ஒரு தேசத்தை அவர்கள் தெரிந்து கொள்ளலாம், அதை மறு பேச்சில்லாமல் ஒப்புக்கொள்ள வேண்டியதே தருமம் என்று சில நாட்களுக்கு முன்பு ராஜாஜி இலங்கை சர்க்காரைக் கண்டித்து அறிக்கை விட்டிருந்தது வாசகர்களுக்கு நன்றாக நினைவிருக்கும். ராஜாஜி எடுத்துக் காட்டிய இந்த நியாய முறையைச் சீன சர்க்காரும் இந்தோனீசிய சர்க்காரும் எவ்வளவு நியாயமாக, ஒழுக்கத்தோடு ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இந்த நியாயத்தை இலங்கையும் ஒப்புக் கொண்டுதான் தீரவேண்டும். வேறு அநியாயப் பேச்சுக்கள் நிறைவேறாது. தென்னாப்பிரிக்காவின் துஷ்ட பாடத்தை விட்டு விட்டு இந்தோனீசியாவிடமிருந்து நீதிமுறைப் பாடம் கற்றுக் கொள்ள வேண்டும் என்று இலங்கை சர்க்காரைக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

சீன இந்தோனீசிய ஒப்பந்தம் ஒரு மகத்தான ஆதர்சம். கண்ணில்லாதவர்களுக்கு வழிகாட்டும்படியான உதாரணம்.

நம்முடைய இந்திய சர்க்காரும் இதைக் கவனிக்க வேண்டும். ஏதேதோ நிபந்தனைகளைத் திணித்துக் அருத்தி ஒப்பந்தங்கள் செய்துகொண்டு, இதைச் செய்யவில்லை அதைச் செய்யவில்லை என்று பிறகு ஓடியாடுவதில் பயனில்லை. இலங்கை இந்தியர்களை எந்த நாடு உங்களுக்கு வேண்டும் என்று கேட்டு அந்தப்படி முடிவு செய்து விடுங்கள் என்று இந்திய சர்க்கார் உறுதியாகக் கோர வேண்டும். இது ஒன்றே வழி. மற்ற எல்லாம் ஏமாற்றத்திலும் குற்றச்சாட்டுகளிலும் முடியும்.

பாண்டுங்கில் நடைபெற்ற இந்த ஒரு மகத்தான முடிவு இலங்கை சர்க்காரின் கண்களைத் திறக்குமாக!

# பாண்டுங் மகாநாடு

பாண்டுங்கில் கூடிய பிரதிநிதிகளில் சிலர் அமெரிக்காவின் நெட்டுரு மாணவர்கள். முன் கூட்டியே தயாரித்து வைத்துக் கொண்டு வந்த பாடங்களைச் சரியாகப் படித்து விட்டார்கள். பத்திரிகைகளுக்கும் கொடுத்து விட்டார்கள்.

முக்கியமாக இலங்கைப் பிரதமர் இந்தக் காரியத்தைச் செய்து விட்டார். இவருடைய பிரசங்கம்—எழுதித் தயாரித்து வந்தது, பத்திரிகைகளில் பிரசுரம் ஆகியிருக்கிறது. அமெரிக்க நாட்டைச் சேர்ந்தவர் ஒருவர்தானோ இவர் என்று கேட்கும்படியான நடையில் எழுதப்பட்டிருந்தது இந்தப் பிரசங்கம்.

ருஷ்யா இலங்கையின்மேல் படையெடுத்து வந்து கொண்டிருந்து, அதைக் கொழும்பிலிருந்து தொலைநோக்கி வைத்துப் பார்த்துப் பயந்து போய்ப் பேசும் தோரணையில் இருக்கிறது இவருடைய பேச்சு!



இதையெல்லாம் பார்த்தால் பாண்டுங் காரியங்கள் ஒன்றும் உருப்படாது போல் தோன்றிற்று. காதைப் பஞ்சு கொண்டு அடைத்து விட்டு உள்ளத்தைத் தாள் போட்டுப் பூட்டி விட்டு, மகாநாட்டுக்குச்சென்றால் அங்கே கூடுவதில் என்ன பயன்! இருந்த இடத்தில் உட்கார்ந்துகொண்டே கட்சிப் பேச்சுப் பேசிக் கொண்டிருக்கலாம். விசாலமான உள்ளத்தோடு, திறந்த காதோடு, கூடினால்தான் மகாநாடுகளினால் ஏதாவது பிரயோஜனம் உண்டு. ஒருவர் சொல்லுவதைக் கேட்டு ஏமாந்து போக வேண்டியதில்லை. ஆனால் அதே சமயம் உள்ளத்தில் பரிசுத்தம் இருக்க வேண்டும். பிறரும் யோக்கியர்களாகவே இருக்கலாம் தான் என்ற எண்ணம் கொஞ்சம் இருக்க வேண்டியது அவசியம். அது சிலரிடம் இல்லை; என்ன செய்வது!

எது எப்படியானாலும் யோக்கியர்கள் ஒன்று கூடி ஒருவரை ஒருவர் தொட்டுப் பேசிப் பழகுவதே ஒரு பெரிய விஷயம். சில பொத்தல்கள் இருந்தே தீரும். அதற்காக வருத்தப்பட்டுப் பயன் இல்லை. ஓட்டைகள் விழுந்த ஏற்றச் சால் வைத்துக் கொண்டே சில ஏழை உழைப்பாளிகள், குடியானவர்கள், வெள்ளாமை நடத்தவில்லையா! தெய்வம் நம்முடைய ஜவாஹர்லால் நேரு அவர்களுக்கு அருளிற்று. பாவ எண்ணங்கள் நுழையாத சுத்தமான உள்ளம் படைத்தவர் அவர். அவருக்கு ஆண்டவன் துணை செய்தான். ஏகோபித்து நல்ல தீர்மானங்கள் நிறைவேறி விட்டன.

முக்கியமாக ஒன்று கவனிக்கலாம். ஆசிய சுதந்திர நாடுகள் ஒன்று கூடிப் பேசுவதே மேல் நாடுகளுக்குப் பெரும் பயத்தை உண்டாக்கி விட்டது. "ஓ! இவர்கள் என்னவோ சூழ்ச்சி செய்யப் போகிறார்கள்!" என்று பல மேனாட்டுப் பத்திரிகைகளும் பிரமுகர்களும் மூடியும் மறைத்தும், வெளிப்படையாகவும் சொல்லி வந்தார்கள். மேனாட்டு அரசியல் சூத்திரதாரிகள் எத்தனையோ தடவை எவ்வளவோ இடங்களில் கூடியிருக்கிறார்கள். அதைப் பற்றிப் பாவம் அவர்களுக்கு விகற்பமாக ஒன்றும் தோன்றவில்லை. மற்றவர்கள் அவர்களைச் சந்தேகப்படுவார்களே என்ற எண்ணமே ஏற்படவில்லை. ஆனால் பாண்டுங்கில் சிலர் கூடுவதைப் பற்றி மிகவும் பயந்து எச்சரிக்கை செய்து வந்தார்கள். தென் ஆப்பிரிக்காவைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. எங்கே எந்த இடத்தில் அநியாயக் குப்பை அதிகமோ அங்கே பயமும் அதிகம். பெரிய பெரிய மக்கள் கூட்டங்களை அக்கிரமமாக அடக்கியாளும் சிறு கூட்டம் பயந்து சாவது இயற்கையே.

பாண்டுங்கினால் ஒரு அனுபவம் அடைந்தோம். மேல் நாட்டார் பயப்படும்படியான சக்தி ஏதோ ஒன்று நம்மிடம் இருந்து வருகிறது. அதை அழிந்து போகாமல் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

"இதோ எடுத்துக் கொள்ளுங்கள் பணம்! எதற்கு வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். எப்படியாவது செலவழித்துக் கொள்ளுங்கள்!" என்கிறார்கள் அமெரிக்கர்கள். ஆனால்,—

கரவாது உவந்து ஈயும்
கண்அன்னார் கண்ணும்
இரவாமை கோடி
உறும்.

தெண்ணீர் அடுபுற்கை
யாயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்குஇனியது
இல்

என்று வெகு நாட்களுக்கு முன்பே திருவள்ளுவர் எச்சரித்திருக்கிறார்!

* * *

உலகத்தை இரண்டாக வெட்டுவதே சிலருடைய விருப்பமாக இருந்து வருவதைப் பார்க்கிறோம். மக்கள் சமூகத்தை ஆண்டவ

# சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

னுடைய சிருஷ்டியாக வைத்துக் கொண்டாலும் சரி, அல்லது மூல காரணத்தை மறந்துவிட்டு, இடையில் ஆரம்பித்து, ஊமைப் பிராணி வகை ஒன்றிலிருந்து கொஞ்சம் மாறுபட்டு எப்படியோ பிறந்து அதன்மேல் தலைமுறை தலைமுறையாக உடலும் உணர்ச்சியும் சிறந்த வகையில் பரிணமித்து நிலைபட்டுப் போன ஒரு இனந்தான் மனித ஜாதி என்று டார்வின் கோட்பாட்டை வைத்துக் கொண்டாலும் சரி. இந்த மனித ஜாதி பல இடங்களில் பலவேறு குலங்களாகத் தனித்தனியாக உண்டாகவில்லை என்பது ஜீவராசி விஞ்ஞான நிபுணர்களின் முடிவு. ஏதோ ஓரிடத்தில்தான் மனிதன் தோன்றினான். அங்கிருந்து அந்தக் குலம் உலகம் முழுதும் பரவிற்று. கணித சாஸ்திர தத்துவத்தின்படியும், டார்வின் ஆராய்ச்சியின்படியும் பரிணாம நியதிகளை ஆழ்ந்து ஆராய்ந்த நிபுணர்கள் பலரின் முடிவுகளின்படியும் இதுவே உண்மை. பலவேறு இடங்களில் தனித்தனியே மனித ஜாதி தோன்றவில்லை. கணித சாஸ்திரத்தின்படியும் ஜீவராசி பரிணாம நியதிகளின்படியும் பலவேறு இடங்களில் மனித ஜாதியின் தோற்றம் நடைபெற முடியாது.

தென் ஆப்பிரிக்க வெள்ளையர்களின் மூதாதைகள் தனியாகத் தோன்றி விடவில்லை! வேறு வெள்ளைய மூதாதைகளும் தனியாகத் தோன்றி விடவில்லை. உலக மக்கள் அனைவருக்கும் ஒரே மூதாதைகள்தான் என்பது பைபிள் மட்டிலும் அல்ல, விஷ்ணு புராணம் மட்டுமல்ல, டார்வின், ஹக்ஸ்லி, வாலெஸ் முதலிய பௌதிக விஞ்ஞான ரிஷிகளின் முடிவும் அதுவே.

இந்த ஒரு குடும்பம், ஆதி மனித இனம், மிகவும் பெரிதாகப் போயிற்று. தனித்தனிப் பிரதேசங்களில் பிரிந்து வளர்ந்து வந்தது. ஒருவரோடு ஒருவர் கூடி சமூக சக்தியை வளர்த்து, காட்டு மிருகங்களை அடக்கியும் இயற்கைக் கஷ்டங்களைச் சமாளித்தும் மிகச் சிறந்த நிலையை அடைந்து விட்டது, இந்த மானுட ஜாதி.

பின்னர் தங்களுக்குள்ளேயே பொறாமையும் போட்டியும் கலகமும் வளர்ந்து விட்டன. குடும்ப எண்ணிக்கை மிதமிஞ்சிப் போகாமல் வாழ்வதற்கு இந்தக் கலகங்களும் பயன் பட்டன! இன்னும் அது தீர்ந்தபாடில்லை. ஆள்சேதம் அதிகமாக ஏற்படாமல், ஆயுதங்களை வைத்துச் சண்டை போடவும் வழிகள் கண்டார்கள். எப்படியோ மரணத் தொகையை விட ஜனனத் தொகையே அதிகமாகி வந்தது. இனி எவ்வாறு ஆகுமோ பார்ப்போம்!

இந்த மக்கள் உலகத்தைப் பல மூர்க்க நிபுணர்கள் வெவ்வேறு விதமாகத் துண்டித்து வருகிறார்கள். கிறிஸ்துவர், கிறிஸ்துவர் அல்லாதவர் என்று ஒரு சமயம் பிரித்தார்கள். எழுத்து வடிவில் உள்ள சாஸ்திரத்தைக் கொண்டவர்கள் என்றும் அது இல்லாதவர்கள் என்றும் மற்றொரு சமயம் பிரித்தார்கள். யூதர்கள், யூதர் அல்லாத மற்ற நல்லவர்கள் என்று இன்னொரு சமயம் பிரித்தார்கள். பொருளாதார நிர்வாகத்தில் வியக்தி சுதந்திரம் கொண்டாடுபவர்கள் என்றும் அவ்வாறின்றி சமூக ஏகபோக உரிமை இருக்க வேண்டும் என்கிறவர்கள் என்றும் உலகத்தை இரண்டாகப் பிரிக்க வேண்டும் என்பது, அமெரிக்காவின் கொள்கை. இதுவே சித்தாந்தம், இதற்காக அணுகுண்டு யுத்தமும் செய்ய வேண்டும் என்பது அவர்கள் கருத்து.

உணவுப் பழக்கத்தை வைத்துப் புலால் உண்பவர்கள், வனஸ்பதி உணவே சரி என்பவர்கள் என்று பிரித்து உலகை இரண்டாக்குவோர் சிலர்! இன்னும் சிலர், மாட்டு இறைச்சி உண்பவர்கள் என்றும் அதை நீக்கி வாழ்பவர்கள் என்றும் உலகை இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிக்க வேண்டும் என்பார்கள். இவர்கள் தவிர, இன்னும் பல பிரிவு



முயற்சிகளும் உண்டு. அவற்றை யெல்லாம் சொன்னால் கோபம் வரும்.

சுத்த வெள்ளையர்களும், மற்றவர்களும் என்று தென் ஆப்பிரிக்கத் தலைவர் தற்போது பிரிந்து இரைச்சல் போடுவதைப் பார்க்கிறோம்.

பிரிந்து பிரிந்து போவது நம்முடைய பழைய மூதாதைகளான ஊமை மிருகங்களின் சுபாவம். அது நம்மை இன்னும் விட்டபாடாக இல்லை. ஒன்று சேர்வது அந்த ஆதி மிருகப் பிராணிகளிலிருந்து மாறுபாடு. அதுவே மனித ஜன்மத்தின் தனிப் பண்பும் சக்தியும். தனிப் பண்பைப் புறக்கணித்து மிருகப் பண்பை அனுசரிக்க வேண்டும் என்கிறார் தென் ஆப்பிரிக்கத் தலைவர். 'இல்லாவிட்டால் வெள்ளையர்களே! அழிந்து போவீர்கள்' என்கிறார். உலக வெள்ளையருக்கு அவர் செய்யும் உபதேசம் இது. இவர் மற்றவர்களைப்போல் மூடி மறைத்துப் பேசவில்லை. காட்டு மிருகத்தைப் போல் கன்னுகப் பற்களைக் காட்டிப் பேசுகிறார்! இது ஒரு விதத்தில் நல்லது. பாம்புகளைப் போல் 'வழ வழ' என்று ஊர்ந்து பொந்துகளில் புகுந்து மறைந்திருந்து கடித்துக் கொல்லுவதைவிட, வெட்ட வெளிச்சமாகப் பேசுகிறார். "நாம் குறைந்த ஜனத்தொகை. அவர்கள் மிக அதிகத் தொகை. நாம் விட்டுக் கொடுப்பது அபாயம். கூடாது. நாமே ஆள வேண்டும்" என்கிறார்.

கான மயிலாடக் கண்டு வான் கோழி தானும் அதுவாகப் பாவித்துத் தன் பொல்லாச் சிறகை விரித்தாடிய சிறுகதை தெரியுமே! அதுவே நம் இலங்கை முக்கிய அமைச்சருடைய போக்கு. இல்லை. இது சரியான உவமை அல்ல. மயிலோ, கோழியோ வேண்டாம். புலியைக் கண்டு பூனையும் தானும் அதுவாகப் பாவித்து மிரட்டுவது போல் என்றால் சரியாக இருக்கும்! வளர்ந்த பூனை புலியாகச் சீறுகிறது. இது நம்முடைய இலங்கைப் பிரச்னை.

* * *

இலங்கையை விட்டு விடலாம். பாண்டுங் மகாநாட்டைப் பற்றித் தென்னாப்பிரிக்க வெள்ளைத் தலைவர் பயந்து நடுங்கினர். நியாயம்தானே! மற்ற வெள்ளையர்களும் பயப்பட்டுத்தான் வருகிறார்கள். ஆனால் அவர்கள் பண்பட்ட முறையில் பேசுகிறார்கள். ஏழை ஜாதிகளுக்குப் பணத்தைத் தாராளமாகக் கொடுத்துச் சமாளித்துக் கொள்ளலாம் என்று பேசுகிறார்கள். அமெரிக்க ராஷ்ட்ரபதி இதற்காக இந்தியா உள்ளிட்ட ஆசிய நாடுகளுக்கு 353 கோடி டாலர்கள் ஒதுக்கி வைக்க வேண்டும் என்று அவர்களுடைய மக்கள் சபையில் பிரேரேபித்திருக்கிறார்.

பணம் என்றால் என்ன? 'பணம்' எதற்குப் பயன்படும்? காகிதமாகவே பயன்படுமா? இல்லை. காகிதத்தை வைத்து எந்த ஊர்க் காகிதமோ அந்த ஊர் மக்களின் சேவையைப் பெற்று நாம் முன்னேற முடியுமா என்பதைப் பார்க்க வேண்டும். முன்னேறினாலும் நிலையான முன்னேற்றமா என்பதையும் நிதானமாக ஆராய வேண்டும். உள் நாட்டில் ஒருவருக்கு ஒருவர் பணம் தந்து உதவுவது போல் அல்ல, வெளி நாட்டாரிடம் காகிதப் பணம் பெறுவது. வெளி நாட்டுப் பணத்தில் பல சிக்கல்கள் உண்டு. இதை நமது சர்க்கார் அறிவார்கள்.

* * *

சீனதேசத் தலைவர் பாண்டுங்கில் ஏப்ரல் மாதம் 23-ந் தேதி பகிரங்கமாகத் தம் உறுதி மொழியை உலகத்துக்கும் மேல்நாட்டுத் தலைவர்களுக்கும் தெரியும்படியாக வெளியிட்டார். அந்த உறுதிமொழியின் அம்சங்களில் யாதொரு குறையோ குற்றமோ யாரும் எடுத்துக் காட்ட முடியாது.

'இந்தப் பேச்சுக்களை நாம் நம்புவதற்கு இல்லை. எவ்வளவு தெளிவாக உறுதி தந்தாலும் நமக்குச் சந்தேகமே' என்று விதண்டாவாதம் சொல்லிக் கொண்டிருக்கலாமே ஒழிய, அவர் இது சொல்ல வில்லை, அல்லது அது சொல்லி விட்டார் என்று குற்றம் சாட்டுவதற்கு இனிமேல் இடம் இல்லை. ஒரு தலைவர் அல்லது ஒரு மக்கட் கூட்டம் தங்களுடைய வருங்கால நடத்தையைப் பற்றி உறுதிமொழி தரலாம். உடன்படிக்கையில் கையெழுத்திடலாம். அதற்கு மேல் என்னத்தைச் செய்ய முடியும்? இரத்தப் பையை எடுத்து மேஜையின் மேல் வைக்க முடியுமா? என்ன சொன்னாலும் நம்ப மாட்டேன் என்று சொல்லிக் கொண்டே இருப்பது விதண்டா வாதம் மட்டும் அல்ல, உலக சமாதான வாதாவரணத்தைக் கெடுக்கும். சமாதானத்துக்கு இன்றியமையாத உடன்படிக்கை அல்லது உறுதிமொழியை ஒருவர் தந்தால் அதை மதிப்பதே மற்றவர்களுடைய கடமை. ஒப்புக் கொள்ள மறுத்தால் கூட்டுறவுக்கு வழியே அடைபட்டுப் போகும். கூட்டுறவே வேண்டாம், யுத்தமே வேண்டும் என்று சொல்லுவது போலவே ஆகும்.

பாண்டுங்கில் சீனத் தலைவர் சௌ என் லாய் நடந்து கொண்ட முறை எல்லா விதத்திலும் மிகவும் பாராட்டத் தக்கது. அவருக்குப் போட்டியாக நின்ற மற்றவர்களைத் தலைவணங்கச் செய்யும் பான்மை கொண்டதாக இருந்தது. அமெரிக்கா உட்பட சந்தேகித்த மேனாடுகள் எல்லாம் வெட்கப்பட வேண்டியதாய் இருந்தது.

பாற்கடலைக் கடைந்த போது முதலில் பொங்கிய விஷத்தைப் பரமசிவனார் விழுங்கிக் காத்தார். பாண்டுங்கில் முதலில் கிளம்பிய விஷத்தை நம்முடைய நேருவும், சீனத் தலைவர் சௌ என் லாயும் விழுங்கித் தொண்டையில் அடக்கிக் கொண்டு, உலக சமாதானத்தைக் காத்தார்கள்.

பாண்டுங்கில் கூடிய மகாநாடு மகத்தான முடிவுகளை ஏகோபித்து ஒப்புக் கொண்டு விட்டது. அங்கே கூடியவர்கள் உலகம் யுத்தத்தில் அழிந்து போகாத வழிகளைத் தெளிவாக எடுத்துக் காட்டியும், தாங்களும் ஒப்புக் கொண்டும் விட்டார்கள். நவீன விநாசகர ஆயுதங்களை உண்டாக்கக் கூடாது, சேகரிக்கக் கூடாது, பயன் படுத்தக் கூடாது, பரீட்சார்த்த

வெடிகளும் கூடாது, அவற்றை உடனே நிறுத்திவிட வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார்கள். உலகத்துக்கும் ஒரு உரிமை உண்டு, உலக ஆரோக்கியத்தைக் கெடுக்கும்படியான இந்தப் பரீட்சார்த்த வெடிகளை வெடித்துக் கொண்டு போகக் கூடாது என்று உறுதியாகவும் வியக்தமாகவும் சொல்லி யிருக்கிறார்கள்.

* * *

அமெரிக்காவுக்கு ஆண்டவனுடைய அருள் இருப்பின் அமெரிக்க சர்க்காருக்கும் அமெரிக்கப் பத்திரிகைகளுக்கும் நல்லறிவு இப்போது உண்டாகும். செல்வாக்குள்ள அவர்களுடைய நண்பர்களும் ஒத்து ஊதுவதை விட்டு விட்டு நல்லுபதேசம் செய்து தைரியமும் மனத் தெளிவும் தோன்றச் செய்வார்கள்.

அருள் இல்லையேல் தாங்கள் உண்டாக்கிய பிசாசைக் கட்டிக் கொண்டு பயந்து சாவதே நம்முடைய கதி என்று தங்கள் வாழ்க்கையை அனுவசியமாகக் கெடுத்துக் கொள்வார்கள். பயத்துக்கு உண்மையான காரணம் தாம் கட்டிக் கொண்டிருக்கும் பிசாசு என்பதை அவர்கள் அறிய வில்லை. அந்தப் பிசாசை விடுவதற்கு மனமில்லாமல் இதற்காக ரொம்பப் பணம் செலவு செய்தோமே, ரொம்ப சிரமப் பட்டோமே என்றெல்லாம் எண்ணி அதைக் கட்டிக் கொண்டிருக்கும் வரையில் பயம் என்கிற நோய் அவர்களை விடாது.

'உலகத்தின் காற்றையும் நீரையும் நாம் அணுகுண்டுக்காரர்களுக்கு விற்றுவிட வில்லை, உங்கள் வெடிகளும் பரீட்சைகளும் உலக உரிமையைத் தாக்குகின்றன' என்று அழுத்தமாகச் சொல்லி ஆட்சேபித்தும் அவர்கள் தங்களுடைய பரீட்சை வெடிகளை வெடித்துக் கொண்டேதான் போவோம் என்று பிடிவாதம் செய்தால் இதற்கு நாம் என்ன செய்வது? அநியாயத்துக்கு மருந்து ஒத்துழையாமை. இது நாம் கண்ட நல்ல மருந்து. உலக உரிமைகளைப் புறக்கணித்துக் கொண்டு பிடிவாதம் செய்பவர்கள் தருகிற உதவிப் பணத்தை வாங்கிக் கொண்டே போனோமானால் ஒத்துழையாமைக்கு வழியில்லை. வெற்றுப் பேச்சாகத்தான் முடியும். இந்த விஷயத்தைப் பற்றி நன்றாக ஆலோசித்துத் தைரியமான முடிவுக்கு வரவேண்டும். பெருந் தியாகம் இன்றி ஒத்துழையாமை முயற்சி பயன்படாது.

* * *

பாண்டுங் வெற்றியின் மகத்தான பெருமை யாரைச் சேரும் என்பது வெளிப்படை. ஒரு புது யுகத்தின் உதயம் என்றே சொல்லத் தகும் இந்த வெற்றி, பராசக்தியின் அருள் பெற்ற நம்முடைய பிரதமர் நேருஜியுடைய செல்வாக்கும் சேவையுமே தந்த வெற்றியாகும். பழைய ஞானமும் புராதனப் பண்பாடுமே பெருஞ் செல்வமாய்ப் பெற்றிருக்கும் ஆசிய நாடுகளுக்கு ஆண்டவன் அருள்வானாக!

அட்டைப்பட விளக்கம்

# அன்னமும் அணங்கும்

"தூது நீ சொல்லி வாராய்!" —குறவஞ்சி

திரிகூட ராசப்ப கவிராயர் இயற்றிய குற்றாலக் குறவஞ்சியில் வரும் வசந்தவல்லி என்னும் ஆரணங்கு குற்றாலநாதரின் மீது காதல் கொண்டு மேற் கண்ட விதம் தூதுவிட்டாள். ஆனால் இவ்விதழ் அட்டைச் சித்திரத்தில் ஓவியர் மணியம் சித்திரிக்கும் அணங்குக்கு அவ்வித சிரமம் ஏற்படவில்லை.

* * * *

மன்னன் மீது காதல் கொண்ட அந்த அணங்கு அனங்கனால் மிகவும் துன்புற்றாள். அவளுக்கு அந்நிலையில் ஒன்றுமே வேண்டியிருக்க வில்லை. தாமரைத் தடாகத்துக்குச் சென்றாலும் சற்று மனம் நிம்மதியுறுவோம் என்று வந்தாள்.

அழகிய தாமரை மலர்களைப் பறித்தாள். அவளுடைய பேர் அழகைக் கண்ட அந்தத் தாமரை மலர்கள், வெட்கிப் போய்க் கூம்பித் தலைகுனிந்தன!

இவையெல்லாம் பார்த்தது அந்த அன்னம். அவளுடைய காதல் நோயைப் பற்றிக் காதலனுக்குத் தெரிவிக்க வேண்டியது தன் கடமை என்று எண்ணியது. அந்தக் கடமையைச் செய்வதில் தனக்குப் பேர் இன்பமே இருக்கிறது என்பதையும் உணர்ந்தது. அவள் சொல்லாமலே அவளுடைய காதலனிடம் தூது போகத் துணிந்து விட்டது! அதோ பாருங்கள்! அந்த அன்னம் எவ்வளவு வேகமாகச் செல்லுகிறது!

'சொல்லாமலே செய்வர் பெரியர்' என்றார்கள், இந்த அரச அன்னமும் அந்தப் பெருங் குணத்தோடு மிதந்து செல்கிறது. அன்னத்தின் தூதின் பயனாக நிச்சயம் அவள் இன்பம் அடைவாள் என்பதில் என்ன சந்தேகம்?

## சமாதான மகுடம்!




"பிரதமர் நேரு தமது நீர வாழ்க்கையின் உச்ச நிலையை அடைந்தது பாண்டுங் மகாநாட்டில்."—ராஜாஜி

## மணமகள் யார்?

பிரிட்டனில் மே மாதக் கடைசியில் தேர்தல் ஆரம்பமாகவிருக்கிறது. பிரிட்டிஷ் மக்கள் தங்களை ஆள இரு கட்சிகளுக்குள் ஒரு கட்சியினரைத் தேர்ந்தெடுத்தாக வேண்டும்.

## பாண்டுங் வெற்றி

பாண்டுங் மகாநாடு தென்னாப்பிரிக்க வெள்ளைத் தலைவருக்குப் பீதியை உண்டாக்கியிருக்கிறது.

இப்பொழுது
நடைபெறுகிறது

பக்ஷிராஜாவின்

# ஆசாத்

ஹிந்தி

டைரக்ஷன்
S.M.S. நாயுடு



# என்ன சேதி?

## இந்திய சர்க்காரின் நன்முயற்சி

அடுத்த ஐந்து வருஷ காலத்துக்குள் ஐந்து லட்சம் தொண்டர்களுக்குப் பயிற்சி அளிப்பதென்று சமீபத்தில் இந்திய சர்க்கார் நிர்மானித்த திட்டத்தின் முதற் கட்டம் மே மீ முதல் தேதியிலிருந்து அமுலுக்கு வருகிறது.

சத்தியம், சாத்துவீகம், தியாகம், ஆத்ம பலம் இவற்றின் மூலம் பாரத மக்கள் சுதந்திர இலட்சியத்தை அடைவதில் வெற்றி பெற்றனர். இனி, சுதந்திரத்தின் பலனுன் சுபிட்ச வாழ்வுபெற உடலுறுதி, உழைப்பில் ஊக்கம், கட்டுப்பாடு முதலியவை அத்தியாவசியமாகும்.

மே மாதத்திலிருந்து தேசியத் தொண்டர்படை என்று ஆரம்பிக்கப்படும் அந்தப் படையில் சேருவோருக்குச் சாதாரண இராணுவப் பயிற்சி அளிப்பதுடன், சமுதாயத் தொண்டுக்கு இன்றியமையாத பல பயிற்சிகளும் அளிக்கப்படும். பாமர மக்களுக்குக் கல்வி போதிக்கவும், சமுதாய ஆக்கத் திட்டங்களில் பங்கு எடுத்துக் கொள்ளவும் அத் தொண்டர் படையினருக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும்.



நவாப் டி. எஸ். ராஜமாணிக்கம்

பாரத நாட்டின் சில பகுதிகளில் சென்ற வருஷம் பூகம்பம், வெள்ளக் கொடுமை முதலிய இயற்கை உற்பாதங்கள் ஏற்பட்டபோது, இராணுவத்தைச் சேர்ந்தவர்களின் உழைப்பானது கஷ்டமடைந்த மக்களுக்கு எவ்வளவு மகத்தான உதவியாக இருந்தது என்பதைப் பலரும் அறிவர். அதுபோலவே, இப்போது பயிற்சி பெறப் போகும் தொண்டர் படை, பாரத நாடு சுபிட்ச இலட்சியத்தை அடைவதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

## மாணவர் சமூகத்தின் தொண்டு

முன்பெல்லாம் பரீட்சைகள் முடிந்ததும் மாணவர்கள் தங்கள் தங்கள் ஊர்களுக்குச் சென்று படிப்பதோ அல்லது வீண் பொழுது போக்குவதோ வழக்கம். இப்போது சில மாணவர்கள் கோஷ்டியாகச் சேரிகளுக்கும் கிராமங்களுக்கும் சென்று அந்தப் பிரதேசங்களில் வசிக்கும் படிப்பில்லா மக்களுக்குச் சேவை செய்ய முற்பட்டிருக்கிறார்கள்.

இவ்வருஷத்தில் சென்னையில் உள்ள கல்லூரிகளில் வாசிக்கும் மாணவிகள் மகாபலிபுரத்துக்குச் சென்று கிராம அபிவிருத்திக்கான பல காரியங்களில் ஈடுபட்டார்கள். சென்னை சேவா சமாஜத்தின் ஆதரவில் மேற்படி காரியங்கள் நடைபெற்றன.

வருஷா வருஷம் பதினாயிரக்கணக்கான மாணவ, மாணவிகள் பரீட்சைக்கு எழுதிவிட்டு, அதன் முடிவு எப்போது தெரியும் என்று ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் யாவரும் சென்னை மாணவர்களின் உதாரணத்தை மனத்திற்கொண்டு கிராமப் பிரதேசங்களுக்குச் சென்று தொண்டு செய்ய முற்பட்டால் இரு சாராருக்கும் நன்மை ஏற்படும்.

## பம்பாயில் கலை விழா

பக்தி உணர்ச்சியைப் பரப்பும் நோக்கத்துடன், ஏராளமான பொருள் செலவில் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுள்ள காட்சி ஜோடனைகளைக் கொண்டு பல்லாண்டுகளாக நல்ல நாடகங்களையே நடத்திப் பெரும் புகழ் பெற்று விளங்கும் நவாப் ஸ்ரீ ராஜமாணிக்கம் அவர்கள், தமிழகத்துக்குப் புதியவர் அல்ல.

தமிழகத்துக்கு இத்தகைய அருமையான பக்தித் தொண்டைச் செய்துவரும் நவாப் ஸ்ரீ ராஜமாணிக்கம் அவர்கள் தம்முடைய நாற்றைம்பது நடிகர்களுடன் பம்பாய் நகருக்கு விஜயம் செய்து, மே மாதம் ரீம் தேதி பம்பாய் கவர்னர் ஹரிகிருஷ்ண மெஹதாப் அவர்கள் தலைமையில் மகத்தான நாடக விழாவைத் துவங்குகிறார்.

நவாப் ஸ்ரீ ராஜமாணிக்கம் அவர்கள் தம் நாடகங்களை, பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் நடத்துவார். இந்த நாடகங்கள் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் கட்டட நிதிக்காக நடத்தப்படுகின்றன. கலை வளர்ச்சியையே நோக்கமாகக் கொண்டு சிறந்த முறையில் தொண்டாற்றி வரும் பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் இவ்வரிய முயற்சிக்குப் பம்பாய்த் தமிழ் மக்கள் ஆதரவு காட்டுவார்களென நம்புகிறோம்.




## 66. அசோகவனத்தில் சீதை

அந்த வனத்து மதில் சுவரின்மேல் நின்றதும் ஹனுமானுடைய உள்ளத்திலும், சரீர அவயவங்கள் முற்றிலுமே ஒருவித ஆனந்த உணர்ச்சி ஊடுருவிப் பாய்ந்தது. சீதை இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டபடியால் தன்னையும் அறியாமல் இந்த மகிழ்ச்சி உற்பவமாயிற்று.

வசந்த காலத்துத் துவக்கத்தில் மலரும் புஷ்பங்கள் எல்லாம் பூத்து மரங்களும் கொடிகளும் மிக ரம்மியமான காட்சி தந்தன. அடர்த்தியாக மரங்கள் இருந்த ஒரு இடத்தைப் பார்த்து அங்கே ஹனுமான் தாவிச் சென்றான். அந்த அதிர்ச்சியினால் எழுப்பப்பட்ட குயில்களும் மயில்களும் மதுரமாகச் சப்தித்தன. மான்களும் வேறு மிருகங்களும் நடமாடிக் கொண்டிருந்தன. மரங்களினின்று மலர்கள் உதிர்ந்து ஹனுமானுடைய உடல் முழுதும் போர்த்து அவன் உருவம் புஷ்ப மயமாகக் காணப்பட்டது. நந்தவனத்திலிருந்த பிராணிகள் மலர் மயமான ஹனுமானுடைய அழகிய சிறு குரங்கு உருவத்தைப் பார்த்து வசந்த தேவதையே வனத்துக்கு அதிகாலையில் வந்து விட்டது என்று எண்ணின.

**ராஜாஜி**

அந்தத் தோட்டத்தின் ரமணீயம் யார் மனத்தையும் கவரத் தக்கதாக இருந்தது. அழகிய வாவிகள், தங்கம், வெள்ளி, தந்தம், முத்து, பவழம் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட தளங்கள், படிகத் தள வரிசைகள், செய் குன்றுகள், ஆறுகள், பூங்கொடிகள், அருவிகள், அவற்றில் விளையாடிக் கொண்டிருந்த அழகிய பறவைகள் — இந்தக் காட்சி ஹனுமானுடைய உள்ளத்தில் ஆனந்தம் உண்டாக்கிற்று. சில மரங்களைச் சுற்றி அழகிய தங்க மேடைகளும் வெள்ளி மேடைகளும் கட்டப்பட்டிருந்தன. மரங்களில் கட்டித் தொங்கிய சிறு மணிகள் காற்றால் அசைக்கப்பட்டு மெதுவாகத் தொனித்துக் கொண்டிருந்தன. தங்க மேடையால் அலங்கரிக்கப்பட்டு உயர்ந்து பரவி நின்ற ஒரு மரத்தின் மேல் ஏறி இலை மறைவில் ஹனுமான் உட்கார்ந்தான்.

“உயிரோடிருப்பாளானால் சீதை நிச்சயம் இந்த அழகிய நந்தவனத்துக்கு வருவாள். ராமனைத் தனியாக இருந்து தியானிக்க இந்த ரமணீயமான இடத்தையே அவள் விரும்புவாள். மரங்களும் கொடிகளும் நிறைந்த வனத்தில் நடமாடுவதில் ஜானகிக்கு மிகப் பிரியம் என்று சொன்னார்கள் அல்லவா? காலைச் சந்தியா காலத்தில் தேவியை உபாசித்துப் பிரார்த்தனை செலுத்த இங்கே நிச்சயமாக வருவாள்.”

இவ்வாறு யோசித்துக் கொண்டும், சுற்றிப் பார்த்துக்

கொண்டும், இலைகளின் மறைவில் அந்த மரத்தின் மேல் ஹனுமான் உட்கார்ந்து கீழே பார்த்தான். கண்ணைக் கூசும்படி பிரகாசித்துக் கொண்டிருந்த அழகான, நிர்மலமான அந்த மரத்தடி மேடையின் பேரில் ஒரு மானுடஸ்திரீ இருப்பதைக் கண்டான்.

கசங்கிப் போய்த் தூசி தங்கிய ஒரு மஞ்சள் வஸ்திரம் உடுத்தியிருந்த அந்த ஸ்திரீயின் முகத்தில் புகையால் மூடிய சுடரைப்போல் அழகும் துக்கமும் கலந்து நின்றதைக் கண்டான். அடிக்கடி பெருமூச் செறிந்து உபவாசத்தால் நலிந்து முதல் நாள் பால சந்திரனைப் போல் கண்டும் காணாமலுமாக இருந்தாள். அவளைச் சுற்றிச் சில அரக்கிகள் உட்கார்ந்திருந்தார்கள். பெருந் துக்கத்தால் பீடிக்கப்பட்ட அந்தப் பெண்ணுருவத்தைக் கண்டதும் இவளே ஸீதை என்று ஹனுமான் நிச்சயித்தான்.

தெய்வீக காந்தி வீசிய முகத்தில் தீராத துயரத்தைக் கண்டான். கொடிய அரக்கிகளால் சூழப்பட்டு, வேட்டையாடப் பட்டுத் தன் கூட்டத்திலிருந்து பிரிந்து போய், பயந்து நாலா பக்கமும் விழித்துத் தவிக்கும் ஒரு மானைப் போல் காணப்பட்டாள். கருத்து நீண்ட தலைமயிர் பின்னப்படாமல் தொங்கிற்று. துக்கம் என்பதே அறியாத ஒருத்தி பெருந் துயரத்தில் சிக்கிப் போய் இன்னது செய்வது என்று தெரியாமல் அலைந்தவளாகக் காணப் பட்டாள். துக்கத்தாலும், உணவின்றியும் இளைத்துப்போய் அழுக்குப் படிந்த ஆடை உடுத்தி ராக்ஷஸிகளுக்கிடையில் உட்கார்ந்திருக்கும் இந்த அழகி ஸீதையே என்று ஹனுமான் நிச்சயித்து விட்டான்.

ஆபரணங்கள் அணிய வேண்டிய அழகிய தேகமாக இருந்தது. ஆனால் ஆபரணமின்றியிருந்தது. மேகம் மூடிய சந்திரனைப் போலிருந்தது அவள் முகம். பார்க்கப் பார்க்க அந்தத் தங்க மேடையின்மேல் ஆபரணங்களின்றிக் கவலையும் பயமும் நிரம்பிய முகத்தோடு உட்கார்ந்திருந்த அந்த ஸ்திரீயின் தோற்றம் மெய்ப்பாடுகள் எல்லாம் கவனித்து அவளே ஸீதை என்பதாக உறுதி கொண்டான்.

ராமனுக்காக பூமண்டலம் முழுதும் வானரர்களால் தேடப்பட்ட ஸீதையைக் கண்டு விட்ட மகிழ்ச்சி பெரிதாயினும், கண்ட உருவத்தின் கடல் போன்ற துயரமானது அந்த மகிழ்ச்சியைக் கரைத்து இல்லாமற் செய்து விட்டது.



பார்க்கப் பார்க்க ஹனுமானுடைய கண்களுக்கு அந்த ஸ்திரீயின் தெய்வீகத் தோற்றத்தின் அழகும் தேஜஸும் வளர்ந்தன. 'ராமனுடைய பெருந் துக்கத்தின் காரணத்தை இப்போது கண்டேன். இவளை இழந்த எவன்தான் துயரப்பட மாட்டான்? ராமன் தன் உயிரை வைத்திருப்பதே அற்புதம். எத்தகைய தேவி! எத்தகைய புருஷன்!' என்று எண்ணி எண்ணி ஹனுமானுடைய உள்ளம் அந்தச் சமயம் சமுத்திரத்துக்கு வடக்கேயிருந்த ராமனிடம் சென்றது.

* * *

அப்போது நீல வானத்தில் நிர்மலமான நீர் நிறைந்த ஏரியில் அழகிய அன்னம் மெதுவாகச் செல்வதைப் போல் சந்திரன் வாயு புத்திரனுக்கு உதவிசெய்வதற்காகவேவந்ததுபோல், உயரக் கிளம்பிப் பிரகாசித்தான்.

ஹனுமான் இலைகளிடையில் மறைந்து பார்த்துக் கொண்டும், இன்னது செய்வது என்று யோசித்துக் கொண்டும், கடல் மத்தியில் ஒரு பெருங் காற்றடித்து ஆடி அலையும் ஒரு பாரம் ஏற்றிய கப்பலைப் போல் கவலைக் கடலில் தத்தளித்துக் கொண்டிருந்த சீதையின் முகத்தை நன்றாகப் பார்த்தான். சுற்றிக் காவலிருந்த ராக்ஷஸிகளின் வடிவங்களோ பார்த்துப் பொறுக்க முடியாத கோர அவலக்ஷண வடிவங்கள். ஒருத்திக்கு ஒரே கண்; ஒருத்திக்கு ஒரே காது. சிலருக்குக் காதுகளே இடையாது. சிலருக்கு மூக்கு இல்லை. சிலருக்கு மூக்கு ஊர்த்துவம் நோக்கி நின்றது. சிலருக்குத் தலையில் மயிரே இடையாது. சிலருக்கோ விபரீதமான ஜடை; சிலருக்குக் கீழே தொங்கும் பெரிய வயிறு; சிலருக்கு ஒட்டகம் போன்ற உதடுகள். சிலர் கூனிகள். சிலர் குள்ளமானவர்கள்; சிலர் பனை மரம்போல் நீண்டு உயர்ந்து வளர்ந்தவர்கள். சிலருக்குப் பன்றி முகம், சிலருக்குப் புலி முகம், சிலருக்கு எருமை முகம், சிலருக்கு நரி முகம், சிலருக்கு ஆட்டு முகம். இப்படி இன்னும் பல பயங்கர அவலக்ஷண சொரூபங்களாக, சூலங்கள் முதலிய ஆயுதங்கள் பிடித்து அரக்கிகள் கூட்டமாக இருக்க, அவர்களுக்கு இடையில் தன் சீலம் ஒன்றாலேயே ரக்ஷிக்கப் பட்டவளாக, தரையில் ஆதரவற்றுப் படர்ந்து கிடக்கும் பூங்கொடி போல் ஜானகி வாடிய முகத்தோடு நடுங்கிக் கொண்டிருந்தாள்.

இப்படிக் காட்சி தந்த சீதா தேவியைப் பார்த்து, 'காணமற் போனவளைக் கண்டு விட்டேனே' என்று ஹனுமான் மகிழ்ச்சி யடைந்தான். கூடவே, அவள் நிலையைப் பார்த்துத் துக்கப்பட்டான். அவளுக்காக வெகு தூரத்தில் அலைந்து துயரப் பட்டுக் கொண்டிருக்கும் ராமலக்ஷ்மணர்களை நினைத்தான்; அவர்களைத் தியானித்து நமஸ்கரித்தான்.

* * *

அச்சமயம் இன்னும் இருள் தீர்ந்து நன்றாக விடியவில்லை. வேத கோஷங்களாலும் இனிய சுப்பிரபாத கீதங்களாலும் ராவணன் படுக்கையிலிருந்து எழுப்பப் பட்டான். எழுந்தவுடன் சீதையை நினைத்துக்கொண்டு அவளை வைத்திருந்த நந்தவனத்துக்குக் கிளம்பினான்.

பரிவாரம் சூழ அந்தப்புரத்து நந்தவனத்துக்கு வந்தான். வாசனை வீசும் தீபங்களும், சாமரங்களும், குடையும் பிடித்துச் சென்ற பெண்கள் கூட்டத்துக்கிடையில் தானும் ஆபரணங்கள் பூண்டு பரிசுத்தமான வெள்ளை உத்தரியம் ஒன்று தரித்துக் கண்ணைக் கவரும் இரண்டாவது மன்மதனைப் போல் ராவணன் வந்தான். வாயிலண்டை வந்த பரிவாரத்தின் கோஷமும், கூட்டமாக வந்த பெண்களின் பாதநூபுர ஓசையும் மாருதியின் காதில் விழுந்தன.

கொஞ்ச நேரத்தில் ராக்ஷச மன்னன் வருவதைக் கண்டான். உடனே ஹனுமான் அடர்ந்த இலைகளுக் குள்ளே முன்னை விட நன்றாக மறைந்துகொண்டான். ராவணன் சீதை யிருக்குமிடம் வந்தான். ராவணனுடைய பலமும் பராக்கிரமமும் வீரியமும் தேஜஸும் அற்புத காட்சியாக இருந்தன. அவன் வருவதைக் கண்டவுடனே சீதையின் தேகம் சுருங்கிப் போய் விட்டது. பெருங் காற்றில் வாழைமரம் நடுங்குவதுபோல் நடுங்கினாள்.

---

பிழைத் திருத்தம்:—சென்ற இதழில் வெளி வந்த சக்கரவர்த்தித் திருமகன் 67—வது பக்கம் வலது பத்தியில் 'வலது காலை' என்பதை 'இடது காலை' என்று திருத்திக் கொள்ள வேண்டும்.

சீதையின் நிலையைக் கொஞ்சம் சிந்தித்து நம் மனக்கண் முன் வரச் செய்து கொண்டு இந்தப் புண்ணிய கதையைப் படிக்கவும் கேட்கவும் வேண்டும். என்னைப் போன்றவன் எழுதி விளக்கும்படியான விஷயமல்ல. ஒரு சாதாரண அனுதைப் பெண் முரட்டுக் காமுகன் ஒருவனுடைய வசம் துரதிர்ஷ்ட வசத்தால் சிக்கிப்போனுளானல் படும் துயரத்தைச் சொல்லி முடியாது. ராமசந்திரனைப் போன்ற ஒரு ராஜகுமாரனைப் புருஷனுய்ப் பெற்ற சீதையின் நிலைமையைச் சொல்லித் தீருமா? நம்முடைய உள்ளத்தைச் சுத்தமாக்கி ஆண்டவனைத் தியானித்துப் படித்தால் தான் முனிவர் எழுதி யிருக்கும் உபமானங்களின் பொருள் விளங்கும். அவற்றை நான் இந்தப் பேசும் தமிழில் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை; பயனு மிராது.

ஆயினும் முனிவர் சொல்லியிருப்பதைக் கொஞ்சம் எடுத்து உரைக்கிறேன். வால்மீகி முனிவருடைய உவமை நடையை இங்கே காணலாம்.

யாதொரு ஆபரணமுமின்றி மண்ணும் தூசியுமே ஆபரணமாக அணிந்து விளங்கிய சீதையினிடம் ராவணன் வந்தான். அவளை உள்ளத்துச் சம்மதத்தோடு அடையலாம் என்கிற ஆசையை ராவணன் விட்டு விடவில்லை. வெட்டி விழுந்து கிடக்கும் அழகிய மரம்போல் காணப்பட்டாள் சீதை. அவளுடைய முகப் பொலிவு, சேறு படிந்த தாமரை போல் விளங்கியும் விளங்காமலும் இருந்தது. ராவணன் வந்தான் என்பதை உணர்ந்ததும், அந்தக் கணம் சீதையின் உள்ளம் இருந்த இடம் விட்டு ராமனிடம் சென்றுவிட்டது. மிக வேகமாகச் செல்லும் குதிரைகள் பூட்டிய ரதம்போல் அவளுடைய சித்தம் ராமனிடம் அவளை இழுத்துச் சென்று விட்டது. மந்திரத்தால் கட்டப்பட்ட நாகப் பாம்பைப் போல் அலைந்தாள். நல்ல கீர்த்தி ஒரு பொய்யான அபவாதத்தில் சிக்கி அலைவதுபோல் இருந்தது அவள் நிலை. வேதம் நன்ருக ஓதியவன் மந்திரத்தை மறந்து விட்டாற் போலும், அழிந்து போன புகழைப் போலும், நிர்வாகம் செய்ய வேண்டிய பதவியி லிருப்பவனுடைய ஆணையை யாரும் மதிக்காமற் போன நிலையைப் போலவும், ஊர் நாலா பக்கமும் தீப்பிடித்து எரியும் நிலை போலவும், வீரர்களை இழந்த சேனையைப் போலவும், ஜலம் வற்றிய நதியைப் போலவும், அசுத்தப்படுத்தப் பட்ட ஓம குண்டத்தைப் போலவும், யானையால் அழிக்கப்பட்ட அழகிய தாமரைக் குளம் போலவும், பிடுங்கி எறியப்பட்ட புஷ்பக் கொடியைப் போலவும், காட்டில் கூட்டத்தைக் காத்த ஆண் யானையினின்று வேறு படுத்திப் பிடித்துக் கட்டி விடப்பட்ட பெண் யானையைப் போலவும், உபவாசத்தாலும் துக்கத்தாலும் பயத்தாலும் வாடி வதங்கி நடுங்கிக்கொண்டிருந்தாள் ஜானகி. தன்னைக் காப்பவர்கள் பக்கத்தில் இல்லையே, இன்னும் வந்து சேரவில்லையே என்று மனத்தில் எண்ணி எண்ணி வாடிய முகமும் மெலிந்து போன தேகமுமாக தெய்வத்தைத் தியானித்துக் கொண்டிருந்தாள்.

இந்த நிலையி லிருந்தவளை வந்து அணுகிப் பேச ஆரம்பித்தான் ராவணன். மரத்தின் மேலே மறைந்து உட்கார்ந்து ஹனுமான் பார்த்துக் கொண்டிருந்தான்.

# லக்ஷ்மணன் சும்மா இருப்பானா?

சுரேஷ் ராம்

நமது நாட்டை விட்டு ஆங்கிலேயர்கள் சென்றதிலிருந்தே, நம் இளைஞர்களைப் பற்றி அடிக்கடி குறை கூறுவது சகஜமாகி விட்டது. அவர்கள் கண்மூடித்தனமாக நடந்து கொள்கிறார்கள் என்றும், கட்டுப்பாடின்றி நடந்து கொள்கிறார்கள் என்றும் குறை கூறுகிறார்கள். நேற்று வரை அடங்கி ஒடுங்கி யோக்கியமாக இருந்த மாணவர்கள், இன்று திடீர் என்று மரியாதை இன்றி, பணிவில்லாமல் நடந்து கொள்ளுகிறார்கள் என்று எண்ணும்படியாகத் தான் இன்றைய வயது வந்த பெரியவர்கள் பேசுகிறார்கள். இதைப் பார்க்கும்போது இன்று நாட்டில் வயது வந்த பெரியவர்களுக்கும் இளைஞர்களுக்கு மிடையே பிளவு எவ்வளவு வேகமாக விரிவடைந்து வருகிறது என்பது தெரிகிறது. இவர்கள் ஒருவர் மேல் ஒருவர் கோபமும் தாபமும் கொள்ளுகின்றனர். வாழ்க்கை கசந்து தோன்றுகிறது. ஏன், வாழ்வதே கஷ்டமாகவும் சாரமற்றும் தோன்றுகிறது.

இத்தகைய நிலைமைக்குக் காரணமானவர்கள் யார் என்று சொல்வது!—பெரியவர்களா! இளைஞர்களா! இந்த ஆராய்ச்சி தவறு. ஏனெனில் நேற்று இளைஞர்களாக இருந்தவர்கள்தானே இன்று பெரியவர்களாகி யிருக்கிறார்கள்! மேலும் இன்று இளைஞர்களாக இருப்பவர்கள் நாளையே பெரியவர்களாகி விடுவார்கள். ஆகவே குற்றத்தைப் பெரியவர்கள் மீதோ, இளைஞர்கள் மீதோ சுமத்துவதில் பொருளில்லை. மேலும் இந்தப் பிரச்னை ஏதோ புத்தம் புதிதாகத் தோன்றியிருக்கிறது என்றும் சொல்வதற்கில்லை. வேண்டுமானால் ஓர் உதாரணத்தைப் பார்ப்போமே!

ராமன் அந்தப் பெரும் சிவ தனுசை முறித்தவுடன் அங்கே பரசுராமர் தோன்றினார். அவருக்கு அடக்க முடியாத கோபம் வந்து விட்டது. லக்ஷ்மணன் அவரை ரொம்பவும் பரிகசிக்கத் தொடங்கி விட்டான். அவர் கோபம் இன்னும் அதிகரித்தது. இதை யெல்லாம் ராமன் மௌனமாகப் பார்த்துக் கொண்டு நின்றான். ஆனால் பரசுராமரின் கோபமும் லக்ஷ்மணனுடைய பரிகாசமும் உச்ச நிலையை அடைந்து விடவே, இனியும் பொறுக்கக் கூடாது என்று ராமன் குறுக்கிட்டான். இவ்விடத்தில் துளசிதாஸர் ஓர் உண்மைப் புரட்சிக்காரர் போலவே ராமன் வாயிலாகப் பேசுகிறார். ராமன் சொல்லுகிறான்:

"நான் என்ன வெறும் 'ராமன்' தானே! ஆனால் தங்கள் பெயரோ மிகப் பெரிய பெயர். 'பரசு' என்பதும் சேர்ந்தல்லவா இருக்கிறது!"

இதைக் கேட்டுப் பரசுராமரின் கோபம் இன்னும் அதிகரித்து விடுகிறது. துள்ளுகிறார், குதிக்கிறார். பரசுராமரின் அறியாமையைக் கண்டு ராமன் அனுதாபம் கொண்டு மரியாதையும் பண்பும் மிக்க வார்த்தைகளைக் கூறிச் சமாதானப் படுத்துகிறான். அப்பொழுது திடீர் என்று பரசுராமருக்கு உண்மை புலனாகிறது. ராமனை தொழுது வணங்கி விட்டு, பரசுராமர் சென்று விடுகிறார்.

இனி, இந்தப் பரசுராமர் என்பவர் யார்! பழங்காலம் என்பதின் தலைவரா! பழைமையை நிலைநிறுத்த வந்த அவதார புருஷரா!

இந்த லக்ஷ்மணன் யார்! இன்றைய உலகம் போகும் போக்கைப் பார்த்துத் துள்ளிக் குதித்து எழும் சர்வகலாசாலை மாணவனின் பிரதிநிதியா! இந்த ராமன்தான் யார்! வரும் காலத்தின் தலைவனா, அவதார புருஷனா!

இப்படி ஆராயும்போது பரசுராமர், லக்ஷ்மணனைக் கண்டு, இல்லை, ராமனைக் கண்டு அவன் இன்னான் என்பதை முதலில் தெரிந்து கொள்ளவில்லை என்றுதான் தோன்றுகிறது. அதாவது எதிர் காலத்தின் போக்கையும் தலைவரையும் அவர் அறிந்து கொள்ளவில்லை. வையத்தின் தலைமை தமக்கு இன்னும் இருப்பதாகத் தவறாகக் கொண்டிருந்த எண்ணத்தின் காரணமாகத்தான் அவர் கஷ்டப்பட்டார். ஆனால் புதுயுகம் பிறந்து விட்டது, புதுத் தலைமை ஏற்பட்டு விட்டது என்ற ஞானம் உதித்தவுடன் ராமன் யார் என்பதைக் கண்டு கொண்டு விட்டார். தமது அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு போய் விட்டார்.

★

நமது தலைவர்களும், அரசியல் மேதைகளும் இந்தப் பரசுராமரைப் போலத்தான் இருக்கிறார்கள். தாங்கள் சிருஷ்டித்த அந்தப் பழம் உலகில்தான் இன்னும் இருந்து வருகிறார்கள். அவர்கள் இன்னும் பத்தாம் பசலிக் கொள்கைகளையும் முறைகளையும் விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு நமது லக்ஷ்மணர்களை, தங்களுக்குக் கைகட்டி மரியாதை செய்யும்படி கோருகிறார்கள். காலம் என்னும் வெள்ளம் மேலே மேலே போய்க் கொண்டிருப்பது. அதில் லக்ஷ்மணர்கள் மிதந்து செல்ல வேண்டியதுதான். ஆனால் இதைக் கண்டு பரசுராமர்கள் துடிக்கிறார்கள், கோபங் கொள்ளுகிறார்கள். 'இந்த லக்ஷ்மணர்களை ஒழித்துக் கட்டி விடுகிறோம்' என்கிறார்கள். நடக்க முடியாததை நடத்தப் போவதாகக் கூறுகிறார்கள்!

காங்கிரஸ், பிரஜா சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் ஆகிய எந்தக் கட்சியைச் சேர்ந்த பரசுராமர்களாயினும் அவர்கள் விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் பத்தாம்பசலிக்கொள்கைகள் என்ன என்ன என்று ஆராய்வது அவசியம்.

---

*வினோபா அடிகளுடன் பூமிதான யாத்திரை செய்து வரும் ஸ்ரீ சுரேஷ் ராம் மாணவ சமுதாயத்தைப் பற்றியும் பெரியவர்களைப் பற்றியும் வினோபாவின் கருத்துக்களைத் தருகிறார்.*

பிரஞ்சுப் புரட்சி—சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய மூன்று கொள்கைகளை நமக்குக் கற்றுக் கொடுத்தது. ரஷ்யப் புரட்சி 'ஜனசக்தி'யின் தன்மையைக் காண்பித்தது. ஆனால் இந்தக் கட்சிகளைச் சேர்ந்த பரசுராமர்கள் தங்களுடையசொந்த ஆதிக்க வெறியையே கட்சிகள் மீதும் ஜனங்கள் மீதும் செலுத்திச் சர்வாதிகாரிகளாக வாழ விரும்புகிறார்கள். இதற்கு மானவ சமுதாயம் உடன்படுமா! நம்முடைய சமீப கால சரித்திரத்தையே பார்ப்போம். கராச்சி காங்கிரஸில், மக்கள் யாவருக்கும் ஜீவாதார உரிமைகள் வழங்கப்படவேண்டும், நாட்டில் மிக உயர்ந்த சம்பளம் சாதாரண உழைப்பாளி ஒருவனுடைய சம்பளத்தைவிடப் பத்து மடங்குக்கு மேல் இருக்கக் கூடாது என்றெல்லாம் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. இவற்றை யெல்லாம் நமது காங்கிரஸ் பரசுராமர்கள் மறந்து விட்டார்கள்.



தெலுங்கானாவில் நிகழ்ந்த 1948–49 வருஷப் புரட்சி, நிலத்தில் உழுபவர்கள் நிலத்தை உடைமையாகப் பெற வேண்டும் என்ற உண்மையை உணர்த்திற்று. ஆனால் நமது பரசுராமர்கள், உழுபவனுக்கு ஓர் அங்குலம் நிலம் கூட வழங்காமல் தனி நபர் உயர்ந்த பக்ஷம் 20 ஏக்கர் நிலம் (கோதாவரி, கிருஷ்ணா டெல்டா பிரதேசங்களில்) வைத்துக் கொள்ளலாம் என்று சட்டம் இயற்றப் பார்க்கிறார்கள். இப்படி எந்தக் கட்சியைச் சேர்ந்த பரசுராமர்களாயினும் தங்கள் ஆதிக்கமே என்றென்றும் நிலவ வேண்டும் என்ற விருப்பம் கொண்டவர்களாக இருக்கிறார்கள். இதைப் பார்த்துக் கொண்டு லக்ஷ்மணன் எப்படிச் சும்மா இருப்பான்!



நமது சர்வ கலாசாலைகளைப் பாருங்கள். நமது வைஸ் சான்ஸலர்களும் பேராசிரியர்களும் ஆங்கிலம் மட்டும் படித்து ஆங்கிலத்திலேயே கற்றுக் கொடுக்கிறார்கள். தங்களுக்கு உயர்ந்த சம்பளம் வேண்டும் என்கிறார்கள். வேறு எந்த வகை உடல் உழைப்புக்கும் அவர்கள் தயாராயில்லை.

ஆனால் போலீஸ்காரர், விவசாயி, தொழிலாளி — இவர்களை எடுத்துக் கொள்ளுங்கள். 1947 க்குப் பின் இவர்கள் வாழ்க்கையிலும், மனப்பான்மையிலும் எவ்வளவோ முற்போக்கு எண்ணங்களும், மாறுதல்களும் ஏற்பட்டிருக்கின்றன!

சர்வ கலாசாலையைச் சேர்ந்தவர்களோ அப்படியே இருந்து வருகிறார்கள். குறுகிய மனப்பான்மை கொண்ட வைதீகக் கோஷ்டியாக இருந்து வருகிறார்கள். அவர்கள் "கலிவரின் பிரயாணம்" "பாஸ்வல் எழுதிய ஜான்ஸனின் வரலாறு" என்ற புஸ்தகங்களைத்தான் சொல்லிக் கொடுப்பார்கள். நமது கபீர், பங்கிம் சந்திரர், ஞானதேவர், திருவள்ளுவர் முதலியவர்களின் நூல்களைக் கற்றுத் தரமாட்டார்கள்.

இங்கிலீஷ் இலக்கியத்தின் சிறப்பை நான் குறைத்துப் பேச வரவில்லை. ஆனால் அது தாய் மொழியின் இடத்தை அபகரிக்கக் கூடாது; அதனால் முடியவும் முடியாது.

உலகம் முழுவதும் இன்று உடல் உழைப்பின் சிறப்பைப் பற்றிப் பேசப்பட்டு வருகிறது. ஆனால் நமது சர்வகலாசாலைகளிலோ உடலை வளைத்து வேலை செய்வதற்கான பயிற்சியைத் தவிர மற்ற எல்லாம் கற்றுத் தரப்படுகிறது. அது மட்டுமா! வைஸ் சான்ஸலரோ அல்லது பிரின்ஸிபாலோ, அவர் கல்யாணமானவராக இருந்தாலும் சரி, பிரம்மசாரியாக இருந்தாலும் சரி, அவர், கஷ்டத்திலிருந்தாலும் சரி, சுகத்திலிருந்தாலும் சரி, மற்றப் பேராசிரியர்களை விடவும், ஆசிரியர்களை விடவும் அதிகச் சம்பளம் வாங்கியே தீர வேண்டும்! இவற்றை யெல்லாம் பார்க்கும்போது நமது சர்வகலாசாலைகள் பொருளாதார ஏற்றத் தாழ்வு என்ற தீமையின் இருப்பிடம், உடல் உழைப்பு என்ற உயரிய கொள்கைக்கு ஒரு களங்கம், தாய் மொழிக்கு ஒரு அவமானச் சின்னம் என்றே கூற வேண்டும். இந்தப் பயங்கரக் காட்சியைக் கண்டு நமது லக்ஷ்மணர்கள் திக்கித் திணறிப் போகிறார்கள்; பொங்கி எழுகிறார்கள். பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டல்லவா! அந்தப் பொறுமை இழந்து போய் எழுந்தார்களானால் அதில் அதிசயப்படுவதற்கு என்ன இருக்கிறது! வேறு நாடாக இருந்திருந்தால், இதற்குள் அதன் மாணவர்கள் ஆசிரியர்களைச் சர்வகலா சாலைக் கட்டடங்களை விட்டு வெளியேற்றி விட்டுத் தீ கூட வைத்திருப்பார்கள். நமது மாணவர்கள் இதுவரை அம்மாதிரியெல்லாம் நடந்து கொள்ளவில்லை என்றால் அதற்குக் காரணம் நமது உயர்ந்த பண்பாடுதான். அவ்வளவு கொடுமைகளில் இறங்காமல், நமது ஆத்மீகப் பண்புதான் மாணவர்களைத் தடுத்து வருகிறது.

வாழ்க்கையின் மற்றத் துறைகளிலும் இப்படித்தான். மக்களின் ஆரோக்கிய வாழ்வு பெருகப் பெருக டாக்டர்கள் பாடு கஷ்டமாகப் போய் விடுகிறது. மக்கள் தங்களுக்குள் சண்டை சச்சரவுகளைத் தீர்த்துக் கொண்டு விட்டால், போலீஸ்காரர்களுக்கும் வக்கீல்களுக்கும் ரஸிப்பதில்லை. நிலத்தில் பாடுபடும் உழவன், நில உடைமை கேட்டால்,

எங்கேயோ இருக்கும் நிலச் சொந்தக்காரன் முணுமுணுக்கிறான். ஆபீஸ்களில் வேலை செய்யும் குமாஸ்தா புத்திசாலித்தனமாகவும், மனச்சாட்சிக்கு விரோதமின்றியும் நடந்து கொண்டால் எஜமானன் முதலில் அவனை வெளியே அனுப்பிக் கையைக் கழுவி விட்டுத் தான் வேறு காரியம் பார்க்க வேண்டும் என்று எண்ணுகிறான்.

இதனால் எல்லாம் ஒருவரோடு ஒருவர் ஒட்ட முடியாத பிரிவினை மனப்பான்மைதான் வளர்கிறது. இந்த உணர்ச்சி, வேகமாக வீட்டுக்கு வீடு பரவி வருகிறது. எவ்வளவுக் கெவ்வளவு ஒரு வீட்டில் படிப்பும் நாகரிக வாழ்வும் நிலவி வருகிறதோ அவ்வளவுக் கவ்வளவு அந்த வீட்டில் பிரிவினை மனப்பான்மை பிசாசுபோல் தலை விரித்தாடுகிறது. கடைசியில் பொது மக்கள் கஷ்டப்படுகிறார்கள். தேசம் துயர் உறுகிறது. முன்பு நிலத்தில் பாடுபட்டு உழைப்பவனுக்கு மதிப்பிருக்காது. ஆனால் வீட்டில் சோம்பி உட்கார்ந்திருக்கும் நிலச்சுவான்தாருக்கு மதிப்பும் மரியாதையுமுண்டு. இப்படி முன்பு எதற் கெல்லாம் அதிக மதிப்பு அளித்து வந்தோமோ, அந்த மாதிரியே இன்றைய மக்களை மதிப்பளிக்கச் செய்யவேண்டும் என்று முயல்வது பேதைமை. அம் முயற்சி நிச்சயம் தோல்விதான் அடையும். இனி உற்பத்தி செய்பவனிடமே உற்பத்திக்கான கருவிகள் இருக்க வேண்டும். டாக்ஸி மோட்டார், நியாயமாக டாக்ஸி டிரைவருக்கு உடைமையாக வேண்டியதுதான்; கத்தி பரியாரிக்கு உடைமையாக வேண்டியதுதான். நிலம், உழுபவனுக்கே உரியது. இதுதான் புதுயுகக் கொள்கை. இனி உழைப்பாளியின் பயனை உழைக்காத வேறொருவன் அனுபவிக்க முடியாது. இனி நிலத்தையும் சொத்தையும் உழைக்காத எவனும் தன் சொந்த உடைமையாகக் கொள்ள முடியாது.

தலைவர்கள் என்னும் ஆட்டிடையர்கள் ஓட்டிச் செல்லும் ஆடு மாடுகளாக மக்கள் தாங்கள் நடத்தப்படுவதை விரும்பவில்லை. அதிகாரம் இனி புதுடில்லியிலோ, ராஜ்ய தலைநகரிலோ மட்டும் இராது. நாட்டின் ஆட்சியில் எல்லாருக்கும் சம பங்குண்டு. ஒருவரிடம் மட்டும், ஓரிடத்தில் மட்டும் அதிகாரம் அபரிமிதமாக இருப்பது என்பது நடக்காத காரியம். நிலத்தில் உழைக்கும் கைகளும், தொழிற்சாலைகளில் வேலை செய்யும் கைகளும் தமக்குத் தலை என்று ஒன்று இருப்பதைத் தெரிந்து கொண்டு விட்டன. அந்தத் தலை, அதாவது தொழிலாளர்கள் சுதந்திரம் கோருகிறார்கள். எதற்கு! தங்கள் தொழிலையும் திறமையையும் விரிவுபடுத்தி முன்னேறத்தான்.

வேலை என்றால் எல்லாம் வேலைதான்! மூளை வேலை என்பதாகவும், உடல் உழைத்துச் செய்யும் வேலை என்பதாகவும் கூறப்படும் பாகுபாடு ஒழிந்து விடும். ஒழிய வேண்டும். அது மட்டுமல்ல. நற்குணங்கள், யோக்கியமான நடவடிக்கை என்பது எல்லாரிடமும் பரவி நிற்க வேண்டும். தியாகம், சத்தியம், நேர்மை—என்பவை சந்நியாசியினிடமோ, யோகியினிடமோ, ரிஷியினிடமோ மட்டும் இருக்க வேண்டிய பண்புகள் அல்ல. இவை ஒவ்வொருவரும் அனுஷ்டிக்க வேண்டிய பண்புகளாகும்.

இதுதான் இன்றையப் புது யுகத்தின் சங்கநாதம். பரசுராமர்கள் இந்த ஒலிக்குச் செவி சாய்க்க வேண்டும். ராமாயணத்தில் வரும் பரசுராமரைப் போலவே, இவர்களும் ஒதுங்கிப் போய்ப் புதுயுக ராமர்களுக்கு வழி விட வேண்டும். லக்ஷ்மணர்களும் ஓயாமல் பிறரை ஏளனம் செய்து கொண்டிருக்கக் கூடாது. பரசுராமர்கள் தங்கள் இளமையில் மிக அற்புதமான காரியங்கள் சாதித்திருக்கிறார்கள். அவைகளை அலட்சியப் படுத்திவிட முடியாது என்பதையும் லக்ஷ்மணர்கள் உணரவேண்டும். அவர்கள் போட்ட அஸ்திவாரத்தின் மீதுதான் முன்னேற முடியும்.

பிரிட்டிஷ் ஆதிக்கத்தை விரட்டியடித்த நமது தந்தை, மாமா, சிற்றப்பா முதலியோருடைய மேதையைப் பயன்படுத்திக் கொள்வோம். அவர்களுக்கு நமது உளமார்ந்த வணக்கங்களைச் செலுத்துவோம். நமக்குள்ளிருக்கும் சக்தியைப் பயன்படுத்தித் தேசத்திலுள்ள வறுமையை அகற்றுவோம். நமது முன்னோர்களின் அறிவை வில்லாகவும், நமது இளமைத் துடிப்பை அம்பாகவும் கொண்டு, முயன்றால் மிக உயரத்திலும் தூரத்திலுமுள்ள லட்சியங்களை அடைந்து விடலாம். அப்போது நமது தேசத்தின் முகக் களையே வேறு விதமாக மாறி ஒளிவிடும். அப்பொழுது தான் நமது பெருமிதத்துக்கும், மரியாதைக்கும் உகந்த பாரதமாக நம் நாடு விளங்கும்!



## பம்பாயில் திருமணம்

★

பம்பாய் ஸ்ரீ சி. ஏ. கிருஷ்ணய்யர் அவர்களின் குமாரி சௌ. **விசாலாக்ஷிக்கும்**, ஸ்ரீ எல். எஸ். துரை அவர்களின் குமாரர் சிரஞ்சீவி **ராமச்சந்திரனுக்கும்** சென்ற 20-3-55ல் பம்பாயில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!




## 16. அழகர் கோயில்

மதுரைமா நகரின் அருகே உள்ள மலைகளுள் ஒன்று சிறு மலை; மற்றொன்று பெரு மலை. சிறு மலையிலே சுவையான பழம் உண்டு; பெரு மலையிலே பரமன் அருள் உண்டு.

இந்நாளிலே அழகர் மலை என்றும், சோலைமலை என்றும் பெயர் பெற்றுள்ளது அப்பெருமலை. அம்மலையில் ஒல்லென ஒலித்து மெல்லெனப் பாயும் அழகிய நதியைச் சிலம்பாறு என்று பழந் தமிழிலக்கியம் போற்றுகின்றது. அந்த ஆறு ''பழமுதிர் சோலை''யின் வழியே சென்று அருவியாக வீழ்ந்த அழகினைக் கண்டு அகமகிழ்ந்த நற்றமிழ்ப் புலவர்களில் ஒருவர் நக்கீரர். அவர் பாடிய திருமுருகாற்றுப் படையில்

'' இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழவோனே ''

*(கிழவோன்—உரியவன்; முருகன்)*

என்று சிலம்பாற்றின் அருவியை ஒரு செஞ்சொல் ஓவியமாக எழுதிக் காட்டினார். ஆற்றின் நல்லருவிக்கு நிகரான சொல் அருவி இப் பாட்டைப் படிப்போர் செவிகளில் வந்து பாய்கின்றது. ழகரத்தை நான்கு இடங்களில் நன்கு அமைத்து நல்ல தமிழின்பத்தை ஊட்டுகின்றார் நக்கீரர்.

திருமுருகாற்றுப் படையிலே பாடப் பெற்றுள்ள பழமுதிர் சோலை, முருகப் பெருமானுக்கு உரிய படை வீடுகளில் ஒன்று. அதன் பெருமையைத் திருப்புகழும் பாடிற்று.

'' படையொடு சூரன் மாள
முடுக்கிய சூர தீர!
பழமுதிர் சோலை மேவு பெருமாளே ''

என்பது திருப்புகழ் பாடிய அருணகிரி நாதரின் திருவாக்கு.

''பழமுதிர் சோலைமலை'' என்ற நெடும் பெயர் நாளடைவில் சோலைமலை எனக் குறுகிற்று. வல்லரசனாகிய சூரன் குலத்தை வென்று ஒழித்து வாகை மாலை சூடிய முருகன் சோலைமலையில் நின்று அடியார்க்கு அருள் புரியும் செம்மையை நினைந்து சிந்தை குளிர்ந்தார் அருணகிரியார்.

'' சூர் குலம் வென்று
வாகை யொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே!''

என்று அவர் திருப்புகழ் மாலை சூட்டினார். எனவே, பழமுதிர் சோலை என்னும் பழம் பெயருடைய முருகனது படை வீடே இப்பொழுது சோலைமலை என்று வழங்குகின்றது என்பதில் ஐயமில்லை.

ஆதிகாலத்தில் 'இருங்குன்றம்' என்ற பெயருடையதாய் இருந்தது இம்மலை. இருங்குன்றம் என்ற சொல்லுக்குப் பெரு மலை என்பது பொருள். முன்னாளில் இருங்குன்றம் முதலிய எட்டு மலைகளில் சமண முனிவர்கள் தவச்சாலை யமைத்து வாழ்ந்தார்கள் என்பது அங்குள்ள கல்




லெழுத்துக்களாலும் தேவாரத் திருப்பாசுரங்களாலும் தெளிவாகத் தெரிகின்றது. அச்சணந்தி என்ற பெயருடையவர் அத்தகைய முனிவர்களுள் ஒருவர். நந்தி என்பது சமண முனிவர்களின் சிறப்புப் பெயராக அந்நாளில் வழங்கிற்று. சில நந்திகளின் பெயர் திருஞானசம்பந்தர் தேவாரத்திலே குறிக்கப்பட்டுள்ளன.

"கனக நந்தியும் புட்ப நந்தியும்
பவண நந்தியும் குமணமா
சுனக நந்தியும் குனக நந்தியும்
திவண நந்தியும் மொழி கொளா
அனக நந்தியர் மது வொழிந்து
அவமே தவம் புரிவோம் எனும்
சினகருக்கு எளியேன் அலேன்
திருஆலவாய் அரன் நிற்கவே"

என்ற பாசுரத்திலே பவணநந்தி என்னும் பெயரும் காணப்படுகின்றது. ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னே கொங்கு நாட்டில் வாழ்ந்த சமண முனிவர் ஒருவர் பவணந்தி என்று பெயர் பெற்றிருந்தார். நன்னூல் என்ற இலக்கணம் இயற்றியவர் அவரே. தேவாரத்தில் பவணநந்தி என்று குறிக்கப்பட்டுள்ள பெயர் பிற்காலத்தில் பவணந்தி என மருவியதோ என்பது ஆராய்தற்குரியதாகும்.

இருங்குன்றத்தில் சமண முனிவர்கள் வதிந்து தவம் புரிந்த இடம் இப்போது 'பஞ்ச பாண்டவர் படுக்கை' என்று பொது மக்களால் அழைக்கப்படுகின்றது. அதைச் சென்று காண்பதற்குச் செம்மையான பாதையில்லை. கரடு முரடான கற்களின் இடையே நடந்து, வழுக்குப் பாறைகளின் மீது தவழ்ந்து, இடுக்கு வழிகளைக் கடந்து மலையின் மேலே சென்றால் அருமையான குகை யொன்றைக் காணலாம். செழுமை வாய்ந்த ஆலஞ்சோலையின் நிழலில், சவியுறத் தெளிந்த சுனையின் அருகே அமைந்துள்ள குகை, ஒருமையுடன் இருந்து தவம் புரிவார்க்கு ஏற்ற இடமாகவே தோற்றுகின்றது. அக் குகையின் உள்ளே படுக்கை போல் பல பாறைகள் அமைந்திருத்தலால் அவற்றைப் பஞ்சபாண்டவர் படுக்கை என்று கருதுகின்றனர் பொதுமக்கள்.

கருநிறம் உடைய கண்ணனும் வெண்ணிறம் வாய்ந்த பலராமனும் இருங்குன்றத்தில் ஒருங்கே காட்சி யளித்தனர் என்று பரிபாடல் கூறும். சங்க காலம் என்று சொல்லப்படுகின்ற பழங் காலத்தில் வெள்ளை மூர்த்தியாகிய பலராமனைத் தமிழ்நாடு வழிபட்ட செய்தி சிலப்பதிகாரம் முதலிய நூல்களிலே குறிக்கப்பட்டுள்ளது.

"வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்"

(வால் வளை—வெண்மையான சங்கு, வாலியோன்—வெண்ணிறமுடைய பலராமன்)

காவிரிப்பூம் பட்டினத்திலே காட்சி யளித்தன என்று சிலப்பதிகாரம் பாடிற்று. இருங்குன்றம் என்ற மலையிலும் கருமையும் வெண்மையும் கலந்து நின்ற கடவுட் காட்சியை வியந்து பாடினார் இளம்பெருவழுதி.

"கல்லறை கடலும் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம் வேறு வேறு உருவின் ஒரு
தொழில் இருவர்த்
தாங்கும் நீள்நிலை ஓங்கு இருங்குன்றம்"

என்பது அவர் பாடிய பரிபாட்டு. ஆயினும் காலப் போக்கில் பலராமன் வழிபாடு அருகிற்று. கண்ணன் வழிபாடு பெருகிற்று. சிலப்பதிகாரமே இதற்குச் சான்று.

வடவேங்கட மலையை "நெடியோன் குன்றம்" என்று கூறுதல் போன்று இருங்குன்றத்தைத் "திருமால் குன்றம்" என்று சிலப்பதிகாரம் குறிக்கின்றது. திருமால் வேங்கட மலையில் காட்சி அளித்தல் போலவே இருங்குன்றத்திலும் நின்ற திருக்கோலத்தில் விளங்கும் தன்மையைப் பாடுகின்றார் இளங்கோவடிகள். பயன்

கருதாது வழிபடும் அடியாரது பிறவித் துன்பத்தை ஒழிக்கும் திருமாலின் கருடக் கொடியும் திருவடியும் அழகாக எழுதிக் காட்டப்படுகின்றன.

" மற்றவை நினையாது மலைமிசை நின்றோன்
பொற்பு மரைத்தாள் உள்ளம் பொருந்துமின்
உள்ளம் பொருந்துவிர் ஆயின் மற்றவன்
புள்ளணி நீள்கொடி புணர் நிலை தோன்றும்
தோன்றிய பின் அவன் துணை மலர்த்தாளினை
ஒன்று துயர் கெடுக்கும் "

என்பது சிலப்பதிகாரம். இவ்வாறு வேங்கடம் ஆகிய திருப்பதி மலைக்கும் இருங்குன்றம் ஆகிய சோலைமலைக்கும் நெருங்கிய ஒற்றுமை இருத்தலால் தென் திருப்பதி என்ற பெயரும் சோலைமலைக்கு வழங்கி வருகின்றது.

சோலைமலையில் நின்று அருள் புரியும் திருமாலின் அடியிணை தொழுது அடைக்கலம் புகுந்த அடியார் பலர்.

" கொண்ட மருந்தும் கடைவாய்
வழியுகக் கோழைவந்து
கண்டம் அருந்துயராம் போது
உன்பாதம் கருதறியேன்
வண்டமரும் துளவோனே
தென்சோலை மலைக் கரசே
அண்டம் அருந்தும் பிரானே
இன்றே உன் அடைக்கலமே "

என்று அழகர் அந்தாதி பாடுகின்றது.

" சோலைமலையை ஆளும் அரசே! துளவ மாலை அணிந்த திருமாலே! புலன் ஐந்தும் பொறி கலங்கி, நெறி மயங்கி அறிவு அழிந்து அலமரும் போது உன் திருவடியைத் தஞ்சம் அடையும் வகை அறியேன். ஆதலால், காலன் வருமுன்னே கண் பஞ்சடையுமுன்னே அடியேன் உன் திருவடியில் அடைக்கலம் புகுந்தேன் " என்று மனமுருகித் தொழுகின்றார் திருமாலடியார்.

# படித்துப்பாருங்கள்

## ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னையின் சாதனை

ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னை ராஜ்யத்தில் என்ன என்ன வேலைகள் நடைபெற்று வருகின்றன, எவ்வளவு தூரம் நடந்து முடிந்திருக்கின்றன என்ற விவரங்களை ஒவ்வொருவரும் தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்காகச் சென்னை அரசாங்கச் செய்தி இலாகா "ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னையின் சாதனை" என்ற அருமையான புஸ்தகத்தை வெளியிட்டிருக்கின்றனர்.

இதில் நீர்ப்பாசனம், மின்சார சக்தி, விவசாயம், கால்நடை அபிவிருத்தி, மீன் இலாகா, காடுகள், கைத்தொழில்கள், பால் பண்ணை, கூட்டுறவு, சுகாதாரம், வைத்தியம், கல்வி, ஹரிஜன க்ஷேமங்கள், கிராம அபிவிருத்தி முதலிய துறைகளில் நமது சென்னை சர்க்கார் செய்திருக்கும் அபாரமான சாதனைகளை விவரித்திருக்கின்றனர். ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னை சர்க்காரின் சாதனைகளைப் புள்ளி விவரங்களுடன், இலக்கியச் சுவை குன்றாமல் தயாரித்திருப்பதைப் பாராட்ட வேண்டும்.

## Research in Improved Agriculture

நமது ராஜ்யத்தில் உள்ள விவசாய ஆராய்ச்சிப் பண்ணைகளைப் பற்றிய விவரங்களும், நெல், சோளம், கம்பு, வரகு, பருத்தி, கரும்பு, தென்னை, தக்காளி, வாழை, பப்பாளி, அன்னாசி முதலிய வகைப் பயிர்களைச் செய்யும் விதமும், அவைகளுக்கு என்னென்ன நோய்கள் வரலாம், அப்படி வந்தால் அவைகளை எப்படித் தடுப்பது என்ற விவரங்களையும், ஆராய்ச்சியுடனும், ஏராளமான படங்களுடனும் சிறந்தமுறையில் வெளியிட்டிருக்கின்றனர்.

## Cattle Welfare in Madras State

கால்நடைகளின் அபிவிருத்திக்காகச் சர்க்கார் செய்து வரும் விரிவான ஆராய்ச்சி விவரங்களையும், சென்னை சர்க்காரின் கால்நடைப் பண்ணைகள் இருக்கும் இடங்களையும், அவைகள் செய்து வரும் சாதனைகளையும் விவரமாக இந்த வெளியீட்டில் காண முடிகிறது.

## சென்னை ராஜ்யத்தில் விவசாயமும் மீன்பிடிப்பும்

விவசாய, மீன் துறை வளர்ச்சிக்காகச் சென்னை சர்க்கார் தயாரித்திருக்கும் திட்டங்களை விளக்கும் விவரமான குறிப்புகளுடன் கூடிய சிறந்த வெளியீடு.

ஒவ்வொரு கிராமத்திலும் மாதிரிப் பண்ணைகள் ஏற்படுத்தி, அப் பண்ணைகளில் நிபுணர்களின் மூலம் விவசாயிகளுக்குத் தகவல் கொடுக்க ஏற்பாடுகள் செய்திருப்பதை விவரமாகக் குறிப்பிட்டிருக்கின்றனர்.

கடல், உள்நாட்டு நீர்நிலைகளில் கிடைக்கும் மீன் செல்வத்தை எப்படிப் பயன்படுத்த மீன் இலாகா முயன்று வருகிறார்கள் என்ற ரஸமான குறிப்புகளும், மீன் பிடிக்கும் தொழிலாளர்களுக்குச் சர்க்கார் செய்து வரும் நலன்களும், கிராமத்தின் மீன் வளர்ப்புத் திட்டத்தின்படி மாதிரி மீன் பண்ணை அமைத்து அதைச் செயலாக்கும் திட்டக் குறிப்புகளும் விளக்கப் படங்களுடன் திகழ்கின்றன.

இந்த நான்கு வெளியீடுகளையும் சென்னை சர்க்கார் செய்தி இலாகா வெளியிட்டிருக்கிறது. ஒவ்வொரு வெளியீட்டின் விலையும் அணா இரண்டுதான். இந்த அருமையான வெளியீடுகளை வாங்கிப் பொது மக்கள் பயன் பெறுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# தமிழ் இன்பம்



சொல்லின் செல்வர், பேராசிரியர் திரு ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் இயற்றிய "தமிழ் இன்பம்" என்னும் இலக்கியச் சுவை நூல் மத்திய அரசாங்கத்தாரால் பரிசுக்கு உரியதெனத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஐயாயிரம் ரூபாய் பரிசு வழங்கினார்கள் அல்லவா? அதைக் கொண்டாடுவதற்காகச் சென்னை அண்ணாமலை மன்றத்தில் சென்ற 18உ மாலை மாபெரும் கூட்டம் கூடியிருந்தது. கூட்டத்துக்குச் சென்னை முதல் அமைச்சர் திரு காமராஜ் தலைமை தாங்கினார். இசையரசு திரு எம். எம். தண்டபாணி தேசிகர் கடவுள் வாழ்த்துப் பாட, திரு எஸ். ஏ. பி. அண்ணாமலை வரவேற்புரை நிகழ்த்த, திரு நா. சஞ்சீவி வாழ்த்துச் செய்திகளை வாசிக்க விழா 'ஜாம் ஜாம்' என்று ஆரம்பமாயிற்று.



முதல் அமைச்சர் திரு காமராஜ் பேராசிரியர் திரு சேதுப்பிள்ளை அவர்களுக்குப் பாராட்டுக் குழுவின் சார்பாகத் தமிழ் நாட்டின் கலைமணம் கமழும் முறையில் கோபுரமும், சுவடிகளும் பொறித்துள்ள தங்கப் பதக்கத்தைச் சூட்டி, "தமிழுக்காகவே வாழும் பெரியார்" என்று கூறினார். செட்டிநாட்டரசர் திரு ராஜா ஸர் அவர்கள் பொன்னாடை போர்த்திப் பாராட்டுரை வழங்கினார்.



பிறகு 'கல்கி' ஸ்தாபனத்தின் சார்பாக, 'கல்கி' மானேஜிங் டைரக்டர் திரு சதாசிவம் வழங்கிய பொன்னாடையை, 'கல்கி' ஆசிரியர் திரு சோமு ராஜா ஸர் அவர்களைப் பேராசிரியர் சேதுப் பிள்ளைக்குப் போர்த்தும்படி கேட்டுக் கொண்டார்.

அதன்பின்னர் மந்திரி திரு பக்தவத்ஸலம், திரு டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், திரு ஏ. சீனிவாசராகவன், திரு ஜீ. சுப்பிரமணிய பிள்ளை முதலியவர்கள் பாராட்டுரை வழங்கினார்கள்.



கடைசியில் பேராசிரியர் சேதுப் பிள்ளை மிகுந்த நன்றியுணர்ச்சியுடன் சுருக்கமாக நன்றி கூறித் தமக்குப் பரிசாகக் கிடைத்த ஐயாயிரத்துடன், தம் சொந்தப் பணம் பத்தாயிரத்தையும் சேர்த்துப் பதினையாயிரம் ரூபாயைத் தமிழ் வளர்ச்சிக்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்துக்கு அளிப்பதாகக் கூறினார். முடிவில் தண்டபாணி தேசிகரின் நாட்டு வணக்கப் பாட்டுடன் விழா இனிது முடிந்தது.

# ஆல்பர்ட் ஐன்ஸ்டைன்

[பிரின்ஸ்டனில் ஐன்ஸ்டைனோடு இருந்த ஒருவர் எழுதியது]

விஞ்ஞான உலகத்தில், அவ்வப்பொழுது உத்தம மேதாவிகள் அவதரித்து வருகிறார்கள். விஞ்ஞானிகள் பல விஷயங்களைக் கண்டு பிடித்தாலும், அவைகளின் உட்பொருளை உணராமல், அவ்வப்பொழுது அவதிப்படுவது வழக்கம். அச்சமயத்தில் ஓர் உத்தம விஞ்ஞானி அவதரித்து அவைகளின் உட்பொருளை எடுத்துக் கூறி வந்திருக்கிறார். நியூடன், கெப்ளர், ஆர்க்கிமிடியர், அரிஸ்தாதல் முதலியவர்கள் இத்தகைய மேதாவிகள். இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர் ஐன்ஸ்டைன். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், விஞ்ஞானிகள் மேற்கூறிய அவதியிலகப்பட்டுத் திணறிக் கொண்டிருந்தபோது ஐன்ஸ்டைன் அவதரித்து, 1905-ல் ஒரு புது நியதியை ஸ்தாபித்துப் பல விஷயங்களை ஒன்று கூட்டி விளக்கினார். கடலின் நடுவில் இருப்பவனுக்கு, கடலுக்குக் கரையில்லை என்று தோன்றும். அது போலவே, நமக்கு இப் பிரபஞ்சம் அனந்தம் என்று தோன்றினாலும், 'ரிலேட்டிவிடி' என்னும் நியதியைக் கொண்டு, ஐன்ஸ்டைன் பிரபஞ்சத்துக்குக் கரை கட்டினார். இவரை 'உலகளந்த பெருமான்' என்று கூறுவது தவறாகாது.



ஐன்ஸ்டைன்

காலப் போக்கில் நடைபெற்று வந்த நிகழ்ச்சிகள் அவருக்கு மிகவும் வருத்தத்தைக் கொடுத்தன. ஹிரோஷிமாவில் அணுகுண்டுப் பிரயோகம் செய்தது, அவருக்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. யுத்தம் முடிவான பிறகும் அணு குண்டு உற்பத்தி செய்யப் படுவதைக் கண்டு மிகவும் கவலைப் பட்டார். மறைவதற்குச் சில மாதங்களுக்கு முன்பு 'கணித விஞ்ஞானியாய் இருப்பதைக் காட்டிலும், என் வாழ்க்கையைத் தச்சனாகவோ, கொல்லனாகவோ கழித்திருந்தேனானால் நன்றாயிருந்திருக்கும்' என்று மிகுந்த துக்கத்துடன் கூறினார். இவரை ஒரு ரிஷியாகவே நாம் பாவிக்க வேண்டும்.

ஜெர்மனியில் பிறந்து, அங்கு ஐம்பது வருஷ காலம் வாழ்ந்து, பிறகு, இவர் யூதர் குலத்தவரானபடியால், ஹிட்லரின் ஜெர்மனியில் இடமில்லாமல், அமெரிக்காவில் சரண் புகுந்தார். இருபத்திரண்டு வருஷ காலம், அமெரிக்காவில் பிரின்ஸ்டன் என்னும் நகரத்தில், தானுண்டு, தன் ஆராய்ச்சியுண்டு என்று வானப் பிரஸ்தாசிரமத்தில் வாழ்ந்து, 76ம் வயதில் காலமானார்.

அவருடைய விஞ்ஞானத் தேர்ச்சியைப் பற்றியும், சங்கீதப் பயிற்சியைப் பற்றியும், குழந்தை போன்ற குணங்களைப் பற்றியும் ஒரு புத்தகமே எழுதலாம்.

# கணித உலகிலே மற்றொரு நஷ்டம்

திருக்கண்ணபுரம் விஜயராகவன், ஏப்ரல் மாதம் இருபதாம் தேதி காலமானார். வயது ஐம்பத்திரண்டு. கணித நூலில் பெரும் நிபுணர் ஒருவரைப் பாரத நாடு இழந்தது. அதனுடன் தமிழ் அபிமானி ஒருவரைத் தமிழ்நாடு இழந்து இரட்டிப்பு நஷ்டம் அடைந்தது.

சென்னை பிரசிடென்சி கலாசாலையில் மாணவராயிருந்து, பரீக்ஷை தேறியபின், ஆங்கில நாட்டுக்குச் சென்று, ஆக்ஸ்போர்டில் பேராசிரியர் ஹார்டியுடன் கணித நூல் ஆராய்ச்சியில் ஈடுபட்டு, கணித சாஸ்திரத்தின் ஒரு முக்கிய பகுதியில் புகழ் பெற்றார். பிறகு இந்தியாவில் அண்ணாமலை நகர், அலிகர், டாக்கா, வால்டேர் முதலிய இடங்களில் ஆசிரியராயிருந்து, 1950-ல் சென்னைக்குத் திரும்பினார். அவருடைய முயற்சியினாலும் டாக்டர் அளகப்பச் செட்டியாரின் நன்கொடையினாலும் கணித மேதை ராமானுஜம் நினைவுக் கழகத்தைச் சென்னையில் ஸ்தாபித்து, அவரே தலைமை ஆசிரியராயிருந்து வந்தார். திடீர் என்று ஏப்ரல் 20உ காலமானார். இருபது ஆண்டுகளாக சம்பாஷணையில் ஆங்கிலம் கலக்காத தமிழிலேயே பேசி வந்தார். தமிழ் மொழியில் மிக்க உணர்ச்சி கொண்டவர். அவருடைய நண்பர்கள் அவருடைய பேச்சை என்றும் மறவார்.



விஜயராகவன்

கோடையின் வேகமா?

வெய்யிலின் தாபமா?

★

டாக்டர் கேஸரியின்

பிரசித்தி பெற்ற

# பிருங்காமலக

# தைலம்

கண்களின் எரிச்சலைப் போக்கி மூளைக்கு குளிர்ச்சி யளிக்கிறது.

கறுத்து அடர்ந்த கூந்தலை நீண்டு வளரவும் செய்கிறது.

மேலும் சிரசு சம்பந்தமான சகல வியாதிகளையும் கண்டிக்கிறது.

★

6 அவுன்ஸ் புட்டி

விலை ரூ. 2-0-0

(பாக்கிங், தபால் கூலி பிரத்தியேகம்)

★

## கேஸரி குடீரம் லிட்.

(கியாதி பெற்ற "லோத்ரா" தயாரிப்பாளர்)

ராயப்பேட்டை — சென்னை-14



Godrej ரிஜிஸ்டர்டு

# கோத்ரெஜ்

# டம்ளர்

பாட்லாக்

ஆணியால் இறுக்கப்படாத தயாரிப்பு

கலவை உலோகங்களால் தயாரிக்கப் பட்டது. அதன் எஃகினுலான பூட்டு வளையத்திற்கு துருவை எதிர்ப்பதற்காக "காட்மியம் - பிளேடிங்" கொடுக்கப் பட்டிருக்கின்றது.

ரூ. 3-4 மாத்திரம் (வரிகள் தனி)

கோத்ரெஜ் அண்டு பாய்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி லிட்.
ஸ்தாபிதம்: 1897

பாதுகாப்புச் சாதனங்கள், வீடு, ஆபீஸ், ஆஸ்பத்திரிக்கான எஃகு பர்னிச்சர், எஃகு ஜன்னல்கள்



# எட்டாவது குழந்தை

நீலமணி

பார்வதி, அந்தக் கடிதத்தை எத்தனை முறை படித்திருப்பாள் என்பது அவளுக்கே தெரியாது. கண்களிலே ததும்பிக் கொண்டிருந்த கண்ணீர் பார்வைக்குத் திரை போட்டுத் தடுத்தது. மையினால் மெழுகியது போல் காட்சியளித்த அக் கடிதம் உணர்ச்சியற்ற மோன நிலையிலிருந்த அவளது தளிர்க் கரங்களினின்றும் நழுவிக் கீழே விழுந்தது.

பார்வதியின் இரு விழிகளினின்றும் வாய்க்கால் மாதிரி வழிந்தோடிக் கொண்டிருக்கும் கண்ணீரைக் காணச் சகிக்காதவள் போல் கோடி வீட்டுப் பாட்டி, "என்னடீ சமாசாரம்! அதிலே அப்படி என்னதான் எழுதியிருக்கிறது!" என்று கவலையுடன் கேட்டுக் கொண்டே பின்கட்டை அடைந்தாள்.

பாட்டிக்கு அந்தத் தெருவிலேயே பார்வதி ஒருத்தியைத் தவிர வேறு யாரையும் பிடிக்காது; அத்துடன் வேறு ஒருவரும் பாட்டிக்குப் பார்வதியைப் போல் அத்தனை ஆதரவு காட்டவும் மாட்டார்கள். ஆனால் பார்வதி அப்போதிருந்த மன நிலையில் பாட்டிக்குப் பதில் கூறக் கூட நாவெழவில்லை.

தாங்க முடியாத ஒருவித பாரம் அவள் உள்ளத்தை அழுத்திக் கொண்டிருந்தது. சோகத்தின் இரும்புப் பிடிகளிலே சிக்கி, சிந்தனைச் சிறகுகளின் மீது அமர்ந்து விட்ட பார்வதியை, அவை எங்கெல்லாமோ, தன் மனம் போனபடியெல்லாம் இழுத்துச் சென்று கொண்டிருந்தன.

தனக்கு விவாகமான இந்தப் பதினைந்து வருட இடைக் காலத்துக்குள் அவள் உள்ளமும் ஒவ்வொரு கணமும், ஒரு குழந்தைக்காகத்தான் ஏங்கித் துடித்துக் கொண்டிருந்தது. ஆனால் விரும்புகிறவர்களை விட்டு, வேண்டாதவர்களுக்குத் தானே, தெய்வம் அள்ளி அள்ளிக் கொடுக்கிறது!

அடுக்கடுக்காய் ஆணும் பெண்ணுமாக ஏழு குழந்தைகளையுடைய பார்வதியின் நாத்தனார் சாவித்திரி, இப்போதும் கர்ப்பிணியாக இருப்பதாகத்தான் அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது. காலட்சேபத்துக்கே கையைப் பிடிக்கும் அந்தக் குடும்பத்துக்குத் தேவையான பொருட்செல்வத்தை இறைவன் அளிக்காவிடினும், மக்கட் செல்வத்தை மட்டும், வற்றாது அளித்துக் கொண்டுதான் வருகிறான்.

ஆனால் வற்றாத செல்வமும், சுக போகங்களும் இருந்தும் கூட, பார்வதியின் பிள்ளைக் கலி தீர்க்க, ஆசைக்கு அவளை "அம்மா" வென்று அழைக்க, பெயருக்கு ஒரு பிள்ளையை அவளுக்குப் பிச்சை போட இறைவன் மனம் இளகவில்லை. இதை நினைக்கும் பொழுதுதான் அவளுக்கு வாழ்க்கையே ஒரு வறண்ட பாலைவனமாகக் காட்சியளித்தது.

* * *

கசப்பான மருந்தை மென்று விழுங்குவது போல், பார்வதி விரட்டி விரட்டி அடித்துக் கொண்டு வந்த வேதனை நிரம்பிய நாட்களுக்கு மத்தியில்தான், ஆண்டவன், சில இன்ப இதழ்களையும் அவள் முன் தூவினான். கடவுளது கருணைப் பார்வைக்குச் சங்கரய்யர் தம்பதிகள் இலக்கானார்கள்.

தன் மனைவி இரண்டு மாதங்களாகக் குளிக்காமல் இருக்கிறாள் என்கிற செய்தி சங்கரய்யரை எல்லையற்ற மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. தான் எடுத்த பிறவியின் பயன் இனிமேல்தான் எட்டப்போவதாக அவர் உள்ளம் மகிழ்ந்தார்.

பார்வதியின் ஆனந்தம் அளவுகடந்து நின்றது. எந்த ஒருவித ஆசைத் தீயில், அவளுடைய உடலும் உள்ளமும் வெந்து சாம்பலாகிக் கொண்டு வந்ததோ, அந்த மகத்தான பேராசை அவளுக்கு நிறைவேறப் போகிறது. ஊரிலுள்ள எல்லாப் பெண்களைப்போல் இனிமேல் அவளாலும் தலை நிமிர்ந்து நடக்க முடியும். எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு இப்பொழுதுதானே, அவளது வாழ்க்கைச் செடி அரும்பு விட்டிருக்கிறது! இப்போது அவளது மனம், மலரைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியது.

தன் சக பெண்கள் மத்தியில், தானும் மணமான புதுப் பெண்ணைப் போல் உட்கார்ந்து கொண்டு, முழங்கை வரை விதம் விதமான வளையல்களை அணிந்து கொள்ளப் போகும் இன்பக் காட்சி, அவள் முன் வந்து நின்றது. தவழ்ந்து ரீக்கும், தன் செல்வக் குழந்தையையும், 'அம்மா' வென்று துள்ளி ஓடி வரும் பாலகனையும், வாரி அணைத்து மகிழப்போகும் தன்னை அவள் மனம் கற்பனை செய்து பார்த்துக் களித்தது.

இந்தச் சமயத்தில்தான் சங்கரய்யருக்கு அவருடைய சகோதரியிடமிருந்து மற்றொரு கடிதம் வந்தது. அப்போது சாவித்திரிக்கு ஆறாவது மாதம். மிகுந்த கவலையுடன் கடிதத்தைப் பிரித்தார் சங்கரய்யர். அதில் பின் வருமாறு எழுதி யிருந்தது.

அன்புள்ள அண்ணாவுக்கு,
சாவித்திரி நமஸ்காரம்.

அவர் எழுதின முன் கடிதம் உங்களுக்குக் கிடைத்திருக்கலாம் என எண்ணுகிறேன். ஆனால் அதற்குத் தங்களிடமிருந்து இன்று வரை எவ்வித பதிலும் வரவில்லை. நாளுக்கு நாள் என்னுடைய உடம்பு மிகவும் பலஹீனமாய்க் கொண்டு வருகிறது. இந்தப் பிரசவம் என்னை மிகவும் படுத்திவிடும் போலிருக்கிறது. டாக்டரிடம் காண்பித்ததில் நல்ல உயர்ந்த டானிக்குகள் வாங்கிச் சாப்பிட வேண்டுமென்று எழுதிக் கொடுத்து விட்டார். இதுவரைக்கும் ஏற்பட்ட வைத்தியச் செலவையே அவரால் சமாளிக்க முடியவில்லை. இன்னும் குறை மாதங்களையும் எப்படி ஓட்டப் போகிறேன் என்றே எனக்குத் தோன்றவில்லை.

இனிமேல் ஒன்றுக்கும் உங்களைத் தொந்தரவு செய்யக் கூடாது என்று உங்கள் மாப்பிள்ளை கண்டிப்பாய்க் கூறி விட்டார். இந்தக் கடிதம் கூட நான் அவருக்குத் தெரியாமல் தான் எழுதியிருக்கிறேன். என்னால் உங்களுக்கு எப்பொழுதும் துன்பம் தான். ஆனால் என் துக்கத்தைப் பிறருடன் பகிர்ந்து கொள்ள, தங்களைத் தவிர எனக்கு இவ்வுலகில் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. அதனாலேயே துணிந்து எழுதினேன். இத்துடன், டாக்டரின் மருந்துச் சீட்டுக்களையும் வைத்து அனுப்பியிருக்கிறேன்.

கூடிய சீக்கிரம் உங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். மன்னிக்கு என்னுடைய நமஸ்காரங்களைச் சொல்லவும்.

சாவித்திரி

இந்தக் கடிதத்தின் சமாசாரம் பாட்டிக்கும் தெரியவே, ஒரு நாள் இதைப் பற்றிச் சாவகாசமாகப் பேச்சை ஆரம்பித்தாள் பாட்டி.

"பார்வதி! உன் நாத்தனாருக்கு இது எட்டாவது பிரசவம்தானே!"

"ஆமாம்!" என்றாள் பார்வதி, அடக்கமாக.

ஆனால் அதைக் கேட்டு விட்டு, "ஊம்!..." என்று ருள் கொட்டி ஒரு நீண்ட பெருமூச்சையும் விட்டாள் பாட்டி.

பாட்டியின் அபிநயங்களினால் பீதியடைந்த பார்வதி, "ஏன் பாட்டி அப்படிக் கேட்டீர்கள்!" என்றாள் படபடப்புடன்.

"ஒன்றுமில்லையடியம்மா, சும்மாதான் கேட்டேன். நான் ஏன் அதைச் சொல்லவேண்டும்!" என்று பாதி கூறியும் கூறாமலும் மழுப்பிப் பார்வதியின் ஆவலையும் கலக்கத்தையும் அதிகப்படுத்தி விட்டாள். பார்வதி, பாட்டியை இலேசில் விடவில்லை. ஆனால் அதற்குப் பாட்டி கூறிய பதிலைக் கேட்டபோது அவளுக்கு இந்தப் பிரபஞ்சமே பூகம்பத்தினால் கிடு கிடு வென்று ஆடுவது போல் தோன்றியது.

"எட்டாவது குழந்தை தாய் மாமனுக்கு ஆகாது" என்கிற பாட்டியின் தத்துவம் நிறைந்த வார்த்தைகளே அவள் திரும்பும் திசைகளிலெல்லாம் பேரிடிபோல் முழங்கிக் கொண்டிருந்தன.

தன்னையும், பிறக்கப்போகும் தன் குழந்தையையும் விட்டுத் தன் கணவனைப் பிரித்துச்



செல்ல ஏதோ ஒரு சக்தி காத்திருப்பது போன்றதொரு பீதி அவள் இதயத்தை இறுகக் கவ்விக் கொண்டது.

அமைதியாயிருந்த பார்வதியின் உள்ளத் தடாகத்தில் ஒரு சிறு கல்லைத் தூக்கி எறிந்து, அவள் மனத்தில் எண்ணற்ற எண்ண அலைகளைத் தட்டி எழுப்பி விட்டாள் பாட்டி. ஆனால் ஆழம் காண முடியாத துயரக் கடலின் அடிவாரத்தை நோக்கி அமிழ்ந்து கொண்டிருக்கும் பார்வதிக்கு, பாட்டி 'சட்'டென்று தன்னுடைய சில அபூர்வமான யோசனைகளைக் கூறி, அவள் மனத்தைத் தேற்றி விட்டாள்.

* * *

மறு நாள் மஹாதானபுரத்துக்குப் போக வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டு, தன் சகோதரிக்கு வாங்கிவந்த மருந்துகளையும் மனைவியின் கையில் ஒப்புவித்துவிட்டு, சங்கரய்யர் அவசர வேலையாக வெளியே சென்று விட்டார். ஆனால் அதைத் தொடர்ந்து பாட்டியும் அங்கு வந்து விடவே பார்வதியின் சந்தோஷம் அளவு மீறியது.

"கொண்டு வந்து விட்டீர்களா, பாட்டி!" என்றாள் பார்வதி தாங்கமுடியாத ஆவலுடன்.

"இதோ!" என்று கூறிக்கொண்டே, தன் தளர்ந்த இடுப்பைத் துழாவி ஒரு பொட்டலத்தை எடுத்துப் பார்வதியிடம் நீட்டினாள். அதைப் பிரித்துப் பார்த்த பார்வதியின் கண்கள் அகல விரிந்தன.

"என் பாட்டி! இது பெரிய உயிருக்கு ஒன்றும் கெடுதல் செய்து விடாதே!" என்று கேட்கும்போது பார்வதியின் குரலிலே கலக்கம் கலந்து தொனித்தது.

"போடி, அசடே! தத்துப் பித்துன்னு ஒன்றும் உளறாதே, அப்படியிருந்தால் நான் கொடுப்பேனா!" என்றாள் பாட்டி, சற்று கண்டிப்புடன். அதற்குமேல் பாட்டியிடம் விவாதிக்கவும் பார்வதிக்கு இஷ்டமில்லை. கணவன் வருவதற்குள் காரியத்தை முடித்துவிட வேண்டுமென்று அவள் உள்ளம் பறந்தது.

கணவன் கொடுத்து விட்டுப்போன மருந்துப் பொட்டலத்தைப் பிரித்தாள் பார்வதி. அப்போது அவளது கைகள் நடுங்கின. மன்னிக்க முடியாத குற்றம் ஒன்றைத் தான் செய்யப் போவதாக அவள் மனச்சாட்சி குத்திக் காட்டியது. ஆனால் அதில் அவள் உள்ளம் தளரவில்லை. "ஏழு குழந்தைகளையுடைய அவர்களுக்கு இந்தக் குழந்தை போனால் குடி ஒன்றும் முழுகி விடாது. ஆனால் அது பிறந்து...என் கணவருக்கு ஒரு விபத்து ஏற்பட்டு விட்டால்......" என்று எண்ணிப் பார்த்ததும், அவள் இதயம் கல்லாகி விட்டது.

இயந்திரத்தினால் இயக்கப்பட்டவள் போல் பொட்டலத்திலிருந்த மாத்திரைச் சீசா ஒன்றை எடுத்தாள். அந்த மாத்திரைகளைக் கொட்டி விட்டு, அதே பாட்டிலில், பாட்டி கொடுத்த சாம்பல் நிற மாத்திரைகளைப் போட்டு நிரப்பி, முன்போல் வைத்து விட்டாள்.

அன்றிரவு முழுவதும் பார்வதி தூங்கவேயில்லை. 'தான் செய்திருக்கும் துரோகச் செயல், வெளிப்பட்டு விட்டால்...!' என்று நினைக்கும் போது அவளுக்கு மூச்சே நின்றுவிடும் போல் தோன்றியது.

பொழுது விடிந்ததும் சங்கரய்யர், தன் மனைவியிடம் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளும்படி, பலமுறை எச்சரித்து, தான் வரும்வரை பாட்டியையும் துணைக்கு ஏற்பாடு செய்து விட்டு மருந்துகளுடன் மஹாதானபுரம் புறப்பட்டுச் சென்று விட்டார்.

* * *

காலவெள்ளம், தன் கடமையை, வழுவாது செய்த வண்ணம் சென்று கொண்டே தானிருந்தது. இதற்குள் சங்கரய்யர் இருமுறை தன் சகோதரியைச் சென்று கண்டு வந்து விட்டார். ஆனால் அந்த இடைக் காலம் முழுவதும் பார்வதி மட்டும் ஏதோ பிரமை பிடித்தவள் போலவே இருந்து வந்தாள். செய்யத் தகாத ஒரு பெரும் குற்றத்தைச் செய்து விட்டதாக அவளது உள்ளுணர்வு அவளை வேதனைப் படுத்தியவாறிருந்தது.

கணவன் படுக்கச் சென்று வெகு நேரமாகியும் பார்வதி மாத்திரம் மேல் மாடியில் நின்ற வண்ணம் ஆகாயத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்த வண்ணமிருந்தாள்.

பால் நிலவு, தேய்ந்த நிலவான விந்தையை அனுபவித்துக் கொண்டிருந்த பார்வதி மறுகணம் திடுக்கிட்டு விட்டாள். தெற்குக் கோடியிலிருந்த, நட்சத்திரக் கூட்டங்களிலிருந்து ஒரு நட்சத்திரம், பூமியை நோக்கிப் பாய்வதைக் கண்டவுடன், தாங்க முடியாத ஒருவித அச்சம் அவள் உள்ளத்தை ஆக்ரமித்து விட்டது. 'நாம் ஏன், மாடிக்கு வந்தோம்!' என்றாகி விட்டது அவளுக்கு. விடுவிடுவென்று தன் படுக்கையை அடைந்தாள்.

அன்று காலையிலிருந்தே அவள் மனம் ஒரு நிலையிலில்லை. "இரண்டு மூன்று நாட்களாகவே, வலி எடுத்துத் தாங்க முடியாமல் சாவித்திரி மிகவும் அவஸ்தைப்பட்டாள். ஆனால், ஆயுதத்தினால் எடுக்க வேண்டி வந்த குழந்தை செத்துத்தான் பிறந்தது. அவளுடைய நிலைமையே மிகவும் கவலைக்கிடமாய்த்தானிருக்கிறது. ஆனால் இந்த நிலைமையிலும், அவள் எப்பொழுதும், தன்னுடைய மன்னியின் நினைவாகவே யிருக்கிறாள்.

"டாக்டர் இரண்டு மாதம் பூரண ஓய்வு எடுத்துக் கொள்ளா விட்டால் உயிருக்கே ஆபத்து என்கிறார். ஆனால் அவள் ஒரே பிடிவாதமாக, இத்தனை வருஷங்களுக்குப் பிறகு வந்திருக்கும் மன்னியின் சீமந்தத்துக்கு, செத்தாலும் நான் அங்கு போய்த்தான் ஆக வேண்டுமென்கிறாள்" என்று சாவித்திரியின் கணவர் எழுதியிருந்தார். அதைப் படித்து விட்டு, தன் கணவன், புலம்பி அழுவதைப் பார்வதியினால், பார்க்கச் சகிக்கவில்லை. இத்தனைக்கும், தானே தான் காரணம் என்று அவள் மனம் குத்திக் காட்டியது.

பைத்தியம் பிடித்தவள் போல் விடு விடு என்று மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தாள் பார்வதி. உள்ளத்திலே ஒரு விஷ வித்து விழுந்து விட்டால், அது எத்தனை சீக்கிரம் தான், எங்கெல்லாம் வேர் விட்டு வியாபித்து விடுகிறது!

"நட்சத்திரம் விழுவதைப் பார்ப்பது அபசகுனம் என்பார்களே—" இதே கேள்வி திரும்பத் திரும்ப எழுந்து மிதந்து கொண்டிருந்தது. தன் தீய செய்கையினால், நமன் வாயிலை நோக்கி நடந்து கொண்டிருக்கும், சாவித்திரியின் உயி

ருக்கும் ஏதாவது...... அதற்கு மேல் அவளால் எண்ணிப் பார்க்கக் கூட முடியவில்லை. கட்டிலில் முகத்தைப் புதைத்துக் கொண்டு, சிறு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழுதாள் பார்வதி.

அன்றிரவு முழுவதும் பார்வதி தூங்காமல் புரண்டு கொண்டிருந்தாள். சிந்தனைத் தீக்கு இரையாகி, அதிலே வெந்து சாம்பலாகிக் கொண்டு வந்த பார்வதியின் அகக்கண் முன்பு, சாவித்திரியின் அன்புருவமும், இறந்துபோன அவளது குழந்தையும், விஸ்வரூபம் எடுத்து நின்றன. அந்தப் பயங்கரக் காட்சியை அவளால் பார்க்க முடியவில்லை.

“மன்னி! நாங்கள் ஏழை, கேட்பாரில்லை என்பதால் தானே, உங்கள் சுயநலத்துக்காக, என் குழந்தையைப் பலியிட்டு விட்டீர்கள்! என் வயிற்றில் பிறக்கும் இந்தக் குழந்தையின் மூலம்தான் உங்கள் கணவருக்கு ஒன்று ஏற்பட வேண்டுமென்று எங்காவது சட்டம் இருக்கிறதா! உலகத்தில் எத்தனையோ குழந்தைகள், பெற்றோருக்கே ஆகாமல் பிறப்பதில்லையா! இப்போது உங்கள் வயிற்றில் பிறக்கும் குழந்தையே, என் அண்ணாவுக்கு ஆகாது; ஏதோ தோஷமிருக்கிறது என்று ஏற்பட்டு விட்டால் அப்போது நீங்கள் என்ன செய்வீர்கள்!” — சாவித்திரி புலம்பினாள்.

காலனே தன்முன் தோன்றிப் பழி வாங்க வந்து விட்டாற் போல்தான் பார்வதியின் உடல் பதறியது. ஆனால் அதைத் தொடர்ந்து அரைத் தூக்கத்திலிருந்த பார்வதிக்கு யாரோ தன்னை, “அம்மா, அம்மா!” என்று ஈனஸ்வரத்தில் கெஞ்சிக் கூப்பிடுவது போலிருந்தது.

அவள் தன்னையுமறியாமல் ‘ஏன்!’ என்றாள்.

உருவம் தெரியாத அந்தக் குரல் மீண்டும் பெரிய குரலில் பேசிற்று:

“அம்மா! அந்தப் பாட்டிக்கிட்டே மாத்திரை வாங்கிச் சாப்பிட்டு, என்னையும் கொன்னுப்பிடுவியா, அம்மா! என்னைக் கொல்லாதே, அம்மா!” என்று மிகவும் பரிதாபமாகக் கெஞ்சிற்று அந்தக் குரல்.

ஆவேசம் வந்தவளைப் போல் சட்டென்று தன் இரு கைகளாலும், வயிற்றை அணைத்துக் கொண்டாள் பார்வதி. அவளது கண்களிலே கண்ணீர் ஆறாகப் பெருகிக் கொண்டிருந்தது.

“மாட்டேன்டா, கண்ணு! நிச்சயமாக மாட்டேன். உன் அம்மா அவ்வளவு கொடிய பாவி இல்லேடா கண்ணு! அவள் அவ்வளவு கொடிய பாவி இல்லை!” என்று தன்னையுமறியாது அலறி விட்டாள்.

அந்தச் சத்தத்திலே திடுக்கிட்டு விழித்துக் கொண்ட சங்கரய்யர் சட்டென்று தம் மனைவியின் பக்கம் திரும்பினார். அந்த மங்கலான விளக்கின் ஒளியில், பேயறைந்தது போல் ஒரேயடியாக வெளிறிப் போயிருந்த தம் அன்பு மனைவியின் முகத்தைக் கண்டதும் அவர் ஒரு கணம் நடுங்கி விட்டார். காரணம் தெரியாத ஒருவித திகில், கண நேரத்துக்குள் அவரை அடிமை கொண்டு விட்டது.

தெப்பக் குளமாக உடல் முழுவதும், வியர்த்து நனைந்திருந்த பார்வதியை இமை கொட்டாமல் பார்த்தார். வார்த்தைகள் அவரது உள்ளத்திலேயே தடுமாறின.

“ஏன் இப்படி உன் உடம்பு நடுங்குகிறது, பார்வதி! என்ன உளறுறாய்! தூக்கத்தில் சொப்பனம் கண்டு பயந்து விட்டாயா!” என்றார் கவலை தோய்ந்த குரலில். ஆனால் பார்வதி பதிலே பேசவில்லை. அவளது விழிகள் மட்டும் கண்ணீரைக் கசிந்தவண்ணமிருந்தன.

“பார்வதி, ஏன் இப்படிப் பார்க்கிறாய்! துர்ச் சொப்பனம் ஏதாவது கண்டு பயந்து விட்டாயா!” என்று மீண்டும் வந்த அவள் கணவனது அன்பு நிறைந்த குரல் அவள் சிந்தனையைத் தடுத்து நிறுத்தியது.

“ஆமாம். சொப்பனம்தான் கண்டேன். நான் நினைவில் செய்த தீவினையெல்லாம் என்னை அந்த உருவத்தில்தான் பயமுறுத்துகிறது. நீங்கள் முதலில் என்னை மன்னிப்பதாக வாக்களியுங்கள். அப்போதுதான் என் மனம் சாந்தியடையும்” என்று பேசிக் கொண்டே வந்தவள் தாங்க முடியாத துக்கத்தினால் ‘ஓ’ என்று அழுது விட்டாள். சங்கரய்யர் ஒன்றும் புரியாமல் திகைத்தார்.

“பார்வதி, இதெல்லாம் என்ன! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே! நீ என்ன செய்து விட்டாய், நான் உன்னை மன்னிப்பதற்கு! சரி. நிச்சயமாக நீ எங்கேயோ பயந்துதான்

---

திரு ஆர். எம். சுந்தரம் F. F. C. S. (Eng) வியாபார நிமித்தம் இங்கிலாந்திலும் மேல் நாடுகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்ய, சென்ற ஏப்ரல் 11ல் பம்பாயை விட்டுப் புறப்பட்டார். அமால்கமேட்ட் கெமிகல்ஸ் அண்டு டைஸ்டப்ஸ் கம்பெனிக்கும், கிகி இன்ஸெக்டிஸைட் கம்பெனிக்கும் காரியதரிசியாக இருந்து பணியாற்றி வரும் திரு ஆர். எம். சுந்தரம் தொழில் துறையிலும், வியாபாரத் துறையிலும் மேல் நாடுகளில் எப்படி நிர்வாகம் நடத்தப்படுகிறது என்பதை நேர்முகமாகப் பார்த்து அறிந்து வரச் செல்கிறார். அவர் பிரயாணம் பயனுடையதாகுக!



இருக்கிறாய்! பேசாமல் முருகனை நினைத்துக் கொண்டு படுத்துக் கொள். பொழுது விடியட்டும், பார்த்துக் கொள்ளலாம். ஒன்றும் உளறாதே!" என்றார். ஆனால் அதை இடைமறித்துப் பார்வதி தொடர்ந்து பேசினாள்:

"நான் உளற வில்லை. உண்மையைத்தான் சொல்லுகிறேன். அதைக் கேட்டால் நீங்கள் என்னை மன்னிக்கக்கூட மாட்டீர்கள். ஆமாம்! யாருமே என்னை மன்னிக்கத்தான் மாட்டார்கள். சாவித்திரியின் குழந்தையைக் கொன்று அவளை இக்கதிக்குள்ளாக்கியது நான் தான். இல்லாவிட்டால் அவள் குழந்தை உயிருடனேயே பிறந்திருக்கும்" என்று பார்வதி பேசிக்கொண்டுவரும்போதே சங்கரய்யர் இடைமறித்து, "என்ன சொல்லுகிறாய், பார்வதி!" என்றார் கலக்கமும், கலவரமும் கலந்த குரலில்.

"ஆம்! உங்கள் சகோதரியின் இந்தக் குழந்தைக்கு நானேதான் எமனாக வாய்த்தேன். 'எட்டாவது குழந்தை தாய் மாமனுக்கு ஆகாது' என்று பாட்டி சொன்னாள். அப்போது நானும் கர்ப்பிணியாக இருந்தேன். இத்தனை நாட்களுக்குப் பிறகு பகலிலே தெரியும் பிறை போல் அபூர்வமாக நமக்குக் குழந்தை பிறக்கும் போது அதைக் கண்டு களிக்க வேண்டிய உங்களுக்கு அக்குழந்தையினால் ஏதாவது ஏற்பட்டு விட்டால்!—என்கிற பயம் என்னைக் கவ்விக் கொண்டு விட்டது. என்னுடைய இந்த மனக்குறையைத் தவிர்க்க, கைகேயிக்கு வாய்த்த கூனியைப் போல் பாட்டி எனக்குப் பூரண உதவி செய்தாள். நீங்கள் வாங்கி வந்த மாத்திரைகளைக் கொட்டி விட்டு, அதில் குழந்தையை அழித்து விடும் சில மாத்திரைகளை நிரப்பி உங்களிடம் கொடுத்து விட்டேன். நீங்களும் அதைச் சாவித்திரிக்குக் கொடுத்து விட்டீர்கள்" என்று சொல்லிக் கொண்டு வரும்போதே மேலே பேச முடியாமல் வார்த்தைகள் தடுமாறின.

அத்தனையையும் நிதானமாகக் கேட்டுக் கொண்டிருந்த சங்கரய்யர், கலங்கியிருந்த தன் இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுத் தம்மை ஒரு கணம் நிதானம் செய்து கொண்டார்.

சோகமே உருவெடுத்தாற் போல் ஏங்கி நிற்கும் தன் அருமை மனைவியை அணைத்த வண்ணம், "பார்வதி, நீ குற்றவாளியல்ல. உன்னையும் என்னையும் அந்தப் பெரும் பாவத்தினின்று ஆண்டவன்தான் காப்பாற்றியிருக்கிறார்" என்றார், அமைதியாக.

"ஆ" வென்று அலறினாள் பார்வதி தன்னையும் மீறிப் போய்.

"ஆமாம்! நீ மாத்திரைகளை மாற்றியது ஒன்றுமே எனக்குத் தெரியாது. அதைச் சாப்பிட்டிருந்தால் சாவித்திரியின் கதி என்னவாகியிருக்குமோ அதுவும் எனக்குத் தெரியாது..." என்று அவர் சொல்லிக் கொண்டு வரும் போதே, பார்வதி இடைமறித்து, "அப்போது அந்த மாத்திரைகள்!" என்று படபடப்புடன் அவரைக் கேட்டாள்.

"இரு! அவசரப்படாமல் கேள். உன்னிடமிருந்து நான் வாங்கிச் சென்ற மருந்துப் பையை அப்படியே ரயிலில் வைத்து விட்டு மறந்து இறங்கி விட்டேன். நடுரோடு, வண்டியில் பாதி வழி வந்த பிறகுதான் எனக்கு மருந்துப் பையின் நினைவு வந்தது. ஆனால் நல்ல வேளையாக மருந்துச் சீட்டு மாத்திரம் என் பையில் இருந்ததினால், என் மானம் பிழைத்தது. போகிற வழியிலேயே கடையில், மறுபடியும் அத்தனை மருந்துகளையும் வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போய் விட்டேன்.

"முப்பது ரூபாய் கையை விட்டுப் போனாலும், பரிகாசத்துக்கிடமான, என்னுடைய இந்த ஞாபக மறதி வேறு யாருக்கும் தெரிய வேண்டாம் என்றே, நான், இதை உன்னிடம் கூடச் சொல்லவில்லை. இப்போதாவது ஒப்புக் கொள்கிறாயா, நீ நிரபராதி என்று" எனச் செல்லமாகக் கூறிக் கொண்டே தம் மனைவியின் கன்னங்களைத் தட்டினார் சங்கரய்யர்.

நீண்ட பெரு மழைக்குப் பிறகு காணப்படும் நிர்மலமான ஆகாயத்தைப் போல், பார்வதிக்கும், தன் உள்ளத்தை அழுத்திக் கொண்டிருக்கும் பாரம் நீங்கிப் பூரண அமைதி ஏற்பட்டது.

இயற்கையாக நேர்ந்த இந்த மரணத்துக்கு, தங்கள் பேரில் பழி வராமல் தடுக்க, தான் வணங்கும் தெய்வம்தான், தன்னுடைய கணவருக்குத் தக்க சமயத்தில் ஞாபகமறதியைக் கொடுத்துக் காப்பாற்றியதாக அவள் உள்ளம் அவளுக்குச் சொல்லிக் கொண்டிருந்தது.

நோய் வாய்ப்பட்டிருக்கும் சாவித்திரியின் ஆசையை நிறைவேற்றும் பொருட்டும், தன் மனைவியின் விருப்பப்படியும், பார்வதியின் சீமந்தத்தையும், பிரசவத்தையும், சாவித்திரியின் வீட்டிலேயே நடத்துவதற்குச் சங்கரய்யர் தம்முடைய சம்மதத்தைத் தெரிவித்தார்.

## சிறுவர்கள் சித்திரப் போட்டியில் ஒரு மாறுதல்

நம் சிறுவர்கள் சித்திரப் போட்டிக்குத் தினம் நூற்றுக்கணக்கான சிறுவர்களும் சிறுமிகளும் சித்திரம் வரைந்து அனுப்பிய வண்ணம் இருக்கிறார்கள். ஒவ்வொரு சித்திரமும் அவர்கள் கலையுள்ளத்தைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது. இவற்றைப் பார்க்கும் போது எது சிறந்த சித்திரம், எது சாமான்ய சித்திரம் என்று பாகுபாடு செய்வதே கஷ்டமாகப் போய் விடுகிறது. ஆகவே முன்னர் அறிவித்திருந்தபடி முதல் பரிசு இரண்டாம் பரிசு என்று பரிசுகளைப் பிரித்து வழங்காமல், 'கல்கி'யில் சிறுவர் சித்திரப் போட்டிப் பகுதியில் பிரசுரிக்கப்படும் எல்லாச் சிறுவர் சித்திரங்களுக்கும் ரூ. 5 வீதம் பரிசு வழங்கத் தீர்மானித்து விட்டோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். சிறுவர்களின் கலை ஆர்வம் நாள்தோறும் வளர்ந்து ஓங்குக!

—ஆசிரியர்

## அலையலையான மடிப்புகளுடன் உங்கள் ஆடையணி அலங்காரத்திற்கு தனி சோபை தருபவை

# பின்னி சேலைகளே

பின்னியின் சுத்தப் பட்டுச் சேலைகளுக்கு எப்பொழுதுமே ஒரு அலாதி மதிப்பும் கௌரவமும் உண்டு. அந்த ஆடைகளின் அழகும், அலையலையான மடிப்புகளும் அவைகளை அணிவதில் ஒரு குதூகலம் தருகின்றன.

ஆனால் பின்னி சேலைகள் பார்ப்பதற்கும் அணிவதற்கும்தான் சேர்த்தியானதோ என்று நினைக்க வேண்டாம். அவற்றின் இழைசேர்த்தியும் நெருக்கமான நெசவும் காரணமாக அவை நீண்டகாலம் சுருங்காமல் கசங்காமல் உழைக்கவும் செய்யும்.

ஆதலால்தான், சேர்த்தியான ஆடையணி அலங்காரத்துடன் எச்சமயத்திலும் எழிலரசிகளாகத் திகழ விரும்பும் மெல்லியர்கள் பின்னியின் சுத்தப் பட்டுச் சேலைகளையே பெரிதும் விரும்புகின்றனர்.

இந்தச் சேலைகள் ரம்மியமான வெளிர் நிறங்களில் மட்டுமின்றி, கண்ணைப்பறிக்கும் பகட்டான வர்ணங்களிலும் கிடைக்கின்றன. பிரத்தியேகமான தங்க ஜரிகை பார்டர்கள், முகப்புகளுடன் கூடிய சௌந்தர்யமும் வாய்ந்தவை.

# பின்னி பட்டுகள்

பெங்களூர் வூல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிட்.,
பெங்களூர் 2

ஏஜண்டுகள், காரியதரிசிகள், பொக்கிஷதார்கள்:
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிட்.



அசல் பின்னிச் சேலைகள் அனைத்திலும் இந்த அடையாளம் பொன்னிறத்தில் முத்திரையிடப்பட்டிருக்கும்.




அந்தக் கடிதம் தன் கணவனிடமிருந்து தான் வந்தது என்பதை அதன் முகவரியிலிருந்தே மல்லிகா அறிந்து கொண்டாள். உறையுடன் கூடிய கடிதத்தை அப்படியே மார்போடு அணைத்துப் பரவசமுற்றாள். 'ஆ! அவள் எதிர்பார்த்தது, கிடைத்து விட்டது! அவளைப்போன்ற அதிருஷ்டசாலி; கொடுத்து வைத்தவள் யார் இருக்க முடியும்!'

பிறகு உறையைக் கிழித்துக் கடிதத்தைப் பிரித்ததும் கையெழுத்திலிருந்து அது தனது புருஷனுடையதுதான் என்று உறுதியாயிற்று. அவள் தன்னையே மறந்தாள். ஒளியற்றிருந்த கண்கள் பிரகாசமுற்றன. முகம் மலர்ந்தது.

பின்னர் கடிதத்தைப் படிக்கலானாள். "அன்பே, உன்னை நான் மறந்து போவேனா! அதிக வேலை மிகுதியால் உனக்கு முன்போல் கடிதம் எழுதவோ, அல்லது வந்து அழைத்துப் போகவோ முடியவில்லை. இப்பொழுதும் அதே நிலைமைதான். ஆனால் நீ என்னிடம் வர ஒரே ஆவலாயிருப்பதால் நான் எந்தக் காரணத்தைக் கொண்டும் அதைத் தடைசெய்ய இயலாதவனாயிருக்கிறேன். நீ புறப்பட்டு வரும் நாளைத் தந்தி மூலம் தெரியப்படுத்து. நானாவது எனது ஆப்த நண்பர்களில் எவரேனுமாவது உன்னைக் கப்பலடியில் சந்தித்து அழைத்துச் செல்வோம்.

பிரதாபன்."

கடிதத்தைப் படித்த உடன், அகன்ற வாய்க்காலில் பெருக்கெடுத்து ஓடும் நீர் திடீரெனச் சிறு வாய்க்கால் வழியாகப் பாய்வதுபோல அவளுக்குண்டான அபரிமிதமான சந்தோஷம் சற்று மறைந்து சிறிது ஏக்கத்தின் சாயை தலை எடுத்தது.

'ஓயாமல் ஒழியாது வேலை! அதுதான் என்ன வேலையோ! பணக்காரர்களுக்கும் ஒவ்வொரு நிமிஷமும் வேலையிருக்கும் போலும்' என்று சற்று மனவேதனை அடைந்தாள்.

'தன் சுகத்தைப் பற்றியும் விளக்கவில்லை. என் சுகத்தைப் பற்றியும் கேட்கவில்லை. என்னை வரவேண்டாம் என்று மாத்திரம் சொல்லவில்லை.' இவ்விதம் எண்ணி மல்லிகா கடிதத்தை ஒரு தடவை படித்தாள். மறுபடியும் பல தடவைகள் படித்தாள். ஊரார் கேலி செய்வது போல்—வம்பளப்பது போல், தன் பணக்காரப் புருஷன் தன்னைப் புறக்கணித்துவிடவில்லை, அன்புடன்தானிருக்கிறான் என்ற நம்பிக்கை உதயமாயிற்று.

பணப் பெருக்குடையவர்களுக்குச் சாதாரண ஜனங்களின் தேவைகள் தெரிய முடியாது. அதனால்தான் தன் புருஷன் அவளது தேவைகளைப் பற்றிக் கேட்கவில்லை எனச் சமாதானமடைந்தாள். இதுவரை தான் கஷ்டங்களே அனுபவித்து வந்ததாகவும், இனி தான் சுகத்தையே காணப் போவதாகவும் அவளுக்குப் பெரிய நம்பிக்கை மனத்தில் உதயமாயிற்று.

இந்த ஒரு கடிதத்துக்காக அவள் இதுவரை எவ்வளவு ஏங்கினாள், எதிர்பார்த்தாள்! அதை நினைத்ததும் அவளுக்கு மனத்தில் ஒரு பெரிய ஆயாசம் ஏற்பட்டது.

தினசரி 'தபால்' என்ற சத்தம் கேட்டதும் ஆவலாய் ஓடுவாள். ஒரு கட்டுக் கடிதங்கள் இவளது பெயருக்கே தனியாக வந்திருக்கும். அவசரமாக அவைகளை ஆராய்வாள். அவள் எதிர்பார்க்கும் கடிதம் வந்திராது. ஆகையால் அவைகள் வெறுங் குப்பைகள் எனத் தோன்றும். என்ன ஏமாற்றம்! என்ன மனவேதனை! பிறகு மறுபடி 'தபால்' வரும் வரை அவளுக்கு மனம் எந்த திசையிலும் ஓடாது. ஆனால், இன்றையதினம் அவளுக்கு அந்தக் கஷ்டம் விலகி விட்டது. நடுக்கடலில் அகப்பட்டுத் தவிக்கும் மரக்கலம் கரை சேர்ந்து விட்டது போன்ற ஆனந்தம் உண்டாயிற்று.

அவளுக்கும் பிரதாபனுக்கும் திருமணம் நடந்த பொழுது மல்லிகாவின் தந்தை நல்ல நிலைமையிலிருந்தார். பிரதாபன் அச்சமயம் சற்று ஏழையாக இருந்தமையால் அவனை அவர் அலட்சியமாக நடத்தியதை அவனால் பொறுக்க முடியவில்லை. பர்மாவுக்குப் போய் விட்டான். போகும்பொழுது அவன் தன் உயிருக்குயிரான மனைவியிடம் "மல்லிகா, நான் இப்பொழுது ஏழை. ஆனால் கூடிய சீக்கிரமே பெரிய பணக்காரனாவேன்! நிறையப் பணத்தை

உன் பாத மலர்களில் கொட்டுவேன்! பின்னர், என் அன்பே உருவான எனது அன்புக் கரசியை என்னிடம் அழைத்துக் கொள்வேன். இது நிச்சயம்'' என்று தைரியம் சொல்லி விட்டுப் போனான். அதன்படி கூடிய சீக்கிரத்திலேயே பர்மாவில் நிறையப் பணம் சம்பாதித்தான். தன் அன்பின் அரசிக்கு அவ்வப்பொழுது ஏராளமாகப் பொன்னும் பொருளும் அனுப்பி வந்தான். அன்பான கடிதங்கள் பல எழுதி வந்தான்.

இதனிடையில் மல்லிகாவின் தந்தை என்ன காரணத்தாலோ படிப்படியாக ஏழையாகி விட்டார். பிறகு நோய்ப்பட்டு இறந்தும் போய் விட்டார். குடும்பம் வருவாயின்றிக் கஷ்டப்படலாயிற்று. இருந்த சொற்ப சொத்து மல்லிகாவின் இளைய சகோதரிகளின் விவாகங்களுக்கும் தம்பிமார்களின் படிப்பு விஷயமாகவும் செலவு ஆகிவிட்டது. துரதிருஷ்டம் மேலும் உண்டாயிற்று. பிரதாபனிடமிருந்து கடிதம் வருவது நின்று விட்டது. அவன் பொன்னும் பொருளும் அனுப்புவதும் நின்று விட்டது. பலர் பலவிதமாகப் பேசத்தொடங்கினர். பணக்காரனான பிரதாபன் ஏழை மல்லிகாவை விரும்பவில்லை, புறக்கணித்து விட்டான் என்று. மல்லிகாவினால் அதைச் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. கடிதத்தின் மேல் கடிதம் எழுதிச் சில வருஷங்களாய் நம்பிக்கையற்றுப் போயிருந்தாள். ஆனால் அவளுக்கு அந்தக் கஷ்டம் இத்துடன் முடிந்து விட்டது போலும். அவளது அருமைக் கணவனிடமிருந்து அவளை வரும்படி அநுமதியுடன் கூடிய கடிதம் அல்லவா கிடைத்து விட்டது!

* * *

**ம**ல்லிகாவின் பூரிப்படைந்த உள்ளம் பழைய நினைவுகளால் நிரப்பப் பெற்று, பின்னோக்கிப் பாய்ந்து கொண்டிருந்தது.

மல்லிகாவின் பெற்றோர் ஒரு காலத்தில் நல்ல நிலைமையில் இருந்தனர். பிரம்மாண்டமான தோட்டத்தின் நடுவே கட்டப்பட்ட பெரியதொரு பங்களாவில் அவர்கள், பாராக்காரர்களும் வேட்டை நாய்களும் காவல் காக்க, ஒன்றுக்கு மேற்பட்ட 'மோட்டார் கார்கள்' சதா தயாராக நிற்க, கணக்கற்ற பணியாளர்கள் ஓடியாடி ஏவல் செய்ய வெகு சுகமாக வாழ்ந்தனர். அவர்கள் வெகு அன்னியோன்ய தம்பதிகள். அவர்களின் அருமைக் குழந்தை மல்லிகா. பெற்றோர்கள் பெரிய தாழ்வாரத்தில் சிங்காரிக்கப்பட்டிருக்கும் சோபாவில் அருகருகே உட்கார்ந்திருப்பார்கள். அவர்களது காலடியில் பதுங்கிக் கொண்டு குழந்தை மல்லிகா தன்பெரிய பொம்மை நந்தினியுடன் 'அம்மா' விளையாட்டு விளையாடிக் கொண்டு இருப்பாள். 'என்ன கவலையற்று இருந்த நாட்கள்!' என்று அதை இப்பொழுது எண்ணிச் சந்தோஷப்பட்டாள் மல்லிகா.

மறுபடி அவளது உள்ளத்தில் கடந்து போன காலத்தின் நினைவுகள் ஊற்றெடுத்தன. ஒரு சமயம் அவளது அருமைத் தாய் சிறிது நாட்கள் நோய்வாய்ப்பட்டு ஒரு தினம் இறந்து போனாள். அப்பொழுது அவள் தந்தை அடைந்த துக்கம் சொல்லி முடியாது. அது முதல் மல்லிகாதான் அவர் உயிர்நாடி எனலாம். அவளை விட்டு ஒரு இம்மி நேரம்கூட அகலாமல் அவளது தந்தை அவளை அருமை பாராட்டத் தொடங்கினார். ஆனால் அப்படிச் சில காலமே நடந்து வந்தது. பிறகு ஒருசமயம் அவர் அவளை அழ அழ ஒரு வேலைக்காரியிடம் ஒப்படைத்து விட்டு ஒரு வாரம் வெளியூர் சென்றார். தந்தையைக் காணாமல் குழந்தை மல்லிகா, கண் உறக்கம் இன்றி அழுதவண்ணமாயிருந்தாள். தந்தையின் அபார அன்பினால் தன் தாயை அறவே மறந்து விட்டிருந்த மல்லிகாவுக்குத் தந்தையின் பிரிவைச் சகித்துக்கொள்ள முடியவில்லை. குழந்தை உள்ளம் தவியாகத் தவித்தது. அலுப்பால் ஒரு தினம் நிறைய 'காய்ச்சல்' கூட வந்து விட்டது. வைத்தியர் வந்து மருந்தும் கொடுக்க நேர்ந்தது. ஆனால் அப்பொழுதும் அவளுடைய தந்தை அவள் எதிர்பார்த்தபடி வரவேயில்லை.

தந்தை திரும்பி வருவதற்குள் வீடு வெள்ளையடிக்கப்பட்டு, வர்ணம் தீட்டப்பட்டு மற்றும் அலங்காரங்கள் செய்யப்பட்டன.

குழந்தை மல்லிகாவுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. வேலைக்காரர்களை விசாரித்தாள். அவர்கள் "பாப்பா, அப்பா வரப் போகிறார். அவர் உனக்கு ஒரு புதிய அம்மாவைக் கூட்டி வரப்போகிறார்'' என்றனர். இதைக் கேட்டதும் மல்லிகா 'கோ' வெனக் கதறி அழுதாள்.



மல்லிகாவின் தந்தை பிறகு ஒருநாள் திரும்பி வந்தார். அவர் வரும் தினத்திற்கு முன் இரவு மல்லிகா அயர்ந்து தூங்கிப் போயிருந்தாள். ஒரு பெரிய மோட்டார் கார் சத்தம் போட்டு அவளைத் திடுக்கிடச் செய்து விழிக்க வைத்தது. அவள் தன் அறை பலகணி வழியாக வெளியே பார்க்க, உண்மையில் அவளது தந்தை 'ஒரு புதிய அம்மா'வுடன் வண்டியை விட்டிறங்கி உள்ளே வந்தார்! மல்லிகாவுக்குத் தன்னுடைய அந்தச்சிறு பிராயத்து அறியாமையை எண்ணி இப்பொழுது மிகவும் வெட்கமுண்டாயிற்று.

இவ்விதம் கடந்து போன காலத்து நினைவுகள் வந்து அவளை அலைக்கழிக்க, அவள் அதிலிருந்து தன்னைச் சமாளித்துக் கொண்டு கடித விஷயத்தைச் சொல்லத் தனது சிற்றன்னையிடம் ஓடினாள்.

* * *

மல்லிகாவுக்கு அவள் கணவன் வெகு நாட்களுக்குப் பின் கடிதம் எழுதி விருப்பமுடன், தன்னிடம் வரும்படி எழுதியிருக்கிறான் என்று தெரிந்ததும் மல்லிகாவின் சிற்றன்னை தனது நடவடிக்கைகளை மிகவும் மாற்றிக் கொண்டாள். மல்லிகாவைப் பார்த்தாலே துரதிருஷ்டம் பிடித்துக் கொள்ளும் என்று அவ்வளவு கேவலமாக இதுவரை சொல்லிலும் செயலிலும் காட்டி வந்தாள் அவள். இப்பொழுது அதற்கு நேர்மாறாக நடந்து கொண்டாள். "மல்லிகா, இனி நான் உன்னை விட்டு எப்படி உயிர் வாழ்வேன்!" என்று அங்கலாய்த்தாள். "இனி நீ பெரிய சீமாட்டி. பணக்காரனின் மனைவி. நம்மை எப்படி நினைவு வைத்திருப்பாய்!" எனக் கூச்சமின்றிப் பேசினாள். ஊரிலிருந்து மல்லிகாவை வழியனுப்ப என்று அவளது இளைய சகோதரிகளும் வரவழைக்கப்பட்டனர்.

பெரிய தங்கை சொன்னாள்: "அக்கா! நீங்கள் எனக்கு உங்கள் நினைவாக ஒரு அடையாளம் கொடுத்து விட்டுப் போங்கள். உங்களுடைய கெம்பு அட்டிகையை எனக்குக் கொடுத்து விட்டுப் போங்கள்."

சிறிய தங்கை, "ஆமாம் அக்கா, கெம்பு வளையல்களை எனக்கு விட்டுச் செல்லுங்கள். உங்களுக்குத்தான் வைரமாய் நகைகள் இருக்கின்றனவே!" என்றாள்.

தம்பிமார்களும் "அக்கா, நீங்கள் அங்கே பெரிய 'ரோல்ஸ் ராய்ஸ்' வண்டியிலேயே சதா உலவி வருவீர்கள். அப்பொழுது ஏழைகளாகிய எங்களை மறந்து விடாமல் ஏதாவது பணம் அனுப்பி வாருங்கள்" என்றார்கள்.

தன் மக்களின் இனி மொழிகளுக்கு முத்திரை வைத்தாற்போல் அவளது சிற்றன்னையும், "ஆமாம் மல்லிகா, நீயோ பெரிய பணக்காரி. இங்கிருந்து ஏதேதோ சாதாரணப் பொருள்களை எடுத்துப் போனாயானால் உன் பணக்காரப் புருஷன் கேலி செய்வார். ஏதும் எடுத்துப் போகாதே" என்றாள்.

மல்லிகா இவைகளைப் பெருமையாகவே எடுத்துக் கொண்டாள். அவர்களது பேச்சுகளின் மேல் விருப்பு வெறுப்புக் கொள்ளவில்லை. உண்மையில் அவளுக்கு அந்தச் சமயம் தன் செலவுக்கே கையில் பணம் இல்லாமல் இருந்தது. அது அவளுக்கு மிகவும் கவலையைக் கொடுத்தது. ஒருவருக்கும் தெரியாமல் காசு மாலையை விற்றுப் பணமாக்கிக் கொண்டாள்.

மற்றப் பெண்கள் புக்ககம் செல்லும்போது பிறந்த வீட்டுச் சீரோடு மிகவும் பிரியமான பசுக்கள் துணைக்குப் போவார்கள். இதை மல்லிகா பார்த்திருந்தாளாகையால் இப்போது தன்னை நினைத்து அவளுக்குச் சற்று வருத்தமுண்டாயிற்று. ஆனால் அவள் புருஷன்தான் அவளுக்கு வைரமாக இழைத்துப் போட்டிருக்கிறான். பட்டாக வாங்கிக் குவித்திருக்கிறான். பர்மா தேசத்தில் ஓர் அரசனுக்கொப்ப வாழ்வதாக வேறு வதந்தி. இப்படியிருக்க இவள் முன் சொன்னபடி ஏங்குவது தகுமா! மல்லிகா தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள்.

மல்லிகா கப்பல் பிரயாணத்தின் மூன்று தினங்களையும் பிரதாபனைப் பற்றிய நினைவிலே செலவிட்டாள். சாளரத்தின் வழியாக வெளியே நீலக் கடலை உற்று நோக்குவாள். இந்த நீலக் கடலுக்கப்பால் உள்ள பர்மா தேசத்து முக்கிய பட்டணமாகிய ரங்கூனில் ஒரு பெரிய மாளிகையில் பிரதாபன்—அவளது மணவாளன்—ஒரு அரசனுக்கொப்பப் பெரிய பரிவாரம் புடைசூழ இப்பொழுது அவளது வரவுக்காக ஆவலாய்க் காத்துக் கொண்டிருக்கிறார்! ஒவ்வொரு கணமும் அவள் அவரை அணுகிக் கொண்டிருக்கிறாள்! — இவ்வித எண்ண அலைகள் அவளது உள்ளத்தை மோத, அவள் குதூகலமாக அதில் புகுந்து எழுந்து ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தாள்.

'இதே சமயத்தில் பிரதாபனும் என்னைப் பற்றிய நினைவாக இருப்பார். இனி நாம் ஒருபோதும் பிரிந்திருக்கவே மாட்டோம்.' மல்லிகா இவ்விதம் எண்ணி மனக் கண்ணில் புருஷனுடன் நெருங்கி உட்கார்ந்தாள்.

ஒரு விநாடி அவள் இருவருடைய பெயர்களையும் எண்ணி அகமகிழ்ந்தாள். 'ஆகா! என்ன அழகான பெயர்கள்! பிரதாபன்—மல்லிகா! என் தாயாரும் அவரது தாயாரும் ரொம்ப நெருங்கின நண்பர்களாம். நாங்கள் பிறந்தவுடன் அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டே இவ்விதம் பெயர் வைத்தார்களாம்.' மல்லிகாவுக்குத் தாங்கள் குழந்தைகளாயிருந்த நினைவு வர, உடனே அகக் கண்ணில் தங்களைக் குழந்தைகளாகக் கண்டு களித்தாள். 'பிரதாபனுக்கு எப்பொழுதுமே புள்ளினங்கள்மீது ஒரு அலாதியான பற்றுதல். தனது அரண்மனை போன்ற வீட்டில் 'புள்-மண்டபம்' அமைத்திருப்பார். அதில் உலகத்திலுள்ள எல்லாவிதமான பட்சிகளிலும் ஒவ்வொரு வகை வைத்திருப்பார். அதில் மிக அழகான குயில்—அல்லது கிளிக்கு என் நினைவாக என் பெயர் வைத்திருப்பார். நான் இப்பொழுது அவரிடம் போனதும், அவர் 'மல்லிகா, என்னருமை மல்லிகா' என்று என்னை அழைத்தால் அவ்வழகிய பறவை 'மல்லிகா' என்று தன்னைத்தான் கூப்பிடுகிறார் என்றெண்ணி அவரிடம் ஓடி வரும். அப்பொழுது அங்கே என்னைப் பார்த்து விட்டு, வெட்கப்பட்டு உயரப் பறந்து போகுமல்லவா!' என்று எண்ணிக் கொண்டாள்.

'பிரதாபன் என்னை அழைத்துப் போகத் துறைமுகம் வருவார். பெரிய காரில் தன்



# நரை மயிர்
## உங்கள்
# வயோதிகத்தை
## எடுத்துக்
# காட்டுகிறது

உண்மையில் நீங்கள் எவ்வளவு வாலிபமாய் இருந்த போதிலும் நரை மயிர் உங்கள் வயதை அதிகப்படுத்தியே காண்பிக்கும். இந்த நிலைமையிலிருந்து தப்ப ஹென்ருல் ஒன்று தான் சுலபமான சாதனம். சக்தி வாய்ந்த சரக்குகளினால் தயாரிப்பாகிய ஹென்ருல் நரையை நிரந்தரமாக அகற்றுகிறது.

ஹென்ருல் எண்ணெ ரூபத்திலும் (Oily) எண்ணெ யற்றதாயும் (Nongreasy) கிடைக்கும். முதிர்ந்த நரைக்கு சக்தி வாய்ந்த ஹென்ருல் போமேட் உபயோகியுங்கள். ஹென்ருல் நரையை ஒழிக்கிறது. எங்கும் கிடைக்கும்.

PEARLINE-PARIS LTD., P.O. Box 483, BOMBAY.

# ஹென்ருல்
நரையை அகற்றுகிறது

---

FZY-34 TAM.

# உலகின்
# மகோன்னத
# சமன
# ஔஷதம்




## வெட்டுப்புண், தீப்புண், சிராய்ப்பு,
## காயங்களுக்கு மிகுந்த பாதுகாப்புள்ள மிக நிச்சயமான சிகிச்சை

விபத்துகளை முன்னிட்டு ஜாம்-பெக்கை எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள். ஜாம்-பெக் இதமளிப்பது விஷத்தடுப்பு குணமுள்ளது காயங்களில் அபாயகரமான கிருமிகள் பரவாமல் தடுக்கும் ஜாம்-பெக் சீக்கிரத்தில் காயங்களை ஆற்றும். இதர மதிப்புவாய்ந்த ஔஷதப் பொருள்களைத் தவிர ஜாம்-பெக்கில் கிளைசெரைன் சேர்ந்திருப்பதால் அதன் சமனகுணம், தசை நார் போஷாக்கு மற்றும் இதர பலன்களும் கிடைக்கும். ஜாம்-பெக்கை எக்ஸிமா முதலிய சரும நோய்களின் நிவாரணத்திற்கும் வலியுடன் சோர்வுற்று களைப்படைந்த கால்களுக்கு சமனமூட்டி குணமாக்கவும் மூலநோயின் வலியையும் அரிப்பையும் நிறுத்தவும் உபயோகிக்கலாம். ஜாம்-பெக்கில் மிருகக் கொழுப்பு சேரவில்லை என்பதற்கு உத்திரவாதம்.

**ஜாம்-பெக்–எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.**

---

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

---

பரிவாரத்தோடு வந்து நிற்பார். தம் காரிய தரிசி, குமாஸ்தா, சேவகன் முதலியவர்களை எனக்கு அறிமுகம் செய்வார். அவர்கள் தங்கள் பிரபுவின் மனைவியைக் குனிந்து வந்தனம் செய்யும்போது நான் குனியாமல் தலையை இப்படி ஆட்டுவேன்! "இதை எண்ணும் பொழுது அவளது தலை அவளை யறியாது ஆட, அவளுக்கு அதை நினைத்து மிகவும் சிரிப்பு வந்து விட்டது.

மல்லிகா நான்காம் தினம் காலை வெகு சீக்கிரமாகவே நித்திரை விட்டெழுந்தாள். அவள் மனம் ஒரே குதூகலத்தில் ஆழ்ந்து போயிருந்தது. தன் மூட்டை முடிச்சுகளைக் கட்டி விட்டு, பாக்கி கொடுக்க வேண்டியிருந்ததை யெல்லாம் அவரவர்களுக்குக் கொடுத்துக் கப்பலின் மேல் தட்டில் போய் நின்று கொண்டாள். ரங்கூன் செல்லும் கப்பல் கடற் பிரயாணத்துக்குப் பின் பல மைல்கள் 'ஐராவதி' நதியில் செல்ல வேண்டும். கடலும் நதியும் கலக்கும் இடத்தில் ஒரு கோடு மாதிரித் தெரியும். அதன் பின் கப்பல் நதியில் சற்று நிதானமாகப் போகும்.

வர வர இருபுறமும் கரை தெரியலாயிற்று. பிறகு ஊரும் தெரிய வந்தது. கப்பலும் பேரிரைச்சல் போட்டுக் கரை சேர்ந்து நின்றது.

தூரத்திலிருந்து ஜனத்திரள் கும்பல் கும்பலாகக் கப்பலை நெருங்கி வந்தது. கப்பல் பிரயாணிகளில் சிலர் தங்கள் அறைகளின் சாளரத்தின் வழியாகவும் சிலர் மேல் தட்டிலும், சிலர் அங்குமிங்குமாயும் தங்கள் தங்கள் மனிதர்களை ஜாடை காட்டி அளவளாவுவதும், நேரில் பார்த்துப் பேசுவதும் சுகம் விசாரிப்பதுமாய் ஒரே பரபரப்பாய்க் காணப்பட்டனர்.

மல்லிகா தன் கணவனை அந்த ஜனக் கூட்டத்தில் தேடினாள். 'அதோ அந்த வண்டியில் வருகிறாரோ — இல்லை — இதோ, இதில் வருகிறாரோ, ஒரு வேளை,—இல்லை, இல்லை, ஏன் இவ்வளவு நேரம் செய்கிறார்!'—மல்லிகாவுக்குத் திகிலுண்டாயிற்று. உடம்பு வியர்த்துக் கொட்டியது. தலையைப் பலமாகச் சுற்றியது. கீழே விழப் போனாள். அவளைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் கூடி விட்டது.

"ஐயோ பாவம், தனியே வந்திருப்பதனால் பயம்!" என்றனர்.

"அவள் எதிர்பார்த்தவரைக் காணோம் போல் இருக்கிறது. அதிர்ச்சி" என்றனர் சிலர்.

"பார்த்தால் ரொம்ப இள வயது. பணக்கார மாது. ஏனோ தனியே வந்திருக்கிறாள்" என்றனர் வேறு சிலர்.

"ஏன் அம்மா, நீங்கள் போக வேண்டிய இடம் சொன்னால் நாங்கள் அழைத்துப் போய் விட்டு விடுகிறோம். பயப்படாதீர்கள்" என்றனர் சில பெரியவர்கள்.

இதற்குள் மல்லிகா சுய உணர்வு பெற்றாள். அவளைத் தேடிக் கொண்டு ஒரு புதியவர் அவளருகே வந்து, "அம்மா, நீங்கள்தான் பிரதாபன் மனைவி என்று நம்புகிறேன்" என்றார்.

மல்லிகா சற்றுத் தைரியமடைந்தாள். "பிரதாபன் உங்களை அழைத்துப் போக என்னை அனுப்பியுள்ளார். நீங்கள் நேராக எங்கள் வீட்டில் வந்து தங்கிச் சிரமபரிகாரம் செய்ய வேண்டும். பிரதாபன் அவர்கள், வேலை மிகுதியால் வர முடியவில்லை. வேலை முடிந்ததும் அவர் வந்து உங்களைத் தம்மிடம் அழைத்துச் செல்வார்" என்றார் அந்தப் புதியவர்.

மல்லிகா வியப்புற்றாள். ஒருவேளை பணம் படைத்தவர்கள் நடந்து கொள்ளும் முறையே இப்படித்தான் போலும். அவர்களுக்கும் ஏழை எளியவர்கள் போலவே சதா வேலையிருக்கும் போலும்! ஒருவேளை, இவர் பிரதாபனின் காரியதரிசியோ! இவ்விதம் எண்ணி அவள் அந்தப் புதியவரை, யார் என்று கேட்டாள். "நான் பிரதாபனின் நண்பர்" என்றார் அவர்.

மல்லிகா முன்னர் எண்ணியபடி அங்கு ஒரு பெரிய மோட்டார் வண்டியோ, காரியதரிசியோ, குமாஸ்தாவோ சேவகனோ காணப்படவில்லை. இதையறிந்த அவள், ஏதோ தனக்குள் ஒரு மாதிரி யோசனை செய்துகொண்டு, "நண்பரே, நான் நேராகப் பிரதாபனின் வீடு செல்லவே விரும்புகிறேன்" என்றாள். இருவரும் ஒரு குதிரை வண்டியில் ஏறிக் கிழக்கு ரங்கூன் சென்றனர். வண்டி ஒரு பழைய வீட்டுப் புறக்கடைப் பக்கம் சென்று நின்றது. மல்லிகா ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாய் நண்பருக்கு விடை கொடுத்தனுப்பி விட்டு உள்ளே சென்றாள். வாசற் கதவைத் தாளிட்டுக் கொண்டாள். ஏழ்மை! ஏழ்மை! எங்கே பார்த்தாலும் வறுமையின் சின்னம்! ஐயோ! பிரதாப்! நீங்கள் கடிதம் எழுதாத காரணம் இப்பொழுதல்லவா விளங்குகிறது!" இவ்விதம் சொல்லி உரக்க அழுது விட்டாள்.

மழை கனமாகப் பொழிந்த பின் ஆகாயம் பரிசுத்தமடைகிறது போல, அவளது மனச் சுமை வாய்விட்டு அழுதபின் நீங்கிவிட்டது. சூழ்நிலைக்குத் தக்கவாறு தன்னைத் தயாராக்கிக் கொண்டு விட்டாள்.

வீட்டின் சௌகரியங்களைக் கவனிக்கலானாள். சமையலறைக்குள் புகுந்தாள். அங்கே ஒரு பலகை மீது முள்ளங்கிக் கீரையும் கொஞ்சம் மாவும் ஒரு அடுப்பும் சில பாத்திரங்களும் கிடந்தன. சீக்கிரமாகவே ஸ்னானம் செய்து ரொட்டியும் கறியும் தயாராக்கினாள். வீட்டைப் பெருக்கித் துணிமணிகளைத் துவைத்து உலர்த்தினாள். பிரதாபனுடைய அறையை அவனுக்குச் சௌகரியமாக வைத்தாள்.

'ஆ! வாசற் கதவை யாரோ தட்டுகிறார்களே!' என்று கதவிடுக்கில் பார்த்தாள். 'ஓ! பிரதாபன்!" மல்லிகா ஓடிச் சென்று கதவைத் திறந்தாள்.

காதல் மனைவியும் அன்புப் புருஷனும் அளவளாவுவதை யாரால் விவரிக்க முடியும்!

"என் வீட்டில் ஒளி வீசும் இந்த தேவதை யார்!" என்றான் பிரதாபன்.

"ஒரு தேவனின் மனைவிதான்" என்றாள் மல்லிகா.

"மல்லிகா, இந்த ஏழையைத் தேடிக் கொண்டு வந்து விட்டாயல்லவா!" என்றான்.

"எனக்கு உங்களுடனிருப்பதுதான் ஐஸ்வரியம்" என்றாள் மல்லிகா.

பிரதாபனின் கடிதம் இன்னமும் அவளுடைய பையிலேதான் இருந்தது. அதை மல்லிகா அன்போடு எடுத்து மறுபடி அணைத்துக் கொண்டு பரவசமுற்றாள்.

கல்கியின்

# அமரதாரா

## அத்தியாயம் 9

## "உன் அதிர்ஷ்டம்"

மீராவுக்கு நான் கதை சொல்லிக் கொண்டிருந்த போது, பத்மநாபன் தன் அறையிலிருந்து வெளியே வந்தார். கோமளவல்லியம்மாளின் அறைக்குப் போனார். சற்றைக்கெல்லாம் கோமளவல்லியம்மாள் வந்து, "மீரா, நீ போய் மூத்துவைச் சாதம் போடச்சொல்லிச் சாப்பிடு" என்றார். மீரா வேண்டா வெறுப்பாக எழுந்து சென்றாள். அதன் பிறகு பத்மநாபனும் அங்கு வந்தார்.

உடனே எனக்குப் புரிந்து போய் விட்டது. 'ஓஹோ! இரட்டை நாயனம் வாசிக்கப் போகிறார்கள் போலிருக்கிறது. தாளத்துக்கு ஒரு ஆள் வேண்டியதுதான். யோசித்துப் பேச வேண்டும். பதட்டப்படக்கூடாது. அவர்கள் மனம் நோகாமல், விருப்பமில்லை என்பதை நாசூக்காகத் தெரிவித்து விட வேண்டும்' என்று நினைத்தேன்.

இருவரும் அங்கே அலங்கரிக்கப்பட்டிருந்த அழகிய சோபாக்களில் உட்கார்ந்தார்கள். முக்கியமான விஷயம் ஏதாவது பேசுவதற்கு முன்னால் அவர் ஐந்தாறு தடவைகள் தொண்டையைக்கனைத்துச் சரிசெய்து கொள்வார். சுலோசனா அதை, "அப்பா சுருதி சேர்க்க ஆரம்பித்து விட்டார். இன்னும் ஒரு நிமிஷத்தில் கச்சேரி ஆரம்பமாகி விடும்" என்று சொல்லிப் பரிகசிப்பது வழக்கம்.

எனக்கு அது ஞாபகம் வந்தவுடனே சிரிப்பு வந்தது. கோமளவல்லி அம்மாளின் குளிர்ந்த பார்வை அதைக் கண்டதும் சற்றுக் கடுமையாயிற்று. நல்ல விநோத பிரகிருதி அவர். யாரேனும் சிரித்தாலும், சந்தோஷமாக இருந்தாலும் அவருக்குப் பிடிக்காது. அழுது கொண்டிருந்தாலும் பிடிக்காது. அவரை முகஸ்துதி செய்து கொண்டே இருந்தால் ரொம்பப் பிடிக்கும். நான் அந்த மனோநிலையில் இல்லாதபடியால் அவருக்கு என்னைப் பிடிக்கவில்லை.

கோமளவல்லி அம்மாள் தான் பேச்சைத் துவக்கி வைத்தார். "என்ன, இந்து! மாமா சொன்ன விஷயத்தை நன்றாக யோசித்தாயா? சரியான முடிவுக்கு வந்து விட்டாய் அல்லவா?" என்று கேட்டார்.

நான் தலையைக் குனிந்து கொண்டு நின்றேன். என்னுடைய தைரியமெல்லாம் என்னை விட்டுப் பறந்து போய் விட்டது. திடீரென்று தலைக்குள் சூனியம் ஏற்பட்டு விட்டது போல்தோன்றியது. பத்மநாபனுக்குப் பதில் சொல்லி விடுவேன். அதற்குத் தயாராக இருந்தேன். ஆனால் வக்கீலின் மனைவிக்குப் பதில் சொல்ல நான் தயாராக இருக்கவில்லை. அவருடைய பார்வையிலேயே எனக்கு ஸப்தநாடியும் ஒடுங்கிப் போயிற்று.

"ஏன் பதில்சொல்ல மாட்டேனென்கிறாய்? சம்மதம் என்று வைத்துக் கொள்ள வேண்டியது தானே?" என்று கேள்வி வந்தது.

என் உடல் நடுங்கியது. இனிமேல் பேசாமல் இருப்பது தவறு என்று

நினைத்து, "நான் அப்படிக் கூற வில்லையே!" என்றேன்.

"பின்னே என்ன சொல்லப் போகிறாய்?" என்று பரிகாசக் குரலில் கேட்டார் கோமளவல்லி அம்மாள்.

என்னுடைய கண்களிலிருந்து திடீரென்று நீர் பொங்கி வழிந்து விட்டது. நான் எவ்வளவு முயன்றும் சிறிதும் நிறுத்த முடியவில்லை.

இது கோமளவல்லி அம்மாளின் ஆத்திரத்தைக் கிளப்பி விட்டது. "அடேயப்பா! நாங்கள் நினைத்ததை விட நீ கெட்டிக்காரியாக இருக்கிறாயே. கேட்பதற்கு முன்னாலேயே அழுகிறாயே. அழும்படி இப்போது என்ன ஆகிவிட்டது? இந்துமதி! கண்ணைத் துடைத்துக் கொண்டு சீக்கிரம் பதில் சொல்லு" என்று அதட்டினார்.

நான் உடனேயே கண்களைத் துடைத்துக் கொண்டு விட்டேன். வக்கீல் பத்மநாபன், "கோமளி! நீ சற்று சும்மா இரு. அவளாகச் சொல்லட்டும்" என்றார்.

எனக்குச் சற்றுத் தைரியம் வந்தது. இப்படிக் கோழையாக இருக்கிறேனே என்று என் மீதே வெறுப்பு உண்டாயிற்று. பிறகு தலை நிமிர்ந்து, "எனக்கு இதில் கொஞ்சங் கூட இஷ்டம் இல்லை" என்று கூறினேன்.

"ஏன்? இல்லாவிட்டால் உனக்காகச் சீமையிலிருந்து மாப்பிள்ளை வந்து மாலையிடப் போகிறானாக்கும்?" என்று மிகவும் கேலியாகக் கூறினார் கோமளவல்லி அம்மாள்.

எனக்கு அந்தக் கணத்தில் எவ்வளவு ஆத்திரம் உண்டாயிற்று, தெரியுமா? 'இவர் இப்படிக் கூறுவதற்காக வேணும் ரங்கதுரை வந்து என்னை மணந்து கொள்ள வேண்டும். அப்போது தெரியும், நான் ஒன்றும் அத்தனை மட்டமானவள் இல்லையென்று' என மனத்துக்குள் நினைத்தேன்.

"நான் அப்படி ஒன்றும் நினைக்கவில்லை. இவரைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள எனக்கு விருப்பமில்லை என்றுதான் சொன்னேன். என்னுடைய அம்மா, அப்பா இருவருக்கும் இவர் இழைத்திருக்கும் கொடுமைகள் கொஞ்ச நஞ்சமில்லை. அவரைப் போய்க் கல்யாணம் செய்து கொள்ள முடியுமா?" என்றேன்.

"உனக்கு இதை யார் கூறினார்கள்?"

"என் அப்பா மந்திரமூர்த்தி சொல்லியிருக்கிறார். திருநந்திபுரத்தில் அவர் மிகவும் பொல்லாதவர் என்பது பிரஸித்தம்" என்றேன்.

வக்கீல் பத்மநாபன் ஒரு விகாரப் புன்னகையுடன், "உன் அப்பா ஒரு 'ரௌடி' என்பதும் ஜகத் பிரஸித்தமல்லவா?" என்றார்.

எனக்கு ரௌத்ராகாரமாகக் கோபம் வந்தது. பல்லைக் கடித்துக் கொண்டு, "தயவு செய்து என் தாய்




தந்தையரைப் பற்றி ஒன்றும் தூஷிக்க வேண்டாம்" என்றேன்.

"யார் தூஷித்தார்கள்? உண்மையைத்தானே அவர் சொல்லுகிறார்? அதற்கு நீ ஆத்திரப்பட்டால் என்ன பிரயோசனம்? நீயே சொல்லு, இந்து! உன் அப்பா அம்மாவைப் பற்றி அடியோடு மறந்து விட்டு உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள யார் சம்மதிப்பார்கள்? இப்போது ஈசுவரமூர்த்தி உன்னைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொல்லுவது உன் அதிர்ஷ்டம். அவருக்கு உள்ள அந்தஸ்து, செல்வம் எல்லாம் உனக்குத் தெரியாது. தெரிந்தால் இப்படி அசடு மாதிரி தயங்கி நிற்க மாட்டாய்."



எனக்கு மனம் ரொம்பப் புண்ணு யிற்று. எத்தனை தடவை என் அப்பா அம்மாவைப் பற்றிச் சொல்லுகிருர்கள். சவிரக்கமற்றவர்கள். என் அருமை அன்னை தன் மனத்துக்கு உகந்தவனை மணந்து கொண்டாள். அது பெரிய குற்றமா? என் தந்தையைப் பற்றிச் சொன்னுல் கூடப் பரவாயில்லை. சூழ்நிலை அப்படியிருக்கிறது. என்ன செய்யலாம் என்று நினைத்துக் கொண்டு விடலாம். ஆனல் பாவம்! அவரையே நினைத்து உருகி உருகி மடிந்து போன என் அன்னையின் புனித ஆத்மா இவர்களுடைய பேச்சுக்கு ஆளாகிறதே என்று நொந்து கொண்டேன்.

"எனக்குக் கல்யாணமே வேண்டாம். நான் இப்படியே இருந்து விடுகிறேன்" என்றேன்.

"ஓ! கல்யாணமே வேண்டாமா? இங்கேயே இருந்து......"

"உஷ், கோமனி! சற்றுப் பேசாமல் இரு. நான் கேட்டுக் கொள்கிறேன்" என்ருர் பத்மநாபன். பிறகு என்னைப் பார்த்து, "ஏன், இந்து! இந்த சம்பந்தம் வேண்டாமென்கிருய்? இதன் மூலம் உனக்கும் எவ்வளவோ நன்மை ஏற்படும் என்று சொன்னேனே. எனக்கும் ரொம்ப கௌரவமாக இருக்கும். நீ இன்னும் சற்று யோசித்துப் பார்த்துச் சரியான முடிவுக்கு வந்து விடு" என்று சொல்லி விட்டுப் பாதரட்சைகள் ஒலிக்க வெளியே சென்ருர் பத்மநாபன்.

கோமளவல்லியம்மாளும் மிகுந்த கோபத்துடன் எழுந்திருந்தார்.

"காலடியில் அதிர்ஷ்டம் வந்து விழுந்தாலும் வேண்டாம் என்கிற துடுக்குத்தனத்தை உலகத்தில் வேறு எங்கும் பார்க்க முடியாது. எல்லாம் வைக்கிற இடத்தில் வைத்தால்தான் சரியாக இருக்கும்" என்று அவர் என் காதில் விழும்படி கூறிக்கொண்டே அவ்விடத்தை விட்டுச் சென்ருர்.

சுலோசனுவிடம் அன்று நடந்த விஷயங்களைக் கூறிய போது மிகவும் வருத்தப்பட்டாள். "அப்பா தான் அம்மாவிடம் உன்னை இதற்குச் சம்மதிக்கச் செய்யும்படி சொல்லியிருக்கிருர். இனிமேல் அம்மா உன்னைச் சும்மா விடமாட்டாள். இதைப் பற்றியே சொல்லிச் சொல்லிப் பிராணனை வாங்கி விடுவாள். அப்பா தம் காரியத்தைச் சாதித்துக் கொள்ள எத்தனை வழி கண்டு பிடிக்கிருர்!" என்று அவள் வியந்தாள்.

"நான் என்ன செய்ய வேண்டும், சுலோ? எனக்கு ஏதாவது ஒரு வழி சொல்லேன். என்னை எங்கேயாவது அனுப்பிவிடு. நான் இங்கு இருந்தால் தானே இத்தனை உபத்தரவம்?" என்று துயரத்துடன் கூறினேன்.

"சே! அசடு! நீ பேசாமலிரு. அம்மா ஏதாவது சொன்னுல் காதிலேயே வாங்கிக் கொள்ளாதே. என்ன வேண்டுமானுலும் சொல்லி விட்டுப் போகட்டுமே. நமக்கு அதனுல் என்ன நஷ்டம்? ரங்கதுரை வரும் வரையில் நீ இங்கேதான் இருக்கப் போகிருய். அதன் பிறகு பெரிய ஐ. ஸி. எஸ். காரருடைய மனைவியாகி விடுவாய். அப்புறம் என்னை லட்சியம் செய்வாயா?" என்று பரிகசித்தாள். என்னை உற்சாகமூட்டுவதற்காக இப்படி ஏதாவது சொல்லிக் கொண்டேயிருப்பது அவளுடைய வழக்கம். ஆனல் அவள் சொன்னபடி நடக்கப் போவதில்லை என்பதை நானும் நினைக்கவில்லை. அவளும் அறிந்திருக்கவில்லை. அங்கு இருப்பதைத் தவிர வேறு வழியில்லை

என்று நினைத்தேன். ஆனால் நான் நினைத்ததற்கும் நடந்ததற்கும் எத்தனை வித்தியாசம்?

இந்தச் சிறையில் தன்னந் தனியாக உட்கார்ந்து கொண்டு நான் சுய சரிதம் எழுதும்போது, என்னுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்களை எழுதுவதாகவே தோன்றவில்லை. எனக்கே ஏதோ ஒரு சினிமாவில் பார்த்த சம்பவங்களை எழுதுவது போலத்தான் தோன்றுகிறது. ரங்கதுரை தம் வாழ்க்கையில் ஏற்பட்ட சம்பவங்களையும் எழுதி விட்டாரானால் நிஜமாகவே ஒரு சிறந்த கதையாகி விடும். இரண்டையும் சேர்த்து வைத்து ஒரு நல்ல சினிமாப் படமே எடுத்து விடலாம்.

## அத்தியாயம் 10

# புதுச்சேரி வைரம்

சென்னையில் நான் இருந்த கொஞ்ச காலத்தில்தான் வாழ்க்கை என்பது என்ன என்பதைப் புரிந்து கொண்டேன். கள்ளங் கபடமறியாத கிராமத்துப் பெண்ணான எனக்கு, ஒவ்வொரு பயங்கரமான உண்மையும் தெரிந்தபோது பெரும் அதிர்ச்சி உண்டாயிற்று. ஒரு அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்குள் இன்னொன்று தலையில் விழும். இப்படியே மேலும் மேலும் அடி விழுந்து விழுந்து சென்னையிலிருந்து நான் புறப்படும் போது என்னை உணர்ச்சியற்ற கட்டையாகச் செய்து விட்டது.

நான் பத்மநாபன் வீட்டை விட்டு வெளியேறக் காரணமான அந்த சம்பவத்தை நினைத்தால் மனம் குமுறுகிறது. என்ன மோசக்கார உலகம்?

நமது வாழ்க்கையில் தற்செயலாக எத்தனையோ சம்பவங்கள் நேருகின்றன. சில சமயங்களில் ஒரு தற்செயலான சம்பவமே நமது வாழ்க்கையின் போக்கை அடியோடு மாற்றி அமைத்து விடுகிறது. அன்று நடந்ததும் தற்செயலாக நேரிட்ட ஒரு சம்பவம்தான். ஆனால் அது எத்தனை விபரீதமான விளைவுகளுக்குக் காரணமாகி விட்டது!

அமுதத்தை ஒத்த அன்பு பணத்தாசையால் விஷமாகி விடுகிறது. பத்மநாபன் உண்மையிலேயே எனக்கு நன்மை செய்யத்தான் விரும்பினார். நான் சுகமாகவும் இருக்க வேண்டும். அவருடைய சுயநல நோக்கமும் நிறைவேற வேண்டும். அதாவது என் உள்ளம் என்ன கதியடைந்தாலும் பரவாயில்லை. என் உடலுக்கு நல்ல சாப்பாடு, வசதிகள் கிடைக்கும்படியான ஏற்பாடுகள் செய்து விட்டால் அவருடைய மனச்சாட்சி உறுத்தாது. வெளி உலகத்திலும் நல்ல பெயர் கிடைக்கும். அவருடைய நோக்கமும் பூர்த்தியாகி விடும் என்று எண்ணியிருக்கிறார்.

அவருடைய நோக்கம் என்னவென்பது எனக்கு அப்போது தெரிந்திருக்கவில்லை. வெகு நாட்களுக்குப் பிறகுதான் தெரிந்து கொண்டேன்.

நான் சென்னை வந்து ஏழு மாதங்களாகி விட்டன. ஆனால் குடும்பத்தில் முன் போல் அவ்வளவு படாடோபத்தைக் காணோம். பத்மநாபனின் நண்பர்கள் பலர் வருவார்கள். சாப்பிடுவார்கள். இரவு வெகு நேரம் வரை உட்கார்ந்திருப்பார்கள். இதெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வந்தது. பத்மநாபன் முன்போல் கலகலப்பாக இராமல் சற்றுக் கவலையுடன் காணப்பட்டார். கிலோவிடம் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்த போது ஏதோ வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டு விட்டதாகக் கூறினள். அவளுக்கே விவரம் ஒன்றும் சரியாகத் தெரியாது. ஆனால் முன் போல் செலவழிக்கப் பணம் கிடைப்பதில்லை என்று மாத்திரம் அறிந்து கொண்டேன். அவள் அதைச் சகஜமாக ஏற்றுக் கொண்டிருந்தாள்.

பாலுவும், மீராவும் என்னிடம் ஒட்டிக் கொண்டிருந்த படியால் ஏழு மாதமும் போனதே தெரியவில்லை. கோமளவல்லி அம்மாளின் பேச்செல்லாம் அதிர்ச்சி யளித்த போதிலும் மற்றவர்கள் காட்டிய அன்பினால் அது மிகவும் பாதிக்கவில்லை.

"இன்னும் ஐந்தாறு மாதங்கள் தான் இங்கு இருக்கப் போகிறேன். பிறகு ரங்கதுரை வந்து விடுவார். அவர் வந்து விட்டாரா இல்லையா

என்னும் விஷயம் தெரிவதற்கு இனி மேல் தினமும் பத்திரிகை படிக்க வேண்டும். அவர் திரும்பி வந்தால் பத்திரிகையில் போடாமலிருக்க மாட்டார்கள்" என்றெல்லாம் சில சமயங்களில் யோசித்திருக்கிறேன்.

இப்படிப்பட்ட சிந்தனைகளுடன் ஒரு நாள் பாலுவைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தேன். ஆறு மாதக் குழந்தையானாலும் அவன் எட்டு மாதக் குழந்தை என்று சொல்லும்படி நன்ருக வளர்ந்திருந்தான். அவனுக்கென்று வாங்கியிருந்த அழகிய தண்ணீர்த் தொட்டியில் உட்கார வைத்துப் பிடித்துக் கொண்டால் அவனுக்கு ஒரே உற்சாகமாக இருக்கும். மீராவும் நானும் சோப்பைக் குழைத்துக் குமிழிகள் ஊதிக் காட்டுவோம். அவற்றின் வர்ண ஜாலங்களை அவன் பார்த்துச் சிரிக்கும் போது நான் பூரித்துப் போவேன். நானும் சின்னஞ் சிறு குழந்தையாகி விடுவேன்.



அன்று தண்ணீரில் வெகு நேரம் விளையாடியதால் அவனுடைய உடம்பு பளபள வென்றிருந்தது. மேலெல்லாம் முத்து முத்தாகத் தண்ணீர்த் துளிகள் இருந்தன. அதைப் பார்த்து ரஸித்த வண்ணம், ஒரு துண்டைப் போட்டு அவன் உடலைச் சுற்றித் தூக்கிக் கொண்டு வந்தேன். அவனுக்கு அலங்காரம் செய்து கொண் டிருந்தேன். அவனுடைய பட்டுப் போன்ற தலையைச் சின்னஞ் சிறு சீப்பால் வாரி விடுவதற்கு எனக்கு மிகவும் ஆசையாக இருக்கும். அவனுடைய கண்களுக்கு மையிட்டு அழகு பார்ப்பேன். நெற்றிக்குத் திலகமிடுவேன். விதவிதமான மெல்லிய பட்டுச் சொக்காய்கள் போட்டு அலங்கரித்து சந்தோஷப்படுவேன். அது ஒன்றுதான் அந்த வீட்டில் எனக்கு மகிழ்ச்சி தருவதாக இருந்தது.

அந்தச் சமயத்தில் கோமளவல்லி அம்மாள் சத்தம் போடுவது காதில் விழுந்தது. சமாசாரம் என்னவென்று தெரிந்து கொள்வதற்காகச் சென்றேன். வெள்ளி டம்ளர்கள் இரண்டைக் காணவில்லை என்பதற்காக முத்துவையும் வேலைக்காரியையும் அவர் கோபித்துக் கொண்டிருந்தார். "தொலைந்து போக வில்லை என்ருல் தேடிக் கண்டு பிடி" என்று முத்துவிடம் சொல்லிக் கொண்டிருந்தார். எனக்கு அவர்களைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

"இங்குதான் அம்மா இருக்கும். எங்கேயும் போய் விடாது. நான் கண்டு பிடித்து விடுகிறேன், பாருங்கள். யாராவது காப்பி சாப்பிட்டு விட்டு எங்கேனும் போட்டு விட்டுப் போயிருப்பார்கள். தேடினல் கிடைத்து விடும்" என்று சொல்லிச் சமாதானம் செய்தேன்.

"தேடிக் கண்டு பிடித்து விட்டால் சரிதான்" என்று சொல்லி விட்டுக் குழந்தையை வாங்கிக் கொண்டு அவர் தம் அறைக்குப் போய் விட்டார். நானும் டம்ளர் தேடும்வேட்டையில் தீவிரமாக ஈடுபட்டேன்.

வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தேன். ஒவ்வொரு அறையிலும் நாற்காலிகளுக்கு அடியிலும் மேஜைகளுக்கு அடியிலும் குனிந்து தேடி விட்டேன். எங்கும் அகப்படவில்லை. கலாவின் அறை, ரமேஷின் அறை எங்கும் பார்த்தாகி விட்டது. பத்மநாபனின் அறைதான் பாக்கி. அவருடைய அறைக்கு நான் செல்லுவதே யில்லை. ஆனல் அன்று காலை யாராரோ வந்திருந்தார்கள். அவர்களுக் கெல்லாம் காப்பி கொடுத்து விட்டு டம்ளரை எடுத்து வருவதற்கு முத்து மறந்திருப்பான் என்று நினைத்துக் கொண்டே பத்மநாபனின் அறைக்குச் சென்றேன்.

கதவை மெள்ளத் திறந்து கொண்டு தயக்கத்துடன் உள்ளே நுழைந்தேன். அறையில் பத்மநாபன் இல்லை. உள்ளே சென்று தேடினேன். பத்மநாபனின் மேஜைக்கடியில் ஒரு டம்ளர் இருந்தது. நான் சொன்னபடியே கிடைத்து விட்டதே என்று மகிழ்ச்சியாக இருந்தது. திருப்தியுடன் இன்னென்று எங்கேயாவது

இருக்கிறதா என்று தேடினேன். அந்த அறையில் ஒரு இரும்பு பீரோ இருந்தது. அதற்கருகில் ஏதோ பள பளவென்று மின்னிற்று. ஏதேனும் கண்ணாடித் துண்டாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டே அருகில் சென்றேன். அதன் அருகில் இன்னொரு டம்ளர் கிடந்தது. அதைக் கையில் எடுக்கும்போது காகிதப் பொட்டலம் ஒன்று கண்களில் பட்டது. பாதி பிரிந்திருந்த அந்தக் காகிதப் பொட்டலத்தையும் எடுத்தேன்.

அதில் பளபள வென்று ஜொலிக்கும் கற்கள் இருந்தன. சில மங்கலாகவும், சில கற்கள் பிரகாசமாகவும் பெரிதும், சிறிதுமாகவும் இருந்தன. எனக்கு அதிசயமாக இருந்தது. 'இவை என்ன? பார்த்தால் வைரம் மாதிரி



இருக்கிறதே! ஆனால் பத்மநாபன் இந்த மாதிரி வைரப் பொட்டலம் எதற்காக வைத்துக் கொண்டிருக்கிறார்? இவை வைரங்கள்தானா? போலிக் கற்களோ என்னவோ? ஆனால் இந்தப் பெரிய கல் எப்படிப் பள பள வென்று மின்னுகிறது! ஆனால் அது எப்படியிருந்தால் நமக்கென்ன? இந்தப் பொட்டலத்தை நன்றாக மடித்து மேஜைமேல் வைத்து விடுவோம்' என்று எண்ணிக் கொண்டே கீழே கிடந்த வைரங்களையும் எடுத்துப் பொட்டலத்தில் சேர்த்து மடித்து மேஜை மீது வைத்தேன்.

அதை வைக்கும் போது மேஜை மீது இருந்த ஒரு கவரின் மேல் என் பார்வை சென்றது. மேலே புதுச்சேரி முத்திரை தெரிந்தது.

'நல்ல வக்கீல் தொழில். புதுச்சேரியிலிருந்து வைரங்களைக் கடத்திக் கொண்டு வரும் போக்கிரிகளுக்குக் கூட வக்கீலாக இருக்க வேண்டும். அயோக்கியர்களுக்காகவும் வாதாட வேண்டும். யோக்கியர்களுக்காகவும் வாதாட வேண்டும்' என்று ஏதேதோ குருட்டு யோசனைகள் செய்தேன்.

இப்படி நினைத்துக் கொண்டே மறுபடியும் மேஜையைப் பார்த்தபோது எஸ். என். ஈசுவரமூர்த்தி என்று எழுதிய உறை ஒன்று இருந்தது. அந்தக் கையெழுத்து நிச்சயம் பத்மநாபனுடையது என்பதும் எனக்குத் தெரியும். ஆகவே, 'என்னைப் பற்றி ஏதேனும் எழுதி யிருப்பார்' என்று தீர்மானித்து விட்டேன்.

'அப்படிச் செய்வது சரியில்லை' என்றது அறிவு. 'பார்த்தால் தவறில்லை. அவர் சொல்வது மாத்திரம் சரியோ? அவரையே நம்பி யிருக்கும் இளம் பெண்ணை என்னை ஐம்பது வயதுக் கிழவருக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க நினைக்கிறாரே' என்றது மனம். அறிவுக்கும் மனத்துக்கும் நடந்த போராட்டத்தில் மனமே வெற்றிபெற்றது. கடைசியில், 'கவரை எடுத்துப் பார்ப்பது. ஒட்டி யிருந்தால் வைத்து விடுவது. ஒட்டப்படாமலிருந்தால் பார்ப்பது' என்று ஒருவாறு பொய்யாக மனத்தைச் சமாதானம் செய்து கொண்டு எடுத்துப் பார்த்தேன். உறை ஒட்டப்படாமல்தான் இருந்தது. மிகுந்த ஆவலுடன் கடிதத்தை எடுத்தேன். துடிக்கும் உள்ளத்துடன் கடிதத்தைப் படித்தேன். அன்று நான் அடைந்த மன வேதனையை ஈசுவரன்தான் அறிவார். கடிதத்தில் என்னைப் பற்றி ஒன்றும் எழுதப் பட்டிருக்கவில்லை. ஆனால் அதில் கண்ட விஷயம் என்னை ஒரேயடியாக உலுக்கி விட்டது.

'என்ன பயங்கரம்! இப்படிக் கூட இருக்க முடியுமா? அட கடவுளே! மனிதர்கள் எல்லோருமே பசுத்தோல் போர்த்த புலிதானா? சரி! சரி! பிறகு யோசித்து மூளையைக் குழப்பிக் கொள்ளலாம். டம்ளர் கிடைத்து விட்டது. நாம் கீழே போய் விடுவது தான் சரி. பத்மநாபன் வருவதற்கு முன்னால் ஓடிப்போய்விட வேண்டும். இவ்வாறு எண்ணிக் கொண்டே

இரண்டு அடிகள் எடுத்து வைத்தேன். அறைக் கதவு திறந்தது. பத்மநாபன் உள்ளே பிரவேசித்தார்.

ஐயோ! அன்று அவர் முகத்தில் தோன்றிய கோபத்தையும், வெறுப்பையும் இன்னும் என்னால் மறக்க முடியவில்லை. அவரைப் பார்த்ததும் என் உடல் ஜில்லிட்டுப் போயிற்று.

"எதற்காக இங்கு வந்தாய்?" என்று அடித் தொண்டையிலிருந்து கர்ண கடூரமாகக் கேட்டார் பத்மநாபன்.

"டம்ளர்கள் இருக்கிறதா என்று பார்க்க வந்தேன். இதோ கிடைத்து விட்டது. கீழே போகிறேன்" என்றேன். என் குரல் நடுங்கியது.

"என்ன செய்து கொண்டிருந்தாய்? நிஜமாகச் சொல்லிவிடு" என்றார்.

"இதோ இந்தப் பொட்டலம் உங்கள் பீரோவின் அருகில் கிடந்தது. கீழே இரண்டு மூன்று கற்கள் விழுந்து கிடந்தன. அதையும் எடுத்துப் போட்டுச் சரியாக மடித்து மேஜை மீது வைத்தேன்" என்றேன்.

அவர் அதற்குள் சற்று அமைதியடைந்து விட்டார். அமைதியை வருவித்துக் கொண்டாரென்று சொல்ல வேண்டும். "மேஜைமீது வைத்திருக்கும் காகிதங்களை எடுத்தாயா இந்து?" என்று என்னிடம் சற்றுத் தணிவான குரலில் கேட்டார்.

"இல்லையே?" என்று பொய் சொன்னேன். நானும் அதற்குள் நிதானமடைந்திருந்தேன்.

"சரி, போ!" என்றார். அதற்குமேல் நான் ஏன் அங்கு நிற்கிறேன்? பறந்தோடி விட்டேன்.

அன்று முழுதும் அந்தக் கடிதம் என் மனத்தில் வட்டமிட்டுக் கொண்டேயிருந்தது. வக்கிலாக இருக்கும் ஒருவர், சட்டத்தையெல்லாம் கரைத்துக் குடித்தவர் இப்படிப்பட்ட காரியங்களைச் செய்ய முடியுமா?

அன்று சுலோசனாவைப் பார்த்த போதெல்லாம் இதைப் பற்றி அவளிடம் சொல்லிவிட வேண்டுமென்று வாயெடுத்தேன். ஆனால் தைரியம் வரவில்லை. மறுநாளும் யோசித்துக் கடைசியில், 'சுலோசனாவுக்குக் கட்டாயம் சொல்ல வேண்டும். அது என் கடமை' என்ற முடிவுக்கு வந்தேன். இருந்தாலும் அவளுடைய தந்தையைப் பற்றிச் சொன்னால் அவளுக்கு வருத்தமாக இருக்குமே. என்னைப் பற்றித் தவறாக நினைக்கா விட்டாலும் தன் தந்தையைப் பற்றிக் குறைவாகக் கேள்விப்படும்போது யாராக இருந்தாலும் மனம் துடிக்குமல்லவா? எப்படியிருந்தாலும் அவளுக்குத் தெரிந்திருக்கத்தான் வேண்டும். இப்படித் தீர்மானித்தவுடனேயே அவளைத் தேடிச் சென்றேன்.

வராண்டாவில் பேச்சுக் குரல் கேட்டது. என் பெயர் காதில் விழுவே சற்று நின்றேன். பத்மநாபனின் குரல் கேட்டது. "அவள் என் அறையில் தனியாக ஏதோ செய்துகொண்டிருந்தாள். நான் இன்றுதான் பார்த்தேன். ரொம்பக் கபடமான பெண் போலத் தோன்றுகிறது. ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கிராமத்தில் வளர்ந்ததெல்லாம் இப்படித்தான் அற்ப புத்தியாக இருக்கும். நாமென்ன செய்யலாம்? உன்னை ஒன்றும் செய்யச் சொல்லவில்லை. அவள் சொல்வதையெல்லாம் நம்பி விடாதே."

என் மனம் என்ன பாடு பட்டிருக்கும்? பூமி அப்படியே பிளந்து என்னை விழுங்கிவிடக் கூடாதா என்று தோன்றிற்று. சுலோ கூறிய பதில் என் வேதனையை ஓரளவுக்குக் குறைத்தது.

"இல்லை, அப்பா! இந்துமதி ஒரு நாளும் அப்படியெல்லாம் செய்யவே மாட்டாள். உங்கள் அறைப் பக்கமே அவள் செல்வதில்லை. அம்மா ஏதோ பாத்திரங்களைக் காணவில்லை என்று சொல்லியிருக்கிறாள். இந்துமதி அவைகளைத் தேடி எடுத்துக் கொடுத்திருக்கிறாள். அவள் கபடு சூதறியாத பெண். அப்படியெல்லாம் இருக்கவே இருக்காது" என்றாள் சுலோ.

"அப்படியானால் ரொம்ப சந்தோஷம்" என்றார் பத்மநாபன். அவருடைய பூட்ஸின் ஒலி கேட்டது. நான் என்னுடைய அறைக்கு ஓடிச் சென்று கட்டிலின் மேல் விழுந்து விசித்து விசித்து அழுதேன். என் உள்ளம் வெந்து போயிற்று. "இறைவனே! இது மாதிரி விஷயங்கள் நடக்க ஏன் அனுமதிக்கிறீர்கள்? எனக்கு ஏன் இப்படித் துன்பம் ஒன்றன்மேல் ஒன்றாக வருகிறது?" என்றேன். அதற்குப் பதில் கிடைக்கவில்லை. (தொடரும்)

# ஆரோக்கிய வாழ்வு

### சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 17. ஆஸ்துமாவுக்கு ஐந்தாவது பயிற்சி

சர்வாங்காசன மகிமையைப் பற்றி ஏற்கெனவே நேயர்கள் ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளின் மூலம் அறிவார்கள். சர்வாங்காசன மகிமையைப் பற்றி மட்டும் சுமார் இருபத்தைந்து கட்டுரைகள் வரை முன்பு எழுதப்பட்டன. இன்னமும் எவ்வளவு வேண்டுமானாலும் எழுதிக் கொண்டு போகலாம். அவ்வளவு சக்தி வாய்ந்தது.

இப்பொழுது நாம் எடுத்துக் கொண்ட விஷயமாகிய ஆஸ்துமாவுக்குச் சர்வாங்காசனம் எந்த மட்டும் உதவியாய் இருக்கிறது என்பதைச் சிறிது பார்ப்போம்.

யோகிகள் சரியான பெயரையே இதற்குச் சூட்டியிருக்கின்றனர். சர்வ–அங்க–ஆசனம்–சர்வாங்காசனம், ஆம்! சர்வ அங்கங்களையும் ரக்ஷிக்கக் கூடிய ஆசனம்தான். அதில் சிறிதும் சந்தேகமில்லை.

நமது உடலிலுள்ள அபூர்வ சுரப்பிகளைப் பற்றி ஏற்கெனவே நேயர்கள் அறிவார்கள். அவைகளில் தைராய்ட் சுரப்பியின் வேலை அபரிமிதமானது. ஆங்கிலத்தில் 'மெடபாலிஸம்' என்று சொல்லுவார்கள். அதாவது உடலில் நடக்கும் இயக்கங்களுக்குப் பொதுவான பெயர். நமது உடலில் நடக்கும் வேலைத் திட்டங்கள் முழுதும் இந்தத் தைராய்ட் சுரப்பியைச் சார்ந்தே நடக்கின்றன. தவிர இதன் ஆரோக்கியத்தையும், சுகத்தையும், வேலையையும் பொருத்தே உடலிலுள்ள மற்ற சுரப்பிகளின் ஆரோக்கியமும் பொருந்தியிருக்கின்றன. எந்த விதத்தில் பார்த்தாலும் இந்த தைராய்ட் சுரப்பியின் துணையின்றி ஒரு மனிதன் மனிதனாக வாழவே முடியாது. நமது உடலிலுள்ள ஒவ்வொரு அணுவும் இதன் துணையுடன்தான் இயங்குகிறது.

அதைப் போலவே, ஆஸ்துமாக்காரர்களுக்கு இடைஞ்சல் செய்யும் மூச்சுத் திணறலும் நீங்குவதற்குத் தைராய்ட் துணை செய்கிறது. இது எப்படி, எவ்வாறு உதவி செய்கிறது என்பதைப்பற்றி விளக்குமுன், இந்த சர்வாங்காசனத்தைச் செய்யும் விதத்தை அறிவோம்.

சர்வாங்காசனம் செய்யும் விதம்:

விரிப்பில் மல்லாந்து படுக்கவும். இரண்டு கால்களைச் சேர்த்து வைத்துக் கொள்ளவும். கைகளைப் பக்கத்தில் உடலை ஒட்டியவாறு நீட்டி வைத்துக் கொள்ளவும்.

பின் மூச்சைப் பிடித்துக் கால்களை மேல் நோக்கித் தூக்கவும். பிறகு இன்னமும் சிறிது மூச்சைப் பிடித்துப் புட்டம், முதுகு இவைகளைத் தூக்கிக் கால்கள் தலைக்கு நேராக இருக்கும்படி செய்ய வேண்டும். பிறகு இது வரை தரையில் நீட்டியிருந்த கைகளை மடக்கி இடுப்புக்குக் கீழே கை கொடுத்துப் பிடித்துக் கொள்ளவும். பின் தரையில் கழுத்தும் பிடரியும் மட்டும் படும்படி வைத்துக் கொண்டு முதுகை மேல் நோக்கித் தூக்கிக் கால்கள் முகத்துக்கு நேராய் நிமிர்த்திக் கொள்ளவும். முகவாய்க் கட்டை மார்பில் அழுந்தும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். மூச்சைச் சாதாரணமாய் விடவும் இழுக்கவும் செய்யலாம். கால்களை மிக விரைப்பாக வைத்துக் கொள்ளக் கூடாது. மிக இலேசாகத் தொய்ய விட்டு விடவும் கூடாது. சாதாரணமாய் இருந்தால் போதும். வாய் மூடியே இருக்க வேண்டும்.

உடல் பளுவைக் கைகளே தாங்கும்படி விட்டு விடாமல் கைகள் இலேசாய்த் தாங்கும்படிக்குப் பார்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு கைகளே தாங்கும்படி செய்தால் அதிக நேரம் நிற்க முடியாது. கைகள் மரத்துப் போகும். வேண்டிய நேரத்துக்குச் செய்து முடித்த பின் ஆசனத்தைக் கலைக்க வேண்டுமானால் மிக மெதுவாகக் கலைக்க வேண்டும். இடுப்பைத் தாங்கும் கைகளை எடுத்து, மெதுவாகக் கால்களைக் கீழே கொண்டு வரவேண்டும். பின் கைகளைப் பக்கங்களில் வைத்துக் கொண்டு இளைப்பாறலாம்.

இந்த ஆசனம்எல்லோருக்கும்முதலில்எடுத்ததும் சரியாய்ச் செய்ய வரும் என்று சொல்ல முடியாது. அவரவர்களின் வயது உடல் நிலை முதலியவைகளை அனுசரித்துத்தான் செய்ய வரும். பொதுவாக மெலிந்த உடலும், சிறிய வயதினர்களாய் உள்ளவர்களுக்கும் இந்த ஆசனத்தைச் சுலபமாகச் செய்ய வரும். சிறிது கனத்த உடலுள்ளவர்களாலும், வயதானவர்களாலும் அவ்வளவு சுலபமாய் இந்த ஆசனத்தைச் செய்ய முடியும் என்று சொல்ல முடியாது. ஆனால் ஆஸ்துமா நோய்க்கு எல்லோரும் சமம்தான். அதற்குச் சிறுவர்கள் என்றும், வாலிபர்கள் என்றும், வயதானவர்கள் என்றும் பாரபட்சம் கிடையாது. யாரையும் பிடிக்கும். அதன் வேலைத் திறனைக் காட்டும். ஆனால் நாம்தான் இதனை விரட்ட விடா முயற்சியுடன் இந்த சர்வாங்காசனத்தைப் பழக வேண்டும்.

சிலருக்குக் கால்களைத் தூக்க வந்த பின் மேற்கொண்டு புட்டத்தையும், முதுகையும் தூக்க வராது. எவ்வளவுதான் மூச்சைப் பிடித்து முயற்சித்தாலும் கைகளால் தாங்கும் அளவுக்கு முதுகைத் தூக்க வராது. அவர்கள் மேற் கூறியவாறு விடா முயற்சியுடன் செய்து வருவார்களானால் சில நாட்களில் தன்னாலேயே தூக்க வரும். அதாவது விரிப்பில் மல்லாந்து படுத்துக் கொண்டு கால்களைத் தலைக்குமேல் எவ்வளவு தூக்க முடியுமோ அவ்வளவு தூரம் தூக்க வேண்டியது. பிறகு கால்களைக் கீழ்ப் பக்கம் கொண்டு வர வேண்டியது. இப்படி ஒவ்வொரு நாளும் ஆறு முதல் பத்து தடவைகள் செய்து வரலாம். இவ்வாறே பாதத்தைத் தரையைத் தொடாமல் பல தடவைகள் செய்து வந்தால் சில நாட்களில் இடுப்புக்கு பலம் ஏற்பட்டு மேற்கொண்டு புட்டத்தையும் முதுகையும் தூக்க வரும்.

சிலருக்கு ஓரே மூச்சாகக் கால்களை விரைப் பாக வீசி எழுப்பினால் தான் சர்வாங்காசனம் செய்ய வரும். இவ்வாறும் செய்யலாம். குற்ற மில்லை. எப்படியும் சர்வாங்காசன நிலை வர வேண்டும். அது தான் முக்கியம்.

சிலருக்கு முகவாய்க்கட்டை மார்பில் இடி படாது. வாயை ஆவென்று திறந்து முக வாய்க்கட்டையை மார்பில் இடிபட முயற்சிப் பார்கள். இவ்வாறு செய்யக் கூடாது. வாய் மூடியே இருக்க வேண்டும். சில நாள் சர்வாங் காசனத்தைப் பழகுவார்களானால் முதுகெலும் பின் பிடிப்பு விட்டுத் தானாகவே முகவாய்க் கட்டையுடன் மார்பு சேரும். எதையும் அவ சரப்பட்டுச் செய்யக் கூடாது.

சிலருக்குக் கைகளை இடுப்புக்கு அடியில் பிடிக்க வேண்டும் என்றால் புரியாது. சாதாரண மாய் இடுப்புக்கு அடியில் என்றால் புருஷ்டம் தானே இருக்கிறது என்று புருஷ்டத்தைத் தாங்கிக் கொள்வார்கள். இவ்வாறு செய்தால் இது விபரீதகரணி நிலையாகும். சாதாரண நிலையில் இடுப்புக்கு அடியில் புருஷ்டம்தான் இருக்கிறது. ஆனால், சர்வாங்காசன நிலையில் இடுப்புக்கு அடியில் முதுகுதான் இருக்கும். எனவே இடுப்புக்கு அடியில் கைகளால் முது கைப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்றுதான் அர்த்தம். இம்மாதிரி செய்ய ஆரம்பப் பயிற்சி யாளர்களால் முடியாது. முதுகெலும்பின் முதிர்ச்சியே இதற்குக் காரணம். பல காலம் தன்னிச்சையாய் இருந்த முதுகெலும்பை ஓரே நாளில் அல்லது சில நாட்களில் நம் இஷ்டப் படி வளைக்க முயற்சி செய்யக் கூடாது. அவ் வாறு செய்தவர்கள் தான் 'முதுகு வலிக்கிறது, எனக்குப் பிடித்து விட்டது' என்று ஆசனம் செய்வதையே விட்டு விடுவார்கள். எதிலும் நிதானம் வேண்டும். கஷ்டப்படும்படியாக எதையும் செய்யக் கூடாது. ஆசனம் செய் வது என்ற முடிவுக்கு வந்தாகி விட்டது. சிறிது சாவகாசமாய்த்தான் வரட்டுமே! அவசரப் பட்டு ஆசனத்தை விட்டு விடுவதை விட மெதுவாய்ச் செய்து, விடாமல் பழகிக் குணப் படுத்திக் கொள்வது மேலல்லவா!

முதலில் கைகள் எங்கு பிடிக்க முடிந்தாலும் பிடித்துக் கொள்ளுங்கள். பின் சரியான நிலையை மனத்தில் இருத்தி நாளுக்கு நாள் கைகளால் முதுகைப் பிடிக்க முயற்சி செய் யுங்கள். சரியானபடி முதுகைப் பிடிக்க வந்த பின் தான் முதுகும், கால்களும் நேராக வைக்க முடியும். அதுவரை நேராய் வைக்க முடியாது. கால்கள் தலைப்பக்கம் வளைந்தும், உடல் முன் பக்கம் வளைந்துமே இருக்கும்; பரவாயில்லை. நமக்குக் குணம்தான் பிரதானம். எப்படியும் முதுகு தூக்கியிருக்க வேண்டியது. இரத்தம் தைராய்ட் சுரப்பிக்குப் போக வேண்டியது. அதுதான் பிரதானமானது. நமக்குப் பிற ருடைய சபாஷ் பட்டமும் வேண்டியதில்லை; மெச்சுதலும் அவசியமில்லை. ஆஸ்துமாக்காரர் களுக்கு அதிலிருந்து விடுதலைதான் கிடைக்க வேண்டும். எனவே, குணம் எப்படிக் கிடைக்கச் செய்தால்தான் என்ன!

மேற் சொல்லியபடியும் சர்வாங்காசனத்தைச் செய்ய வராதவர்களுக்கு மற்றும் சில குறுக்கு வழிகள் இருக்கின்றன. அவைகளை அடுத்த இதழில் பார்ப்போம். [தொடரும்]




மகாராஷ்டிரக் கதை : மொழிபெயர்ப்பு : ஜெயமணி

உங்களுக்கு நான் கடிதம் எழுதி வெகு காலமாகி விட்டது போல் தோன்றுகிறது. உங்களுக்கு விவாகமாகிச் சரியாக இரண்டு வருஷங்கள் ஆகின்றன. நாளை நீங்கள் உங்கள் கல்யாணத்தின் இரண்டாவது ஆண்டு விழாவைக் கொண்டாடிக் கொண்டிருப்பீர்கள். அதாவது ஒரு புதிய இன்ப உலகில் சஞ்சரித்துக் கொண்டிருப்பீர்கள். இன்பத்தால் நிறைந்த உங்கள் மனம் சாஹித்யமற்ற சங்கீதத்தின் இனிமையில் லயித்து நடம் புரிந்து கொண்டிருக்கும்.

நாளை அதிகாலையில் சரோஜ் உங்களிடம் வந்து, "அன்பே, இன்றைய தினம் உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா!" என்று கேட்பாள். உடனே உங்கள் அழகிய முகத்தில் புன்னகை பூத்துத் தவழும்.

"நான் ஒரு பேராசிரியனாக இருப்பது உண்மைதான். எனினும், இந்த முக்கியமான தினத்தை, நாம் தாம்பத்திய வாழ்க்கையில் பூவும் மணமும் போல் ஒன்றுபட்ட இந்த நாளை நான் இந்த ஜன்மத்தில் எப்படி மறக்க முடியும்!" என்று கேட்பீர்கள்.

அவள் உங்கள் தோளின் மீது சாய்ந்து கொள்வாள். இருவரும் சிறிது நேரம் இன்பமயமான சிந்தனைகளில் ஆழ்ந்திருப்பீர்கள். "சரோஜ், நீ என்றென்றும் எனக்குச் சொந்தமானவள்" என்று பரவசம் அடைவீர்கள். "ஆமாம், நான் என்றென்றும் உங்களுடையவள்தான்" என்று அவள் உங்களுடன் கொஞ்சிக் குலாவுவாள்.

நீங்கள் நாளைக்கு நிச்சயமாக ஆபிஸிலிருந்து ரஜா எடுத்துக் கொண்டிருப்பீர்கள். சரோஜாவும் சமையலறையிலிருந்து ரஜா எடுத்துக் கொள்ளுவாள். சாப்பாட்டுக்கு கோஹினூர் ஹோட்டல் இருக்கவே இருக்கிறது. காலையில் சரோஜாவை மகாராஜா நந்தவனத்துக்கு அழைத்துச் செல்லுவீர்கள் அல்லவா! அங்குள்ள அழகிய ஊற்றுக்கு நிச்சயமாகச் செல்லுவீர்கள். பூரணமாக மலர்ந்த புஷ்பத்தின் உருவத்தில் அந்த ஊற்று எவ்வளவு கவர்ச்சியாக நிர்மாணிக்கப் பட்டிருக்கிறது பாருங்கள்! அதைச் சுற்றிப் பளிங்குக் கற்களால் செதுக்கப் பட்டுள்ள அன்னப்பட்சிகள் எவ்வளவு ஒய்யாரமாக நிற்கின்றன! ஊற்றிலிருந்து வட்ட வடிவமாகப் பரவி விழும் குளிர்ந்த தண்ணீர் மனத்தையும் குளிரச் செய்து இன்பமூட்டுவதாக இருக்கிறது. அதை அடுத்து மாபெரும் பச்சைக் கம்பளம் விரித்தது போன்ற புல் தரையின் வனப்பை எப்படி வர்ணிப்பது!

அந்த ஊற்றுத் தண்ணீரில் சரோஜ் குழந்தையைப் போல் விளையாடுவாள். "ஆஹா! இந்த செந்தாமரைப் புஷ்பம் எவ்வளவு அழகாக இருக்கிறது, பாருங்கள்! ஹிருதயத்தைப் போன்ற வடிவம் உள்ள அதன் இலைகளும், இலைகளில் மிதக்கும் முத்துக்களும் மனத்தை எப்படிக் கொள்ளை கொள்ளுகின்றன!" என்று கூறிப் பரவசம் அடைவாள்.

உடனே நீங்கள் அவள் கையைப் பிடித்துக் கொண்டு, "என் அருமை சரோஜ் ஒரு கவியாகி விட்டாளே" என்று பெருமிதம் கொள்வீர்கள்.

சரோஜ் கொஞ்சும் குரலில், "போங்கள்! உங்கள் முகஸ்துதி எனக்கு வேண்டாம். நான் இப்போது கவியைப் போல் என்ன சொல்லி விட்டேன்! கண்ணால் பார்த்ததைச் சொன்னேன்" என்று கொஞ்சுவாள்.

நீங்கள் மேலும் மேலும் விளையாட்டாக ஏதாவது சொல்லுவீர்கள். கடைசியாக சரோஜ் நாணிக் கொண்டே, "போதும், போதும். வெய்யில் அதிகமாகிறது. வீட்டுக்குப் போகலாம், வாருங்கள்" என்று சொல்லி உங்கள் கையைப் பிடித்து இழுப்பாள்.

சாப்பிட்டு விட்டு அன்று மாலை நீங்கள் ராம்சாகர் ஏரிக்குச் செல்லுவீர்கள். நீங்கள் இருவரும் கைகோத்துக் கொண்டு அந்த ஏரியின் அழகில் லயித்து விடுவீர்கள். மனத்தை மயக்கும் எழில் நிறைந்த இயற்கையின் சூழ் நிலையில் இருக்கும் அந்த ஏரியின் அழகை என்னவென்று சொல்லுவது! ஏரியின் சிற்றலை களின் சப்தம், அவை ஏதோ மூனு மூனுத் துக் கொண்டே ஒன்றையொன்று விரட்டிச் செல்லுவதுபோல் தோன்றும். அந்த ஆனந் தத்தில் உங்களுக்குக் கல்யாணமாகி இரண்டு ஆண்டுகள் ஆகின்றன என்ற எண்ணமே மறந்து விடும். கல்லூரியில் வாசிக்கும் இளம் காதலர்களாகவே மாறி விடுவீர்கள். இருவரும் சிரித்துக் கொண்டே ஓடியாடி விளையாடு வீர்கள். 'கோட்டைப் படிகளில் யார் முந்தி ஏறுகிறார் பார்க்கலாம்' என்று போட்டி போட்டுக் கொண்டு ஏறுவீர்கள்!

மாலையில் இருவரும் வானொலி சங்கீதத்தைக் கேட்டு மகிழ்வீர்கள். பிறகு சரோஜ் சிறிது சிந்தனையில் ஆழ்ந்து விடுவான். என்ன செய் வது என்று அவனுக்குத் தோன்றாது. அதன் பின் அவனுக்கு அந்தத் தந்தப் பெட்டி ஞாபகம் வரும். அந்தப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்து உங்கள் எதிரில் திறப்பான். இருவரும் பரஸ்பரம் எழுதிக் கொண்ட காதல் கடிதங்கள் அதில் இருக்கும். அதில் சில கடிதங்களில் உள்ள விஷயங்கள் சிரிப்பை உண்டாக்கும். சில கடிதங்கள் வேதனையைக் கொடுக்கும். மற்றும் சில கடிதங்களைக் கண்டு சரோஜும் நீங்களும் கண்ணீர் விடுவீர்கள். உடனே உங்கள் கண்ணீரை அவனும், அவ னுடைய கண்ணீரை நீங்களும் துடைத்துக் கொள்வீர்கள். வாழ்க்கையில் நிகழ்ந்த சம் பவங்களை நினைத்துக் கொண்டால் அப்படித் தான். பல்வேறு உணர்ச்சிகள் பொங்கி வரும். சந்தோஷம், துக்கம், நம்பிக்கை, ஏமாற்றம் எல்லாம் மாறி மாறி வரும். பழைய கஷ்டங் களை நினைத்துக் கொள்வதில்கூட இனந் தெரி யாத இன்பம் இருக்கிறது அல்லவா! எந்த மனிதரும் வாழ்க்கையின் இலட்சியங்களை அடைவதற்கு முன் கஷ்டங்களாகிற சோத னைக்கு உட்பட்டுத்தானே தீரவேண்டும்!

இந்தக் கடிதத்தை முழுவதும் நிதானமாக வாசிக்கும் பொறுமை உங்களுக்கு இராமற் போகலாம். 'இதென்ன தொந்தரவாக இருக் கிறது! ஒரு வருஷத்துக்குப் பிறகு இப்போது தான் இவளுக்கு என் ஞாபகம் வந்ததோ!' என்று நீங்கள் நினைக்கலாம்.

ஆனால் நான் என்ன செய்வேன்! என் மனத் தில் இன்று பெரும் புயல் அடித்துக் கொண் டிருக்கிறது. சென்ற வருஷம் முழுவதும் உங் களுக்கு நான் கடிதம் எழுதவில்லை என்பது உண்மையே. நீங்கள் எழுதிய பல கடிதங் களுக்கும் நான் பதில் எழுதவில்லை. அதற்காக உங்களுக்கு முதலில் என்மீது கோபம் கோப மாக வந்திருக்கும். இத்தனை கடிதங்களில் ஒன்றுக்காவது அவள் பதில் எழுதினளா என்று ஆத்திரப் பட்டிருப்பீர்கள். பிறகு, 'பாவம்! க்ஷயரோக ஆஸ்பத்திரியில் இருப் பவள் கடிதம் எழுதக்கூடிய நிலைமையில் இருக் கிறாளோ, இல்லையோ!' என்று உங்களை நீங் களே சமாதானப்படுத்திக் கொண்டிருப்பீர்கள். 'அவள் எனக்கு எழுதுவதற்கு என்ன இருக் கிறது!' என்று நீங்கள் எண்ணியிருக்கலாம்.

பிறகு, என்னைப் பற்றிச் சிந்திப்பதையே நீங்கள் விட்டிருக்கலாம். என்னை அடியோடு மறக்கவும் முயற்சித்திருக்கலாம்.

• • •

இவ்விதமெல்லாம் நான் உங்களுக்குக் கடிதம் எழுதுவது எனக்கே விசித்திரமாகத் தோன்றுகிறது. ஏனெனில், நான் எவ்விஷய மாக உங்களுக்கு எழுத விரும்பினேனோ அதைப் பற்றி இன்னும் எழுதவில்லை. நான் எழுத விரும்புவது பேனாவின் நுனியில் வரு கிறது. ஆனால், அந்த எண்ணம் காகி தத்தில் வரு முன் காய்ந்து விடுவது போல் தோன்றுகிறது! எனக்கு அதை எழுதத் தயக்கமாக இருக் கிறது. இந்த மனக் குழப்பத்துக் காக என்னை மன்னித்து விடுங்கள்.

அதாவது, நீங்கள் தயவு செய்து எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். அது மிகவும் சிறிய விஷயம்தான். இருந்தாலும் சொல்லுவதற்குத் தயக் கமாக இருக்கிறது. இனி தயக்கம் என்ன! இதோ சொல்லி விடுகிறேன்.

உங்களை ஒன்று வேண்டிக் கொள் கிறேன். நீங்கள் நாளைக்கு சரோஜை உங்களுடன் கூட்டிச் செல்லும் போது, அம்பசாரிக்குச் செல்லா தீர்கள். அந்த இடத்துக்கு நீங்கள் சென்றால், உங்கள் மனம் வேதனைக்கு உள்ளாகும். சந்தோஷமாகக் கழிக்க வேண்டிய தினத்தில் நீங்கள் என் பழைய சம்பவங்களை ஞாபகப்படுத்தி உங்களுக்கு வேதனையை உண்டாக் கும் இடத்துக்குச் செல்ல வேண்டும்!



உங்களுக்கு நினைவு இருக்கிறதா! அப்போது நாம் பி. ஏ. வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்தோம். ஒரு நாள்......ஏன், எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. அன்று ஜூலை மாதம் இருபதாம் தேதி. காலையில் சரோஜ் நம்மிருவரையும் அவளுடைய பிறந்த தினத்தை ஒட்டி இரவு சாப்பிடுவதற்கு அழைத்திருந்தாள். நான் ஏரிக்கு அப்பால் உள்ள மேடான ரஸ்தாவழியாக சைக்கிளில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தேன். ஏரியிலிருந்து குளிர்ந்த காற்று என் முகத்தில் அடித்துக் கொண்டிருந்தது. ரஸ்தாவில் இருந்த உயரமான மரங்களின் மீது மாலைக் கதிரவனின் பொற் கிரணங்கள் படர்ந்திருந்தன. பெண்கள் தண்ணீர்க் குடங்களுடன் ஏரிக்கரை மேட்டிலிருந்து கீழே இறங்கிக் கொண்டும் மேலே ஏறிக் கொண்டும் இருந்தார்கள். அவர்கள், மாலை வேளையில் நீல வானத்தைப் பின்னணியாகக் கொண்டு நடமாடும் அற்புதத் தங்கப் பதுமைகள்போல் காணப்பட்டனர்.

அந்தக் காட்சியைக் கண்டு நான் மெய்ம் மறந்து சென்று கொண்டிருக்கையில், என்னை யாரோ கூப்பிடும் சப்தம் கேட்டது. உடனே திரும்பிப் பார்த்தேன். நீங்கள் அதற்குள் என் அருகில் வந்து விட்டீர்கள். நீங்கள் சைக்கிளிலிருந்து இறங்கியபோது, எதிர்க் காற்றினால் உங்கள் தலையெல்லாம் கலைந்து கிடந்தது. என்னைப் பிடிப்பதற்காக நீங்கள் வெகுவேகமாக சைக்கிளில் வந்திருக்கிறீர்கள் என்பதை அறிந்துக் கொண்டேன். நான் மேலே சைக்கிளில் செல்ல முயற்சித்தபோது நீங்கள் என்னைத் தடுத்து விட்டீர்கள். 'வா, மங்களா! சிறிது நேரம் ஏரிக்கரையைச் சுற்றி விட்டுப் பிறகு செல்லுவோம்' என்று சொன்னீர்கள். உங்கள் பேச்சில்தான் எவ்வளவு கவர்ச்சி!

அப்போது நம் இருவர் கண்களும் சந்தித்தன. நம் இருவர் முகங்களிலும் புன்னகை தவழ்ந்தது. அங்கிருந்த முள் வேலியில் உங்கள் சைக்கிளைச் சாத்தினீர்கள். என் சைக்கிளுக்குப் பூட்டு இல்லாததால், உங்கள் சைக்கிளில் இருந்த சங்கிலியால் இரண்டு சைக்கிள்களையும் சேர்த்துப் பூட்டி விட்டுச் சென்றோம்.

ஏரிக்கரை வழியாக நாம் சென்றபோது எவ்வளவு ஆனந்தமாக இருந்தது! அங்கிருந்த புற்கள் மாலைக் காற்றில் நடுங்குவது போல் தோன்றிய காட்சி இன்றும் என் மனத்தில் அப்படியே பதிந்திருக்கிறது. அப்போது எனக்கு ஏரியில் மூழ்கி நீந்த வேண்டும் போல் இருந்தது. நாம் ஒரு நல்ல இடத்தைத் தேடி அங்கு உட்கார்ந்தோம். ஏரித் தண்ணீருடன் கலந்து வந்த காற்றினால், என் தேகத்தின் மீது சந்தோஷ அலைகள் பாய்வது போல் இருந்தன.

மாலைக் கதிரவன் சிறிது சிறிதாக மேற்றிசையில் மறைந்து கொண்டிருந்தான். வானத்தில் ஏக காலத்தில் சிவப்பு, நீலம், மஞ்சள், பச்சை, ஊதா, ஆரஞ்சு வர்ணங்கள் தோன்றி மனத்தைக் கொள்ளை கொண்டன. அந்த வர்ணங்களுக்கிடையே திட்டுத் திட்டாக வெண் மேகக் கூட்டங்கள் மிதந்து சென்றன. அந்த ஏரித் தண்ணீரில் தெரிந்த அந்த மோகனக் காட்சியின் பிரதி பிம்பம் கவிஞர்களும் வர்ணிக்க இயலாததாக இருந்தது.

அந்த அற்புதமான காட்சியின் போதை ரசத்தை நாம் பருகப் பருக நம்மை நாம் மறந்தோம். அப்போது நாம் ஒரு வார்த்தைகூடப் பேசிக் கொள்ளவில்லை. நாம் எழில் ததும்பும் இயற்கையோடு மௌனமாகப் பேசிக் கொண்டிருந்தோம். அந்தக் காட்சியுடன் நாம் ஐக்கியமடைந்து விட்டோம். நான் ஓர் ஓடையானேன்; நீங்கள் வானமாக மாறி விட்டீர்கள்! அப்போது அந்த மோகனக் காட்சியுடன் விளங்கும் வானத்திலிருந்து ஒரு பட்சி வருவது போல் தோன்றியது. அது உங்களையும் என்னையும் விழுங்கித் திரும்பவும் வானத்தை நோக்கி உயரே, உயரே பறந்து சென்றது.

கொஞ்சம் கொஞ்சமாக இருள் சூழ்ந்தது. அப்போது ஏரித் தண்ணீர் மீது யாரோ கறுப்புப் போர்வையை விரித்தனர். மேகங்கள் தேய்ந்து மறைந்தன. வானத்தில் தோன்றிய வர்ண ஜாலங்கள் இருந்தவிடம் தெரியாமல் கரைந்து விட்டன. மரங்கள் கரு நிறமாக மாறின. இயற்கையின் அழகு யாவும் இருளால் மறைக்கப்பட்டன.

உலகம் முழுவதும் அந்தகாரம் சூழ்ந்து, எங்கும் நிசப்தம் நிலவியபோதுதான் நாம் திடுக்கிட்டு எழுந்தோம். அப்போது நீங்கள் "வா போகலாம்" என்று சொன்னதைத் தவிர வேறெதுவும் பேசவில்லை. நாம் மௌனமாகத் திரும்பி வந்தோம். என் சைக்கிளை நான் எடுத்துக் கொண்டேன். உங்கள் சைக்கிளை நீங்கள் எடுத்துக் கொண்டீர்கள். பிறகு என்னை ஒரு முறை திரும்பித் தலையிலிருந்து கால்வரை அன்பு பொங்கப் பார்த்தீர்கள். இருவரும் பேசாமல் பிரிந்து சென்றோம்.

* * *

சென்ற வருஷம் உங்களுக்குக் கல்யாணமாகி ஒரு வருஷம் ஆகியிருந்தது. அந்த முதல் வருஷ விழாவைக் கொண்டாடுவதற்காக நீங்கள் சரோஜுடன் அந்த ஏரிக் கரைக்குச் சென்று, நாம் எந்த இடத்தில் உட்கார்

## நெல்லை தேசபக்தர்

புகழ்பெற்ற தியாகியும், சிறை சென்ற தேசபக்தரும், நெல்லை ஜில்லாவில் மகாத்மாஜி, நேருஜி போன்ற தலைவர்களின் சுற்றுப் பிரயாணங்களை முன்னின்று நடத்திய கனவானும், "திருநெல்வேலி ஹல்வா" என்று புகழ்பெற்ற லாலாக் கடையின் அதிபரும், விளம்பரத்திலும் பதவிகளிலும் பிரியப்படாத மெய்யான காங்கிரஸ்வாதியுமான ஸ்ரீ ஜகன் சிங் ஏப்ரல் 13-ம் தேதி மாலை மீனாட்சிபுரம் தமது இல்லத்தில் காலமானார் என்று தெரிந்து வருந்துகிறோம். அவருடைய குடும்பத்தாருக்கு நமது அநுதாபம் உரியது.

திருந்தோமோ, அதே இடத்தில் சரோஜாவுடன் வெகுநேரம் உட்கார்ந்திருந்ததாகச் சென்ற வருஷம் எழுதியிருந்தீர்கள். உங்களுக்கு உட்காருவதற்கோ, பொழுது போக்குவதற்கோ வேறு இடம் கிடைக்கவில்லையா! சரோஜாவை சினிமா போன்ற வேறு காட்சிகளுக்கு அழைத்துச் சென்றிருக்கக் கூடாதா!

இந்த க்ஷயரோக ஆஸ்பத்திரியில் இருந்து வரும் என் கற்பனைக் கண்முன் ஏரிக்கரையின் இணையற்ற அழகு தத்ரூபமாகக் காட்சியளிக்கிறது. நாமிருவரும் சேர்ந்து உட்கார்ந்து கொண்டு, அந்த இணையற்ற இயற்கை எழிலை இன்றும் அனுபவிப்பதுபோல் தோன்றுகிறது. அக் காட்சி பட உருவமாக என் மனத்தில் அழியா வண்ணம் பதிந்திருக்கிறது.

* * *

நான் இருக்கும் க்ஷயரோக சிகிச்சை சாலைக்கும் இந்த உலகத்துக்கும் வெகு தூரம் இருக்கிறது. உலகத்துக்கும் எனக்கும் உள்ள தூரம் ஒவ்வொரு நாளும் அதிகமாகிக் கொண்டு வருகிறது. என்னுடைய வாழ்க்கை காய்ந்து கருகி விட்டது. என் எதிரில் கண்ணுக்கு எட்டிய வரையில் பாலைவனத்தைத் தவிர வேறு எதுவுமில்லை. போதை கொள்ளச் செய்யும் பழைய சம்பவங்கள்தான் இப்போது எனக்கு ஜீவாம்ருதமாக இருந்து வருகின்றன. லோபி பணம் ஒன்றையே உயிராகக் கருதி அதை இறுகப் பற்றிக் கொண்டிருப்பது போல, நான் அந்தப் பழைய சம்பவங்களையே இறுகப் பற்றிக் கொண்டிருக்கிறேன்.

நீங்கள், உங்கள் கல்யாண ஆண்டு விழாவை ஆனந்தமாகக் கொண்டாடிக் கொண்டிருக்கும் இச் சமயத்தில் உங்களுக்கு இந்த விசித்திரமான கடிதத்தை எழுதுகிறேன். இக் கடிதம் உங்களுக்கு மிகுந்த வேதனையை உண்டாக்கலாம். இருந்தாலும் நீங்கள் என்னை மன்னிப்பீர்களா! என் மனத்திலிருந்த தாபங்களையெல்லாம் இக் கடிதத்தில் கொட்டி விட்டேன். என்னை மறந்து விடுங்கள். எப்போதாவது கூட இனி என்னைப் பற்றி நீங்கள் நினைக்க வேண்டாம். உங்கள் வாழ்க்கையில் அந்தகைய இடம் பெறுவதற்குக்கூட எனக்கு உரிமை இல்லை. என்னைப் போல் தாங்கள் பழைய சம்பவங்களின் நினைவில் வாழ வேண்டிய துர்ப்பாக்கியசாலியாகி விடவில்லை என்பது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. அந்த மகிழ்ச்சியில் எனக்கு ஏற்படும் இன்பத்தை என்னால் எழுதிவிட முடியாது.

— மங்களா.

## டி.கே.சி.யின் கடிதங்கள்

மீனம்பாக்கம்
நமஸ்காரம். 17—2—41

பொதுவாகக் கவிகள் என்றால் அவர்கள் உலகத்து விஷயங்களையெல்லாமே அனுபவிக்கப் பிறந்தவர்கள் என்று சொல்லலாம். மற்றவர்களுக்கு ரூபாயைத் தவிர மற்றவைகள் எல்லாம் அப்படி அப்படித்தான். தாமரை மலர் அழகாய் இருக்கிறது—சரி அதற்கென்ன செய்ய வேண்டும் என்று சொல்லுகிறாய்; அடடா சந்திரன் உதிப்பதைப் பார்த்தால் இன்று தான் முதல் முதலாக உலகத்துக்குச் சந்திரன் வருகிறது (வால் வெள்ளி போல) என்று சொல்லத் தோன்றுகிறது—இது மறதி அல்ல, வம்பு; சூரியன் அஸ்தமிக்கும் போது ஐயோ முழுகிப் போய் விட்டதே, இனி நமக்குச் சூரியனே கிடையாது போல் இருக்கிறதே என்ற சோகம் உண்டாகிறது. இது சிறுபிள்ளைத் தனங்கூட அல்ல; வெறும் பைத்தியம்; சுத்தக் கிறுக்குத்தனம்.

இதிலிருந்து உலகத்தாரை இரண்டு விதமாகப் பிரித்து விடலாம் அல்லவா! ஒன்று கவிஞர்; இரண்டாவது—குருடர்.

கவிஞர்களுக்குள் ஒரு ஒற்றுமை உண்டு; மற்றவர்களுக்குள்ளும் ஒற்றுமை உண்டுதான்!

தாகூரும் காளிதாஸரும் கவிஞர்கள். அவர்களை அனுபவிக்கக் கூடியவர்களும் ஒருவகையில் கவிஞர்கள்தான்: அல்லாத பக்ஷம் எப்படி கவிஞர்களுடைய இதய பாவத்தை உணர முடியும்.

தாகூரும் காளிதாஸரும் இதய உணர்ச்சியால் ஒரு இனத்தைச் சேர்ந்தவர்கள். இருவருக்கும், கடல், மலை, வானம், மரம், சூரியன், சந்திரன், குழந்தை, பெண், வீரன், கொம்பன் (யானை) மான் எல்லாம் மனசைக் கவர்ந்து களிப்பை உண்டு பண்ணுகிற பொருள்கள்.

திமிங்கிலத்தின் சுபாவத்தை நாம் எல்லாரும் வாசித்து அனுபவித்திருக்கிறோம். தாகூரும் அனுபவித்தவர்தான். காளிதாஸரும் அனுபவித்தார் என்று தெரிய வரும்போது ஒரு சகோதரத்துவ உணர்ச்சி உண்டாகி நமக்கே ஒரு பலம் புதிதாக ஏற்பட்ட மாதிரி இருக்கிறது.

"உடன் பிறப்போடு தோன் வலி போய் விடும்" என்று ஔவை மூதாட்டி சொல்லி யிருக்கிறாள்.

அடிக்கடி நாம் எதையாவது மேகத்தையோ, தண்ணீர் கடகட என்று ஓடுவதையோ பார்த்துச் சந்தோஷப்பட்டு விடுகிறோம். சில நிமிஷம் பார்த்துக் கொண்டே நின்றுவிடுகிறோம். அப்போது ஒரு பயம்—யாராவது அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் நம்மைப் பார்த்து விடுவார்களோ என்கிற பயந்தான். யாராவது கிட்ட வந்து என்னத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய் என்று கேட்டுவிட்

டால் "ஒன்றும் இல்லை, சும்மாதான் நின்றுகொண்டிருந்தேன்" என்று அசடு வழியச் சொல்லித் தீர்க்கிறது. இந்த லஜ்ஜையை யெல்லாம் ஒருவாறு அடக்கிக் கொண்டு வீட்டுக்குப் போகிறோம். தாகூரை ஷெல்பிலிருந்து எடுத்து வாசிக்கிறோம். அப்போது தெரிகிறது, அவர் நம்மைவிட ஏமாளி என்று. நம்மைவிட எத்தனையோ மடங்கு மேகத்தையும் தண்ணீர் ஓட்டத்தையும் பார்த்து அனுபவித்து விட்டதாகத் தெரிகிறது. பைத்தியத்திலும் நமக்கு ஒரு அண்ணு ஏற்பட்டு விட்டார் என்று தெரிய வருகிறது. எப்படியும் அது நமக்கு ஒரு பக்கபலந்தானே.

தாகூரை அனுபவிக்காதவர்கள், 'அவர் விளங்காததை — விஷயம் அல்லாததை எழுதிக் கொட்டுகிறார்' என்று கேவலமாகப் பேசுகிறார்கள். ஆனால் காளிதாஸனைப் பற்றிப் பேசும்போது மாத்திரம் 'அடடா! என்ன கவித்துவம்!' என்றெல்லாம் சொல்லுவார்கள். அப்படிச் சொல்லுவதெல்லாம் கிளிப்பிள்ளை பாடம் தான். 'அவாள் சொன்னார்கள்; இவாள் சொன்னார்கள்' என்ற கணக்குத்தான் கடைசியில் வந்து சேரும்.

விஷயத்தை அனுபவிக்கிறது பொதுவாகப் பலருக்கும் முடியும். ஆனால் அதன் பாவ உருவத்தைக் கண்டனுபவிப்பது வெகு சிலருக்கே முடிகிற காரியம். மேலே சொன்ன காளிதாஸ அபிமானிகள் கவியைக் கண்டுவிட்டோம் என்று சொல்லுவது வெறும் ஏமாளித்தனம்தான்.

தாங்கள் உருவத்துக்குப் போகாமல் விஷயத்தையே எடுத்துக் காட்டி காளிதாஸர், தாகூர் எப்படி அனுபவித்திருக்கிறார்கள் என்று விளக்குகிறீர்கள். கொஞ்சம் சாவகாசமாய்ப் பார்த்தால் அனுபவ உணர்ச்சி தட்டுப்படும். தாகூரை அப்படியெல்லாம் எளிதில் தள்ளிவிட முடியாது என்று தென்படும்.

காளிதாஸர் காலத்திலிருந்ததை விட இப்போது உலகம் எவ்வளவாகவோ விரிந்திருக்கிறது. ஸையன்ஸ்களையும் சேர்த்துக்கொண்டால் சொல்லவே வேண்டாம். இவ்வளவையும் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசைதான் தாகூருக்கு.

In one salutation to Thee, O God!
Let all my senses spread out
And touch this world at Thy feet

—*Gitanjali 103*

காளிதாஸரும் அப்படியே ஆசைப்படுவார்; சந்தேகம் இல்லை. காளிதாஸர் தற்காலத்து ரஸிகர்களைக் கண்டு பெருமைப்பட வேண்டியதுதானே.

பொதுவாய் புராணக் கதைகளையும், இதிகாசங்களையும் வாசிக்கும்போது அவைகளில் சிருஷ்டி தத்துவம் ஒன்று இருக்கிறது என்பதை மறந்து விட்டு, ஏதோ London Times நிருபர் பார்த்ததைக் கேட்டதை அப்படி அப்படியே எழுதுகிற மாதிரி எழுதியதுதான் என்று எண்ணி நம்மவர் தங்களுடைய சொந்த சிருஷ்டி தத்துவத்துக்குத் தொழில்பட இடம் கொடுப்பதில்லை. ஆகவே கதையில் முக்கியமாகக் கவனித்து அனுபவிக்க வேண்டிய அம்சத்தைக் கவனியாமலும் அனுபவியாமலும் விட்டுவிடுகிறார்கள். கம்பரும் இந்தக் கஷ்ட நஷ்டத்துக்கு உள்ளாகிறவர்தான். பைபிளை வாசித்தால், முக்கியமாகத் தமிழில் வாசித்தால், கம்பருடைய சிருஷ்டி தத்துவத்துக்குள் பிரவேசிப்பது மிகவும் எளிதாயிருக்கும்.

பேரண்டத்தில் ஒவ்வொரு வஸ்துவும் இதர வஸ்துக்கள் எல்லாவற்றோடும் இழுக்கிற சக்தியினாலோ நெருக்குகிற சக்தியினாலோ இணைக்கப்பட்டு பேரண்டம் (Universe) ஒரே தத்துவம்தான் என்று சொல்லும்படியாக இருக்கிறது.



கரூர் தாலுக்கா, வாங்கல் பழையூர் பிரபல மிராசுதாரும், கரூர் மில்ஸ் டைரக்டருமான ஸ்ரீ என். ஷண்முகம் பிள்ளை அவர்களின் பௌத்திரி சௌ. தனபாக்கியத்திற்கும் வாங்கல் ஸ்ரீ என். வி. சுப்பிரமணியம் அவர்கள் சகோதரர் ஸ்ரீ வி. சதாசிவத்திற்கும் சென்ற 25-3-55ல் வாங்கல் மணமகன் இல்லத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. அன்று ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்களின் இன்னிசை நடைபெற்றது. திருமணத்திற்கும் வரவேற்புக்கும் பல பிரமுகர்களும், வியாபாரிகளும், உறவினர்களும், நண்பர்களும் விஜயம் செய்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க சதாசிவம் - தனபாக்கியம்



மூன்று காரியங்களையும் சாதிப்பது கால்கேட் முறையே!
உங்கள் வாய்த் துர்நாற்றத்தை அகற்றுகையில்
உங்கள் பற்களை சுத்தி செய்து
அவற்றை சொத்தையாகாமல் தடுக்கிறது
COLGATE
COLGATE RIBBON DENTAL CREAM

# ரவிசந்திரிகா

## 3. மனம் எனும் மாயை!



இந்தப் பரந்த உலகில் எல்லா மனிதர்களும் ஒரே மாதிரி நல்லவர்களாகவே இருந்து விடக் கூடாதா? சில மனிதர்கள் ஏன் துஷ்டர்களாக இருக்க வேண்டும்? சிலர் ஏன் வேண்டாதபடியெல்லாம் நடந்து கொள்ளுகிறார்கள்?—என்பன போன்ற கேள்விகளுக்கெல்லாம் யாரால் பதில் சொல்ல முடியும்? இயற்கை யென்றும், நியதி யென்றும் சொல்லித் தீர்த்துவிட வேண்டுமே தவிர, நம்முடைய சாதாரண அறிவுக்குத் திருப்தி தரக்கூடிய விதத்தில் விடை சொல்ல முடிகிறதில்லை.

பூஞ்செடிகள் அனைத்தும் ஏன் ஒன்று போல் இருப்பதில்லை? சில செடிகளில் மட்டும் நல்ல வாசனையோடும் வர்ண அழகோடும் கூடிய மலர்கள் பூக்கின்றன. வேறு சில செடிகள் கண்ணை மட்டும் கவர்கின்றன; வாசனையோ, அனலாக இருக்கிறது. சில மலர்களில் வாசனை நெஞ்சை அள்ளுகிறது. ஆனால் வர்ணமோ கண்ணைக் குத்துகிறது. மரங்களைத்தான் பாருங்களேன். சில மரங்கள் நேராக வளர்கின்றன. சில கொம்பும் கிளைகளுமாகப் படர்ந்து நிற்கின்றன. இன்னும் சிலவோ வளரும் போதே கோணலும் மாணலுமாக முண்டு முடிச்சுக்களோடு எழுகின்றன. இதெல்லாம் ஏன்? ஒரே தோட்டத்தில் ஒரே சூழ்நிலையில் ஒரே மாதிரி உரத்தை உட்கொண்டு வளர்கிற மரஞ் செடி கொடிகளிலேதான் எத்தனை வித்தியாசம்?




மனித மனங்களும் இப்படியேதான்! அவற்றின் கோணல்களை யெல்லாம் வகைப் படுத்திக் காரணம் சொல்வது என்றால் அது முடிகிற காரியமில்லை! 'மனம் எனும் மாயை' என்றுதானே சொன்னார் தாயுமானவர்!

அப்புலிங்கம் இம்மாதிரிச் சிந்தனைகளிலே அன்று ஆழ்ந்து போனான். ஏற்கனவே தத்துவ விசாரணைகளில் கொஞ்சம் நாட்டம் உடையவனாதலால், அன்றிரவு முழுதும் அவன் உறங்கவே இல்லை. மனம் எனும் மாயை பற்றித் தான் சிந்தித்துக் கொண்டிருந்தான். அதிலும் நாகரத்தினத்தைப் பற்றி நினைத்த போது, அந்த மனிதனின் இதய மலரில் எத்தனை தூரம் அனல் - வாடை வீசுகிறது என்பதை நினைக்க நினைக்க அப்புலிங்கத்துக்குப் பயமாகவே இருந்தது!

* * *

அன்று மாலை ரவீந்திரனைப் பின் தொடர்ந்து செல்லுவோமா அல்லது நரசிம்மச் செட்டியாரின் கடையிலே தினப் பத்திரிகையை விட்ட இடத்திலிருந்து தொடருவோமா என்று கடை வீதியில் நின்று யோசித்துக் கொண்டிருந்தான் அல்லவா அப்புலிங்கம்; அவனுடைய முதுகை யாரோ வந்து ஒரு தட்டுத் தட்டினார்கள். பதறிப் போய்த் திரும்பிப் பார்த்தால், நாகரத்தினம் பின்னால் நின்று கொண்டு 'கொல்' என்று சிரித்தான்!

"என்ன சுவாமிகளே! இப்படி நடுத்தெருவில் நின்று மோனத் தவத்தில் ஆழ்ந்து விட்டீர்கள்?" என்று கேட்டான் நாகரத்தினம்.

"மோனமும் இல்லை. தவமும் இல்லை. ஒரு அதிசயமான சமாசாரம். அதிலிருந்து மீளுவதற்குள் இன்னொரு அதிசயமாக நீ வந்து நிற்கிறாய்!" என்றான் அப்புலிங்கம். நாகரத்தினம் பதில் பேசாமல் அழுத்தமாக நின்று, அப்புலிங்கத்தையே ஆராய்ந்து பார்த்தான்!

"நாகரத்தினம்! நீ எப்பொழுது மாதுங்காவிலிருந்து இங்கு வந்து சேர்ந்தாய்?" என்று அவனைக் கேட்டான் அப்புலிங்கம்.



"அது ஒரு பெரிய கதை. பம்பாய் சேட்டுக்கும் நமக்கும் ஒத்து வரவில்லை. ஒரு நாள் அவனுடைய லெட்டர் பேப்பரிலேயே ஒரு காகிதத்தைக் கிழித்தேன். நம்முடைய ராஜிநாமாவை அதிலேயே எழுதி அதை அவன் முகத்திலேயே எறிந்துவிட்டுவந்துவிட்டேன்!"

"அப்படியானால் இப்பொழுது திருச்சியில்தான் இருக்கிறாயா?" என்று அப்புலிங்கம் கேட்டான்.

"லால்குடியில், மாமனார் வீட்டில்!"

"லால்குடியிலா?"

"ஆமாம்!"

"உத்தியோகம்?"

"உத்தியோகம், சுக ஜீவனந்தான். அதான் சொன்னேனே அப்பா, மாமனார் வீட்டில் என்று!"

இப்படிச் சொல்லிய வண்ணம் அப்புலிங்கத்தின் முதுகில் இன்னொரு தட்டுக் கொடுத்துக் கொண்டே, நாகரத்தினம் தன்னுடைய முப்பத்திரண்டு பல்லும் தெரியும்படியாகச் சிரித்தான். அந்தப் பற்களில் நன்றாக வெற்றிலைக் காவி ஏறிப் போய் இருந்தது. புகையிலை போட்டுப்போட்டுக் கறுப்பும் சிவப்புமாக, இருவர்ணச் சித்திரமாய் இருந்தது. பல்வரிசை! முப்பத்திரண்டுபல்லில் ஊடே முன் பல் மட்டும், பொய்ப்பல் போலிருக்கிறது. தங்கம் கட்டிப் 'பள பள' என்று 'டால்' வீசிக் கொண்டிருந்தது!

"அதெல்லாம் சரி, அப்புலிங்கம்! நீ ஏன் இப்படி மெய்மறந்து போய் நடுத்தெருவில் நின்று விட்டாய்? ஞாயிற்றுக் கிழமைக் கூட்டத்தில் யாராவது பேரழகியை, சுந்தரியைக் கண்டு விட்டாயா? நீ இன்னும் தனிக்கட்டைதானே?" என்று கேட்டான் நாகரத்தினம்.

அப்புலிங்கத்துக்கு இந்த வார்த்தை கொஞ்சமும் பிடிக்கவில்லை.

"நாகரத்தினம்! எத்தனை நாள் ஆனாலும் நீ பழைய ஆளாகத்தான் இருக்கிறாய் போலிருக்கிறது—பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது இருந்த......".

"ஆமாம். நாங்கள் எல்லாம் மார்க்கண்டேயர் கூட்டம். என்றும் பதினாறு வயது எங்களுக்கு..." என்றான் நாகரத்தினம்.




"சௌடால்த் தனம்" எல்லாம் அப்படியே! இருக்கிறதே இன்னும்—" என்றான் அப்புலிங்கம்.

"மன்னிக்க வேண்டும், சுவாமிகளே! தாங்கள் பொன்மலை பக்தஜன சபையின் உப தலைவர் என்பதையும், மலைக் கோட்டைத் திருப்புகழ் பக்தர் கழகத்தின் காரிய

தரிசி என்பதையும் மறந்தே விட்டேன். அதற்காக மன்னிப்பு! இப்பொழுது தயவு செய்து சொல்லலாமா, தாங்கள் இப்படி மெய்சிலிர்த்து நிற்கும்படியான பேரதிசயம் என்ன நடந்தது, இந்த மாலை வேளையில், திருச்சிப் பெரிய கடை வீதியிலே என்று—"

இவனிடம் இப்படி மாட்டிக் கொண்டோமே என்றுபட்டது அப்புலிங்கத்துக்கு. ஆனாலும் அடக்கத்தோடுதான் பேசினான். புல்லாங்குழலை ஈடு வைக்க வந்த மனிதனைப் பற்றி ஆரம்பித்தானோ இல்லையோ, நாகரத்தினம் இடைமறித்தான்.

"புல்லாங்குழல் ஆசாமிதானே? ஒடிசலாக, மெல்லிசான மஸ்லின் ஜிப்பா, ராஜபார்ட் முடி, குறுகுறு என்று எதையோ பறிகொடுத்து விட்டுத் தேடுகிற மாதிரியான பார்வை, படபடப்பான பேச்சு..."



"ஆமாம். அவரே தான். ஆயிரத்தில் ஒரு மனிதர் என்று தோன்றுகிறது" என்று சொன்னான் அப்புலிங்கம்.

"பேஷ்! உன்னுடைய புத்தியும் இவ்வளவுதானா! தலையெழுத்து! அப்பனே! திருப்புகழ், தேவாரம் என்று சேர்த்து விட்டாயே ஆசாமிக்குத் தலையில் கொஞ்சம்......"

வார்த்தைகளை முழுதும் முடிக்காமல் மீண்டும் அப்புலிங்கத்தின் முதுகை — தலையை இல்லை, முதுகைத்தான்—மீண்டும் தட்டினான் நாகரத்தினம்.

"ரவீந்திரன் என்று அவர் பெயர். அவரையா இப்படியெல்லாம் பேசுகிறாய், நாகரத்தினம்!" என்று ஆவலும் குழப்பமுமாகக் கேட்டான் அப்புலிங்கம்.

"சாக்ஷாத் மகாராஜராஜஸ்ரீ மகாகனம் பொருந்திய திருவாளர் ரவீந்திரப் பைத்தியானந்த பரம குரு அவர்களைப் பற்றித்தான் சொல்லுகிறேன். இந்த ஊரில் வேறு யார் அப்படி உண்டு? அப்படிப்பட்ட 'ஹாஸ்' இன்னொன்று நடமாடினால் இந்த உலகம் தாங்குமா, சுவாமிகளே!"

இதற்கு என்ன பதில் சொல்வது என்று அப்புலிங்கத்துக்குத் தெரியவில்லை. தலை சுற்றியது. நாகரத்தினம் தொடர்ந்து பேசினான்.

"அப்புலிங்க மகா புருஷத் திருப்புகழ் தாசரே! அந்த ரவீந்திரன் யார் என்று தெரியுமோ உங்களுக்கு?"

"சொல்லப்பா. ஏன் என்னையே திரும்பத் திரும்பக் கேட்கிறாய்?"

"ஓகோ, நைஷ்டிக பிரும்மச்சாரியோ? அதனால்தான் உள்ளத்தில் சினம் அடங்கவில்லை! சரி......சரி......தெரிந்து கொண்டேன். இப்பொழுது சொல்கிறேன். ஸ்ரீமான் ரவீந்திரன் அவர்கள் என்னுடைய அத்தான்—"

"அத்தானா? அப்படியென்றால்—"

"நம்முடைய அக்காளின் கணவர். அதாவது அக்காளை மாலையிட்டவர். அதாவது அக்காளைத் திண்டாட விட்டவர். அதாவது, திண்டாட விடுகிறவர். திண்டாட விடப் போகிறவர்!"

"உன்னுடைய அக்காளின் கணவரைப் பற்றியா இப்படியெல்லாம் பேசுகிறாய்?"

"ஆமாம், வேறு யாரைப்பற்றி எனக்கு இவ்வளவு நன்றாகத் தெரியும்?" என்று சொல்லி, ஆத்திரமும் ஏளனமும் கலந்த முறையில் பல்லைக் காட்டிச் சிரித்தான் நாகரத்தினம். அவனுடைய பொய்ப் பல் பளிச்சென்று மினுமினுத்தது.

"நாகரத்தினம்! உன்னுடைய குறும்புத்தனத்தைக் கொஞ்சம் கட்டி வைத்து விட்டுத் தயவு செய்து சொல்லேன், இப்பொழுது இவ்வளவு அவசரமாக அவருக்கு ஏன் இருபத்தைந்து ரூபாய் தேவைப் பட்டது? அவ்வளவு ஏழையா அவர்—அவ்வளவு தூரம் அவருடைய குடும்பம் திண்டாடுகிறதா, என்ன?"

"அதெல்லாம் ஒரு பெரிய புராணம்!"

"அப்படியென்றால்?"

"திருத்தொண்டர் புராணம்!"

இப்படிச் சொல்லி விட்டு மீண்டும் ஒரு முறை அப்புலிங்கத்தின் முதுகைத் தட்டியவாறு தொடர்ந்து சொன்னான்:

"எங்கள் அத்தான் இருக்கிறாரே, திருக்கலைத் தொண்டர், அவரோடு ஒரு கூத்தாடிக் குரங்கு இருக்கிறது. அதற்கு ஏதாவது ஒரு சங்கிலி வாங்கிக் கழுத்திலே போட்டிருப்பான். இன்று மலைக் கோட்டையில் அந்தக் குரங்கு அரங்கு ஏறுகிறது! ஆனாலும் இருபத்தைந்து ரூபாய்க்கு என்ன சங்கிலி கிடைக்கும்? ஒரு வேளை எவெர்ஸில்வரில் புதிதாக நாயைக் கட்டிப் போடுகிற சங்கிலி வந்திருக்கிறதோ, என்னவோ!"

அப்புலிங்கத்துக்கு இந்த வார்த்தைகள் கசப்பைக் கொடுத்தன. உலகில் ஒருவரைப் பற்றி ஒருவர் எவ்வளவு எளிதில் தூக்கி எறிந்து பேசி விடுகிறார்கள் என்று மனத்துக்குள் நினைத்து வருத்தப்பட்டுக் கொண்டே மௌனமாக நின்றான்.

நாகரத்தினம் கேட்டான்: "அது சரி, அப்புலிங்கம்! அந்த அதிமகா கலைஞர் மலைக் கோட்டைக்குத்தானே போனார்?"

"எங்கே போனார் என்று தெரியாமல் தான் முழித்துக் கொண்டிருக்கிறேன். இந்தப் பக்கமாகத்தான் நடந்தார்."

"கச்சேரிக்கு மத்தியில் திடீரென்று பைத்தியம் முற்றிப் போய்க் கடைத் தெருவுக்கு வந்திருக்கிறான். நிச்சயம் பழைய படியும் கச்சேரிக்குத்தான் திரும்பிப் போயிருக்க வேண்டும். இவர் இல்லாமல் தான் அந்த மோகனவல்லிக்குக் கால் நிலத்தில் பாவாதே!"

அப்புலிங்கத்துக்கு இதைக் கேட்டதும் மலைக்கோட்டை நூற்றுக்கால் மண்டபத்துக்கே போகலாமா என்று தோன்றியது.

"கச்சேரிக்குப் போகலாமா என்று சுவாமிகள் நினைக்கிறது போல் தோன்றுகிறதே. திருப்புகழ் சபை உப தலைவர் அல்லவா? சங்கீதம் நாட்டியம் என்றால் ஈடுபாடு இருக்கத்தான் செய்யும்! அதிலும் அருணகிரி நாதரின் பரமதாசர் நீங்கள்—"

இந்தக் குறும்புத்தனமான வார்த்தைக்கு இன்னொரு சந்தர்ப்பமாக இருந்தால் "வெடுக்"கென்று பதில் சொல்லியிருப்பான் அப்புலிங்கம். இப்பொழுது உணர்ச்சியை அடக்கிக் கொண்டான்.

"சரி, வாருங்கள் சார் அப்புலிங்கம் அவர்களே! நமக்கும் சேர்த்து ஒரு டிக்கெட் எடுங்கள். ஒன்றாகவே போவோம். என்ன வேடிக்கைதான் நூற்றுக்கால் மண்டபத்துக்குள்ளே நடக்கிறது என்று பார்ப்போமே!" என்று சொல்லியவண்ணம், அப்புலிங்கத்தின் தோளில் கையைப் போட்டு அவனை இழுத்துக் கொண்டே நகர்ந்தான் நாகரத்தினம்.

ஞாயிற்றுக் கிழமைக் கூட்டத்துக்குள் நடந்து செல்லப் பத்து நிமிஷம் பிடித்தது. மலைவாசலில் மாணிக்க விநாயகர் சந்நிதியைத் தாண்டிப் படிகளில் ஏறி, ஒலிபெருக்கியைக் கடந்து, கூட்டத்தையெல்லாம் விலக்கிக் கொண்டு மலைமேல் உள்ள தெற்குத் தெருவை அடைந்தார்கள். அப்படியே மலைத்துநின்றான் நாகரத்தினம்.

கூட்டத்தை வேகத்தோடு தாண்டிக் கொண்டு ஒரே கோபாவேசமாக வந்து கொண்டிருந்தாள் கல்யாணி யம்மாள். அவளைப் பார்த்ததும் நாகரத்தினத்தின் முகத்தில் ஒரு விநாடி குறும்பு மறைந்து போய் ஒரு கலவரம் தோன்றிற்று.

"அக்கா!" என்று கூப்பிட்டுக் கொண்டே நாகரத்தினம் அவள் அருகில் போனான். அப்புலிங்கம் அப்படியே திகைப்பில் நின்று விட்டான்.

"அக்கா! என்ன இது? கச்சேரிக்கு மத்தியில் எழுந்து வந்து விட்டாயா? என்ன நடந்தது?"

"எல்லாம் சாவகாசமாகப் பேசலாம். என்னோடு வா வீட்டுக்கு—" என்றாள் கல்யாணி.

"சுவாமிகள் கச்சேரிக்கு எழுந்தருளட்டும். நான் கொஞ்சம்—"

மீண்டும் குறும்புத்தனந்தானா? "நமஸ்காரம்!" என்று ஒரே ஒரு வார்த்தையில் பதில் சொல்லி விட்டு, அவனிடமிருந்து தன்னைக் கழற்றிக் கொண்டு நூற்றுக் கால் மண்டபத்தை நோக்கி மேலே நடந்தான் அப்புலிங்கம். ஆனால் மனத்தை மட்டும் அப்படி எளிதாகக் கழற்றிக் கொள்ள முடியவில்லை.

இந்தக் கல்யாணி அம்மாள்தான் ரவீந்திரனுடைய மனைவியா? "அக்கா" என்று எவ்வளவு பிரியத்தோடு பேசினான் நாகரத்தினம்? அவனுடைய உள்ளத்திலும் பாசம், மரியாதை என்று இருக்கிறதா? அப்படியானால் ரவீந்திரனைப் பற்றி ஏன் அவன் அவ்வளவு துச்சமாகப் பேச வேண்டும்? ஒரு வேளை அவன் சொன்ன விவரங்கள் எல்லாம் உண்மையாக இருக்குமோ? ஆனாலும் அப்படி ஒரேயடியாகத் தூக்கி யெறிந்து பேசுவானேன்? எத்தனை மூர்க்கத்தனமாகப் பேசினான்? தன்னிடம் தான் எவ்வளவு அநாகரிகமாக நடந்து கொண்டான்! இதையெல்லாம் எண்ணும்போது உலகத்தில் மனிதர்கள் ஏன் இப்படியெல்லாம் நடந்து கொள்கிறார்கள் என்று அவனுக்குப் புரியவில்லை!

அப்புலிங்கத்தின் மனம் ஒரு நிலையில் இல்லை. அரங்கேற்றம் முடிந்து வீடு திரும்பி இரவு படுக்கையில் படுத்துக் கொண்டபோதும் இதே சிந்தனைதான். உண்மையில் இந்தக் குழப்பம் எல்லாம் தீரப் பல நாள் ஆயிற்று அவனுக்கு.

கல்யாணியும் நாகரத்தினமும் வெகு வேகமாக நடந்து சைவ சித்தாந்த சபையைத் தாண்டித் தாயுமானவர் தெருவிலே நுழைந்தார்கள்.

வீட்டுக் கதவைப் பூட்டி விட்டல்லவா நூற்றுக்கால் மண்டபத்துக்குச் சென்றிருந்தாள் கல்யாணி. இப்பொழுது அந்தப் பூட்டைத் திறந்து கொண்டு வீட்டினுள் அடியெடுத்து வைத்தாளோ இல்லையோ, அப்படியே "ஓ" என்று ஓரேயடியாகக் கதறி அழுது விட்டாள் அவள்! இத்தனை நேரமும் மனத்தின் கதவைப் பூட்டிப் போட்டிருந்திருக்கிறாள். இப்பொழுது கதவைத் திறந்ததும் உணர்ச்சிகள் அனைத்தும் ஆவேசத்தோடு கண்ணீராகப் பொங்கி வந்தன.

வெளிக் கதவைத் தாளிட்டு விட்டு வந்தான் நாகரத்தினம்.

"அக்கா என்ன இது? சிறு குழந்தையா நீ?" என்று சொல்லும்போது நாகரத்தினத்

நின் குரலில் பரிவு தொனித்தது. ஆனால் மறு கணமே அவனுடைய இயற்கைக் குணம் மேலோங்கி வேலை செய்தது.

"ஹூம்! இந்தமாதிரியெல்லாம் நடக்கும் என்று தெரியும் எனக்கு" என்றான். இப்படி அவன் சொன்னபோது, இந்த மாதிரி நடந்ததில் அவனுடைய உள் மனத்தில் ஒரு திருப்தி இருந்தது என்று தெரிந்தது. சிலருக்கு அப்படித்தான். தாங்கள் வந்து ஆறுதல் சொல்லுவதற்காகவே, யாராவது துக்கப்பட வேண்டும் என்று விரும்புவார்கள்! தங்களுக்கு ஒரு முக்கியத்தை ஏற்படுத்திக் கொள்ள இதை ஒரு வாய்ப்பாகக் கருதித் திருப்தி அடைவார்கள்!

"தம்பீ! உனக்கு என்ன தெரியும்? நீ இத்தனை நாளும் பம்பாயில் இருந்தவன். இங்கே என்ன கோலம் எல்லாம்......"

"அக்கா! அதெல்லாம் எனக்குப் பரிபூரணமாகத் தெரியும். நான் பம்பாயிலிருந்து திரும்பி வந்து இந்த ஆறு மாதத்தில், விவரம் எல்லாம் தெரிந்து கொண்டு விட்டேன். பல தடவை நானே உன்னிடம் கேட்க வேண்டும் என்று ஆரம்பித்தேன். சந்தர்ப்பம் சரியில்லாமல் போய் விட்டது."

இதுவரை தன்னுடைய கட்சிக்கு ஆள் இல்லாமல் ஏகாந்தமாய்த் தவித்துக் கொண்டிருந்த கல்யாணி அம்மாள் இப்பொழுது மனம் விட்டுப் பேச ஆரம்பித்தாள்.

"எங்கேயோ பிச்சை எடுத்துக்கொண்டு திரிந்த ஒரு தெரு நாயைக் கொண்டு வந்து வைத்துத் தினமும் இப்படிக் கூத்து நடக்கிறது. அந்தச் சிமைக் குரங்கோ எப்பொழுது பார்த்தாலும் கூந்தலைச் சீவிக் கொள்வதும், மேனியைச் சிங்காரிக்கிறதுமாகவே இருக்கிறது" என்றாள் கல்யாணி.

"அதெல்லாம் சிஷ்ய பரம்பரை, அக்கா! இவருக்குப் பின்னால் இவருடைய பெயர் நின்று துலங்க வேண்டும், பார். அதற்காக இப்படி ஒரு—"

"தம்பீ! இன்னும் கொஞ்ச நாளிலே நான் பிச்சைக்காரியாகி விடுவேன். அவள் தான் வீட்டு எஜமானி!"

"அக்கா! அதை மட்டும் சொல்லாதே. இந்த நாகரத்தினத்தின் உடம்பில் உயிர் இருக்கிற வரைக்கும் அது நடக்காது" என்று சொல்லிக் கொண்டே நாகரத்தினம் ஊஞ்சலில் உட்கார்ந்தான். கல்யாணி அம்மாள் ஊஞ்சலின் சங்கிலியைப் பிடித்தவாறு முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நின்றாள்.

"அக்கா! ஆரம்பத்தில் நீ உன் புத்தியைக் கடன் கொடுத்துவிட்டு, இப்பொழுது அவரைச் சொல்வதில் என்ன பிரயோஜனம்? அந்தக் காலத்திலேயே இந்தப் பிச்சைக்கார ராணியை உள்ளே விடாமல் இருந்திருந்தால், இதெல்லாம் நடந்திருக்குமா? நான் ஒருத்தன் பம்பாயிலே போய் இருந்து தொலைத்தேன். ஹூம்! எல்லாம் தலைவிதி!" என்றான் நாகரத்தினம்.

கல்யாணி அம்மாள் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. கண்ணீர் மாலை மாலையாக வந்தது. நாகரத்தினம் ஏதோ பலமாக யோசனை செய்வது போல் கண்களை மூடிக் கொண்டு, தரையில் காலை ஊன்றிச் சமட்டி, ஊஞ்சலை ஒரு எம்பு எம்பித் தள்ளினான். உத்தரத்திலிருந்து தொங்கிய ஊஞ்சல் 'கிறு கிடு கிரீச்' 'கிறுகிடு கிரீச்' என்று சத்தம் செய்து கொண்டே, கல்யாணியின் மனசைப் போல் வேகமாக ஆடியது. நாகரத்தினம் அதை இன்னும் அதி வேகமாக ஆட்டினான்.

"அக்கா! கவலைப்படாதே. இதுக்கெல்லாம் ஒரு சரியான வழி யோசித்து வகை செய்து விடுகிறேன், அதுவரை நீ தைரியமாக இரு. நான் லால்குடியில் இருந்தாலும் இங்கேயே இருக்கிறேன் என்று வைத்துக் கொள். இந்த ஊரிலேயே எனக்கு ஒரு—"

இப்படி நாகரத்தினம் எதையோ சொல்ல ஆரம்பிக்கும்போது, தெரு வாசலில் வண்டி வந்து நிற்கும் சலங்கைச் சத்தம் கேட்டது. நாகரத்தினம் பதறிப் போய் ஊஞ்சலை விட்டு எழுந்தான்.

"அக்கா, மகா கலைஞர் வருகிறார், மங்கையர்க்கரசியோடு! அதனால் நான் இப்பொழுதே மெதுவாகப் பின் வாசல் வழியாகப் போய் விட வேணும். நான் இங்கு வந்ததாகவே அவருக்குத் தெரிய வேண்டாம். சண்டையைக் கிளப்புவதற்கு இது சமயம் இல்லை! புல்லாங்குழல் வேறே ஈடு போயிருக்கிறது—"

போகிற போக்கில், புல்லாங்குழலைப் பற்றி இப்படி ஒரு தீக்கங்கையும் தூக்கி எறிந்துவிட்டு அவசரம் அவசரமாகப் புறவாசலோடு பறந்தது அந்த மனிதக் கழுகு!

'புல்லாங்குழல் ஈடு போயிருக்கிறது' என்ற அதிர்ச்சியிலிருந்து கல்யாணி அம்மாள் மீளுவதற்குள், வாசல் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

அவராக இருந்தால் இந்த மாதிரிக் கதவைத் தட்ட மாட்டாரே என்று அவள் யோசித்துக் கொண்டிருக்கும்போதே, "ரவீந்திரன், ரவீந்திரன்" என்று ஒரு வேற்றுக் குரல் கேட்டது.

வண்டியிலிருந்து ஒருவர் பழக் கூடைகளோடு இறங்கினார். (தொடரும்)

# அரிசிப்பல் அரும்பிடும் புன்முறுவல்!

குழந்தைக்கு முதல் பல் அரும்பிவிடத் தொடங்குவதைக் காண, வீட்டில் ஏக அமர்க்களம்! அவன் வளர்ந்து வருகிறான் என்பதை உணர்த்துகிறது அது. அவன் வாயில் விரலைக்கொடுக்க இனி எவரும் அஞ்சுவார்கள்.

ஆனால் அச்சமயத்திலும், தனது நலனை தானே கவனித்துக்கொள்ள அவனால் முடியாதே! அவன் விஷயத்தில் அடிக்கடி கவனம் தேவை —முக்கியமாக அவனுடைய தளிர்போன்ற சருமத்திற்கு விசேஷ பராமரிப்பு அவசியம். ஜான்ஸன்ஸ் பேபி பௌடர் அவனுடைய சருமத்தை மென்மையாகவும் மழமழப்பாகவும் வைத்திருப்பதுடன், எரிச்சலின்றி பாதுகாக்கவும் செய்யும்.

டாக்டர்கள் ஜான்ஸன்ஸ் பேபி பௌடரை 70 ஆண்டுகளுக்கு மேலாக சிபாரிசு செய்து வருகின்றனர். இன்றே ஒரு டின் வாங்குக!




## Johnson's BABY POWDER

## ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்

**சருமத்திற்கு ஹிதமளிப்பதில் உலகிலேயே நிகரற்ற பௌடர்**

**இலவசம்**

குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள்—குழந்தையை சரியான முறையில் எப்படி பேணி வளர்ப்பது, பல் முளைக்கும்போது என்ன செய்யவேண்டும், அவனை குளிப்பாட்டும் முறை, எப்படி நல்ல பழக்க வழக்கங்கள் கற்றுக்கொடுப்பது முதலிய, தாய்மாருக்கு இன்றியமையாத, அநேக விஷயங்கள் இதில் அடங்கியிருக்கிறது. இவ்விலாசத்திற்கு எழுதவும்:

**ஜான்ஸன் & ஜான்ஸன் (கிரேட் பிரிட்டன்) லிட்.**

டிபார்ட்மெண்ட் 21 (பி), த. பெ. 1976, பம்பாய்.

JB. 993

# ஹாஸ்யக் களஞ்சியம்



என்னைப் போட்டுச் சும்மா வறுத்து எடுக்கிறதே; உங்க தொழிலாப் போச்சு!
பட்டாணிக் கடலை வியாபா




2
கொர்ர்
3
ர்..ர்.. கொர்..ர்
கொர்..ர்..ர்
4
ர்.ர்..ர்.. கொர்..ர்..ர்
இரவெல்லாம் ஒரு பொட்டுத் தூக்கம் இல்லை.. ஒரே புழுக்கம்.
6






என்ன? ஒரு குப்பைக் கூடை வேணுமா? ஆபிஸில் நீங்க கிழிக்கிற கிழியலுக்கு குப்பைக் கூடை வேறையா?




இவ்வளவு நாழி நான் பேசிப் பேசி உங்களை 'போர்' அடித்து விட்டேன்; மன்னிக்கணும்
அதெல்லாம் வேண்டாம்; நான் உங்கள் பேச்சைக் கேட்டுண்டே இல்லே.


உங்க சஷ்டி அப்த பூர்த்திக்கு என்னைச் சாப்பிடக் கூப்பிட வில்லையே; எனக்கு வயிறு, ரொம்ப கோளாறாக இருக்கிறது என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது?

சாமா


பாட்டி! எனக்கு வாழைப் பழம் வேண்டவே வேண்டாம். கேட்கிறவனுக்குக் கொடேன்!




குழந்தை கண்ணைக் கசக்குகிறாளே? "கண்ணில் என்ன பட்டு விட்டது?"
"ஒரு நகை பட்டு விட்டது. அதை வாங்குவதற்குக் கண்ணைக் கசக்குகிறாள்."




"டேய், இந்த மாமா மாத்திரம் தடுக்கல்லேன்னு, பாணம் எவ்வளவு தூரம் போயிருக்கும் தெரியுமா?


என்னைப் பார்த்து இவன் காப்பி அடிக்கிறான் சார்... நான் ஒன்றும் எழுதாமல் உட்கார்ந்திருக்கிறேன்; என்னைப் பார்த்து விட்டு, அவனும் அதே மாதிரி ஒன்றும் எழுதாமல் உட்கார்ந்திருக்கிறான், சார்!



குழந்தை
அவைகளை
விரும்புகிறது

ஜே. பி. மங்காராமின்

# NOURISHING

நரிஷிங் பிஸ்கட்ஸ்




நரிஷிங் பிஸ்கட்டுகளை குழந்தை ருசி பார்க்கட்டும். அவைகளில் அதிகமான மனங்கவர் மணமும் இனிய ருசியும் ஆரோக்கிய மளிக்கும் வைடமின்களும் அடங்கி யிருப்பதால் அவைகளை அவன் மிகவும் விரும்புகிறான்.

வைடமின்கள் மிகுதியானது
தரமென்மை பெற்றது

ஜே. பி. மங்காராம் & கோ., குவாலியர்

சென்னை ஆபீஸ்: 35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

NATIONAL M. 1






## 31. நாய் குரைத்தது!

சில்லறைத் தீவின் கரையில் இறங்கியதும், பிரபாகரன் தன் வில்லையும், கத்தியையும் சரியாக வைத்துக் கொண்டான். தன் பையில் தங்க மாம்பழம் ஜாக்கிரதையாக இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டான். அந்தப் பொல்லாத நாய் எங்கேயாவது தென்படுகிறதா என்று பார்த்தான். உமாவும் பயந்து கொண்டே சுற்றிப் பார்த்தாள். நாய் கண்ணில் தென்படவில்லை. ஆனால் சமீபத்தில் இருந்த கல்லறை மாத்திரம் தென்பட்டது. பிரபாகரன் உமாவின் கையைப் பிடித்துக் கொண்டான். மெதுவாக அடிமேல் அடி வைத்துக் கல்லறை இருக்கும் இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். அப்பொழுது ஏதோ ஒரு சத்தத்தைக் கேட்டு, "அண்ணா, அண்ணா!" என்று கூப்பிட்டாள் உமா.

"ஏன் இதற்கெல்லாம் பயப்படுகிறாய்? அணிப்பிள்ளைகள் மரத்துக்கு மரம் தாண்டிக் கொண்டு செல்லுகின்றன. ஒன்றுக்கும் பயப்படாமல் என்னுடன் வா!" என்று உமாவுக்குத் தைரியம் கூறினான் பிரபாகரன்.

கொஞ்ச தூரம் சென்றும் நாய் இருக்கும் இடமே தெரியவில்லை. மெதுவாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அப்பொழுது பிரபாகரன் திடுக்கிட்டவனாய், "உமா, அதோ பார்த்தாயா! குதிரை வீரன் ஒருவன் குதிரையுடன் சிலையாக மாறியிருக்கிறான்!" என்றான்.

"ஆமாம், அண்ணா! அதோ பார், ஒரு முயலின் சிலை, மானின் சிலை, பூனையின் சிலை! இவைகளெல்லாம் அந்த நாயின் முன் தோன்றியிருக்கும் போலிருக்கிறது" என்றாள் உமா. அவள் குரல் பயத்தால் கம்மிப் போயிருந்தது.

"இவைகளெல்லாம் நமக்கு ஏற்கெனவே தெரிந்த விஷயம்தானே. எதற்காகப் பயப்பட வேண்டும்?" என்று கூறி அவன் உமாவுடன் மெதுவாக நடந்து சென்றான். மேலே போகப் போக ஏராளமாகச் சிலைகள் காணப்பட்டன. குதிரை வீரர்களுடைய சிலைகள்தான் நிறைய இருந்தன. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் இவர்களுடைய சிலைகளும் இருந்தன. படம் எடுத்த பாம்பின் சிலையும், பறக்கும் வண்டுகளின் சிலைகளும், பல காகங்களின் சிலைகளும் இருந்தன. அதனால் உயிருடன் பிராணிகளோ, பறவைகளோ, மனிதர்களோ யார் சென்றாலும் அந்த நாயின் கண்களிலிருந்து தப்ப முடியாது என்று நிச்சயமாகத் தெரிந்தது.

எல்லாவிதமான சிலைகளையும் பார்த்த பிரபாகரனுக்கும் உமாவுக்கும் பயம் உண்டாயிற்று. தாங்களும் அங்கிருப்பது போலச் சில நேரத்துக்கெல்லாம் சிலையாக மாற வேண்டியதுதான் என்ற தீர்மானத்தை அடைந்தார்கள்.

“உமா, இப்பொழுது என்ன பண்ணுவதென்று தெரியவில்லையே? உனக்குத் தைரியம் சொன்னேனே தவிர, எனக்குக் கொஞ்சம் பயமாகத்தானிருக்கிறது. நாயை நாம் பார்க்காமல் அதனிடம் நெருங்க வேண்டும். அதற்கு ஒரு வழி தேட வேண்டும். உனக்கு ஏதாவது உபாயம் தெரிந்தால் சொல்லு, பார்க்கலாம்!” என்றான் பிரபாகரன்.

“அண்ணா, நீ சொல்லுவதற்கு முன்பாகவே ஒரு உபாயத்தை நான் கண்டு பிடித்து விட்டேன்.”

“எங்கே சொல், பார்க்கலாம்” என்று கேட்டான் பிரபாகரன்.

“இதோ என் தோளின்மீது நான் போட்டுக் கொண்டிருக்கிற துணியினால் என் கண்களைக் கட்டிவிடு. பிறகு உன் சட்டையைக் கழற்றி உன் கண்களில் கட்டிக்கொள். அவ்வளவுதான். நாம் நாயின் விழிகளைப் பார்க்க முடியாது. நாயும் நம்முடைய விழிகளைப் பார்க்க முடியாது” என்றாள் உமா.

“என்ன உமா, அப்படிச் செய்தால் நாம் நாயின் கழுத்திலிருந்து எப்படிச் சாவியைக் கண்டு பிடித்து எடுப்பது? இரண்டு பேரும் நாய் இருக்கிற பக்கம் செல்லாமல் கண்களைக் கட்டிக் கொண்டு இந்தத் தீவில் அலைய வேண்டியதுதான். நீ சொல்லியபடி உன் கண்களைக் கட்ட வேண்டியதுதான். என் கண்களையும் கட்டிக் கொண்டால், எப்படி நாயிருக்கும் இடத்தை அடைய முடியும்? நான் நாயினிடத்துக்குச் செல்ல வேண்டுமென்றால் என் கண்களைக் கட்டக் கூடாது. ஆனால் எந்தச் சாமானையாவது வைத்து என் கண்களை நாயின் விழிகளை நேராகப் பார்க்காமல் மறைத்துக் கொண்டால் போதும். நான் நேராகப் பார்க்க முடியாவிட்டாலும் பக்கத்தில் தெரியும் வெளிச்சத்தைக் கொண்டு நாயை நோக்கிப் போக வசதியாக இருக்கும்” என்றான் பிரபாகரன்.



நாய்க் குட்டி குதிரையாக மாறும். திருப்பிப் பாருங்கள்.

உமாவும் பிரபாகரனும் தனித் தனியாக மனத்தில் பீதி கொண்டிருந்தார்கள். ஆனால் அதை ஒருவருக்கொருவர் வெளியில் காண்பித்துக் கொள்ளவில்லை. அப்படிக் காண்பித்துக் கொள்ள அவர்களுக்கு வெட்கமாயிருந்தது.

“அண்ணா, அந்த நாயைக் காணவில்லை. ஆதலால் நாம் தப்பிவிட்டோம் என்று எண்ணிக் கொள்ளலாம். நாயைப் பார்க்காமலே கல்லறைக்குச் சென்றுவிடலாம்” என்றாள்.

உடனே பிரபாகரன், “என்ன உளறுகிறாய்? நாயைக் காணாமல் கல்லறையிடம் போய் என்ன செய்வது? எப்படியும் நாம் நாயைக் கண்டு பிடித்துத் தானே ஆக வேண்டும்? அதன் கழுத்தில் உள்ள சாவி நம்மிடம் வராவிட்டால் நாம் சிரமப்பட்டு இங்கு வந்ததற்கு ஒரு பிரயோசனமுமில்லை. ஆதலால் நாய் அதுவாக நம் கண்களுக்குத் தென்படாவிட்டாலும் நாம் அதை எப்படியாவது கண்டு பிடித்துத்தான் ஆக வேண்டும்” என்று கூறினான்.

உமா பதில் சொல்லாமல் தலையைக் குனிந்தபடியே பிரபாகரனுடன் போய்க் கொண்டிருந்தாள்.

அந்தச் சமயத்தில் ‘வள் வள்’ என்று ஏதோ நாயின் குரலைப் போலக் கேட்டது. மறுபடியும் ‘வள் வள்’ என்று பலத்த சப்தமாகக் கேட்டது. பிரபாகரனுக்கு உடல் நடுக்கம் எடுத்தது. அவனுக்கு முன்பாகவே உமாவின் உடம்பு தட தட வென்று ஆட்டம் கண்டது.

“உமா, உமா! அந்த நாய் எங்கிருந்தோ குரைத்துக் கொண்டு இந்த இடத்தை நோக்கி ஓடி வருகிறதுபோல் இருக்கிறது. தாமதிக்காமல் என்னுடன் வா” என்று உமாவின் கையைப் பிடித்துக் கொண்டு அவளை இழுத்துக் கொண்டே ஏரிக்கரைக்குப் பயத்தினால் ஓடி வந்தான்.

“நாய் என்னிடம் நெருங்கினாலும், இல்லை, நான் அதனிடம் நெருங்கினாலும் இதோ இருக்கும் இக் கத்தியினால் என் முகத்தை மறைத்துக் கொண்டபடியே நாயைக் கொல்ல முயலுகிறேன். நீ என் தோள்களைப் பிடித்துக் கொண்டு என்னுடன் வந்து கொண்டிரு” என்றான் பிரபாகரன்.




சமீபத்தில் சென்னை, தியாகராய நகரில் குழந்தைகள் நாடக விழா மூன்று நாட்கள், தினம் இரண்டு நாடகங்களாக வெகு சிறப்பாக நடைபெற்றது. இந்த விழாவை ராஜாஜி துவக்கி வைத்தார்கள். மேலே குழந்தைகள் சங்கக் காரியதரிசி திரு அழ. வள்ளியப்பா ராஜாஜி அவர்களைத் துவக்க உரை நிகழ்த்தும்படி கேட்டுக் கொள்ளும் காட்சியைப் பார்க்கலாம். பரிசுக்குரிய நாடகங்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை திரு டி. கே. ஷண்முகம், திரு ப. நீலகண்டன், ஸ்ரீமதி ஆனந்தி மூவரும் ஏற்றுக் கொண்டார்கள். எல்லா நாடகங்களும் நன்றாக இருந்தமையால், முதல் பரிசு ரூ 75 வழங்கி விட்டு மற்ற ஐந்து நாடகங்களுக்கும் ரூ 35 வீதம் சமமாகப் பரிசுகள் வழங்கப்பட்டன. வாழ்க குழந்தை நாடகக் கலை!

---

"அண்ணா, நீ சொன்ன யோசனை மிகவும் பிரமாதம். அதன்படியே செய்யலாம். அண்ணா! நான் என் கண்களைக் கட்டிக் கொண்டு உன்னைப் பிடித்துக் கொண்டே உன் பின்னால் வருகிறேன்."

"அது சரி உமா, என் கண்களை எந்தப் பொருளை வைத்து மறைத்துக் கொண்டு போவது?" என்றான் பிரபாகரன்.

"அண்ணா, நீ துடுப்பினால் படகைத் தள்ளிக் கொண்டு வந்தாயே. அந்தத் துடுப்பை வைத்துக் கண்களை மறைத்துக் கொண்டு வாயேன்."

"உமா! துடுப்பு பிரயோசனமில்லை. அதற்குப் போதிய அகலமும் நீளமும் இல்லை. கொஞ்சம் முகத்தை விட்டு அது அசைந்தால் என் விழிகளும் நாயின் விழிகளும் சந்திக்க நேரிடும். இப்பொழுது எனக்கு ஒன்று தோன்றுகிறது. நீ இங்கு சற்று நில். இதோ வந்து விடுகிறேன்" என்று கூறி விட்டு அவன் தானும் உமாவும் ஏறி வந்த படகினுள் சென்றான். அவசரமாகப் படகில் மாட்டியிருந்த நல்ல அகலமும் நீளமும் உள்ள ஒரு கண்ணாடியை எடுத்தான். உமாவிடம் ஓடிவந்தான். "உமா, இந்தக் கண்ணாடியை எனது இடது கையில் வைத்துக் கொண்டு என் முகத்தை மறைத்துக் கொள்ளுகிறேன். மற்றொரு வலது கையில் கத்தியைப் பிடித்துக் கொள்ளுகிறேன். உன் கண்களை உன்னிடமுள்ள துணியால் நன்றாகக் கட்டி விடுகிறேன். நீ என் தோள்களைப் பற்றி என் பின்னால் வந்து கொண்டிரு. அந்த நாய் என் அருகில் வந்ததாகத் தோன்றியதும் இந்தக் கண்ணாடியினால் என் முகத்தை மறைத்துக் கொண்டபடியே அதைக் கொல்லப் பார்க்கிறேன்" என்றான் பிரபாகரன்.

"சரி" என்றாள் உமா.

பிரபாகரன் கண்ணாடியால் தன் முகத்தை மறைத்துக் கொண்டான். மற்றொரு கையில் தனக்குப் பீமவர்மன் கொடுத்த கூர்மையான கத்தியை வைத்துக் கொண்டான். மெதுவாகத் தான் முன்பே சென்ற பாதையில் மறுபடியும் சென்றான். நன்றாகக் கட்டி மறைக்கப் பட்ட கண்களுடன் பிரபாகரனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அவனைப் பின் தொடர்ந்தாள் உமா. கொஞ்ச தூரம் வரையில் நாய் இருக்கும் இடம் தெரியவில்லை. பிறகு இலேசாக நாய் குரைக்கும் சத்தம் கேட்டது. மேலே செல்லச் செல்ல நாய் குரைக்கும் சத்தம் அதிகரித்தது.

"உமா, ஜாக்கிரதை. நாயின் சமீபம் வந்து கொண்டிருக்கிறோம். நான் நாயின் முகத்தைக் காணாமல் இருப்பதற்கு இப்படியும் அப்படியும் அசைய நேரிடும். நான் எப்படி அசைந்தாலும் என்னை நீ கெட்டியாகப் பிடித்துக் கொள். என்னை நீ நழுவ விட்டால் பிறகு ஏதாவது ஆபத்து சம்பவிக்கும். ஜாக்கிரதை!" என்று பிரபாகரன் எச்சரிக்கை செய்தான். (தொடரும்)



# இந்த நூதன டூத்பேஸ்டினால் குழந்தைகளின் பற்களை பாதுகாருங்கள்

உங்கள் குழந்தைகளின் பற்கள் அரிய மதிப்புடையவை; அவற்றிற்கு விசேஷ கவனம் செலுத்த நீங்கள் விரும்புவது சகஜமே. ஆகையால்தான் நீங்கள் ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினாஸ்' உபயோகிப்பது அவசியமாகும். செழிப்பான நுரையுள்ள இந்த நூதன டூத்பேஸ்ட் பல் சிதைவிற்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளை உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் வைத்திருக்க உதவுகிறது.

குழந்தைகள் இதன் இனிய பெப்பர்மின்ட் சுவையையும், புதுமைப் பச்சை நிறத்தையும் விரும்புவர். தவிர, 'கோலினாஸ்' அதிக சிக்கனமுடையதென நம் உங்களுக்குத் தெரியவரும். ஈரமில்லாத பிரஷில் அரைஅங்குல அளவே போதுமானது.

இன்றே ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினாஸ்' டூத்பேஸ்டை உபயோகிக்கத் தொடங்கி உங்கள் பணத்திற்கு பரிபூரண பயன் பெறுங்கள்!






GK. 1172

★ ராஜாஜி அவர்களின் 'பாஷைப் பிரச்னை' என்னும் கட்டுரை சம்பந்தமாக நமது வாசகர்கள் பலரிடமிருந்து அநேக கடிதங்கள் வந்திருக்கின்றன. அவற்றில் சிலவற்றை இங்கு பிரசுரித்திருக்கிறோம். —ஆசிரியர்.

# பாஷைப் பிரச்னை

பாஷைப் பிரச்னையைப் பற்றி ராஜாஜி அவர்களின் உயர்ந்த கட்டுரையை எல்லா இந்திய மொழிகளிலும் — முக்கியமாக ஹிந்தியிலும், — ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்து நாடு முழுதும் பரவும் வகை செய்ய வேண்டும். ஹிந்தி வெறியரிடமிருந்து ஹிந்தியும் தமிழும் பிழைக்க வேண்டுமானால், அரசியல் அமைப்பைத் திருத்தித் தேசிய மொழி வரவேண்டிய கால வரம்பை நீடிக்க வேண்டும். ஹிந்தியில் தான் பரீக்ஷை வைப்பது என்ற யோசனையை மத்திய அரசாங்கம் கைவிட வேண்டும்.

சென்னை
15—4—55 ஸ்ரீநிவாஸன்

●

ஏப்ரல் 17-ம் தேதி 'கல்கி' இதழில் "பாஷைப் பிரச்னை" என்ற தலைப்பில் ராஜாஜி அவர்கள் எழுதியதைப் படித்தவுடன் தான், எந்த முறையில் மத்திய அரசாங்கத்தின் போக்கு தமிழ் நாட்டைப் பாதிக்கிறது என்பது தெரிய வருகிறது.

ஏற்கெனவே, தமிழ் நாட்டில் இந்த ஹிந்திக்கு எப்படி எதிர்ப்பு இருக்கிறதென்று சாதாரண மனிதன் முதல் நாட்டை ஆளும் நேருஜி வரை அனைவரும் அறிந்ததே. ஹிந்தி எதிர்ப்பு இயக்கங்களும், மறியல்களும், 'ஹிந்தி ஒழிக' என்ற கோஷங்களும் இருந்தபோது ராஜாஜி போன்ற தமிழ்நாட்டு மேதைகள் இல்லாதிருந்தால் அந்தப் பேதை ஹிந்தி என்ன பாடு பட்டிருக்கும் என்பதை அன்றே இந்த மத்திய அரசாங்கம் அறிந்திருக்கும். இவ்வாறு குழப்பமுற்றிருந்த தமிழகத்தில் பொறுப்புணர்ச்சியோடு ஒற்றுமைக்காக இக்காரியத்தைச் சிறப்பான முறையில் நடத்திய அதே ராஜாஜி அவர்கள் இன்று இந்தத் திட்டம் சரியல்ல என்று சொல்கிறார்கள் என்றால், அது ராஜாஜி அவர்கள் தனிப்பட்ட முறையில் கூறவில்லை; தமிழகத்தின் சார்பிலே ராஜாஜி அவர்கள் கூறுகிறார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது. இதை நன்குணர வேண்டும் மத்திய அரசாங்கம். இத்தமிழ்க் குரலுக்குச் செவி சாய்ப்பார்களா!

பம்பாய்
17—4—55 எழுத்துப்பித்தன்

●

நீங்கள் ஏப்ரல் பதினேழாம் தேதி இதழில் வெளியாகியிருக்கும் அரசியல் ஞானியும், தீர்க்கதரிசியுமான நம் தமிழ் நாட்டின் தவப் புதல்வர் ராஜாஜி அவர்களின் "பாஷைப் பிரச்னை" அப்படியே என்னுடைய மனத்தைக் கவர்ந்தது.

தக்க தருணத்தில் உண்மை நிலையை விளக்கிப் பிரச்னையின் இப்போதைய தவறான முடிவுகளால் பின்னால் ஏற்படும் விபரீத விளைவுகளை எதற்கும் அஞ்சாத துணிவுடன் எடுத்துக் காட்டும் தனிப் பண்பு நம் ராஜாஜி அவர்களுக்கே உரியதாகும். அணு, ஜலஜ குண்டு அசகாய சூரர்களே நம் ராஜாஜியின் எச்சரிக்கையைக் கண்டு அசந்து விட்டார்கள்.

ஹிந்தியை நல்ல முறையில் நாட்டில் பரப்ப வேண்டும் என்று உண்மையாகவே விரும்பினால் "அன்பு வழியை"த் தான் கடைப் பிடிக்க வேண்டும். அது தான் விரும்பும் பலனை நிரந்தரமாகக் கொடுக்கும். ஜனநாயகத்துக்குப் பொருத்தமாகவும் இருக்கும். இல்லை, மிரட்டித் தான் பார்ப்போம் என்றால் சர்வ நாசம் தான் விளையும். அதற்கு முன் கூட்டிய எச்சரிக்கையே, ஹிந்தி அல்லாத பிற இந்திய மொழிகளின் சார்பாக நம் தமிழ்த்தாயின் வீரப் புதல்வனின் இறுதி எச்சரிக்கையே, நம் ராஜாஜி அவர்களின் இந்தக் கட்டுரை என்று கூறுகிறேன். "நம்முடைய ஏக பாஷைப் பித்தர்கள்" இந்த எச்சரிக்கையைப் புறக்கணிக்கும் அளவுக்குத் துணிவு கொள்ள மாட்டார்கள் என்று நம்புகிறேன்.

கொச்சி
18—4—55 ராம. லட்சுமணன்

●

ராஜாஜி எழுதிய 'பாஷைப் பிரச்னை' என்ற கட்டுரையைப் படித்தேன். எவ்வளவு அழகாக, தெளிவாக அன்பு கலந்த மொழிகளில் உண்மையை விளக்கி இருக்கிறார்! இக் கட்டுரையைப் படித்தவர்கள் அதில் எவ்வளவு அறிவூட்டும் உண்மைகள் இருக்கின்றன என்பதை அறிவார்கள்.

இதை முக்கியமாக, 'ஹிந்தி'யை அகில இந்திய பரீட்சைகளுக்கு எழுதும் மொழியாக வைக்க வேண்டுமென்போர் நன்றாகப் படித்து உணர வேண்டும். அவர்கள் இவ்வுண்மைகளை, வெறுப்பு, துவேஷமின்றிப் புரிந்து கொள்ளுதல் வேண்டும். உலக சமாதானத்துக்காகப் பாடுபடும் நமது ராஜாஜி அவர்கள் உலகை அழிக்கக் கூடிய அணுகுண்டுகளை அறவே ஒழித்தல் வேண்டுமென்று பல அன்னிய நாட்டுப் பத்திரிகைகள் மூலம் வேண்டியிருக்கிறார். அதுபோல இக்கட்டுரையின் சாராம்சங்களை வடநாட்டுக்கு அங்குள்ள பத்திரிகைகளின் மூலம் எடுத்துக் கூறி, அவசரத்தால் ஏற்படக் கூடும் அநீதியைத் தடுத்து, நம் நாட்டில் அமைதி நிலவுவதற்கு உதவப் பிரார்த்திக்கிறேன்.

சிந்தாதிரிப்பேட்டை
16—4—55 எ. ந. அனந்தராமன்



# சினிமாக் கதை



## கல்கி

"தங்கம்! அதோ பார் அப்பா வருகிறார், பார்!" என்றான் ராமு.

"மூஞ்சியைப் பார்த்தால் கோபமா வராப்பலே இருக்கே" என்றாள் தங்கம்.

கீழே 'படார்' என்று கதவைச் சாத்தித் தாளிடும் சத்தம் கேட்டது.

"அம்மாவும் கோபமாய்த் தானிருக்கிறாள், இன்னிக்கி ரகளைதான் நடக்கப் போகிறது!" என்றாள் தங்கம்.

"சண்டை போடறதுன்னு ஒண்ணு பகவான் என்னத்துக்காகத்தான் வச்சிருக்காரோ?" என்று ராமு தத்துவம் பேசினான்.

"மனுஷாளுன்னுட்டு என்னத்துக்காகத் தான் ஸ்வாமி படைச்சிருக்காரோ?" என்றாள் தங்கம்.

"கல்யாணம் பண்ணிக்கிறதுன்னுட்டு ஒண்ணு என்னத்துக்காகத்தான் ஏற்பட்டிருக்கோ?" என்றான் ராமு.

தடால், தடால் என்று கீழே கதவை இடிக்கும் சத்தம் கேட்டது.

"நான் இன்னிக்குக் கீழேயே போகப் போகிறதில்லை. மாடியிலேயே இருந்துடப் போகிறேன்" என்றாள் தங்கம்.

"நானுந்தான்" என்றான் ராமு.

இந்தக் குழந்தைகளின் பேச்சைக் கேட்கக் கேட்க எனக்கு ஒரு பக்கம் சிரிப்பு வந்தது; இன்னொரு பக்கம் வருத்தமாயுமிருந்தது.

கீழே அப்பாத்துரை ஐயர் ஏழாங் கட்டை சுருதியில், "சனியன்களா! எல்லாரும் ஒரேயடியாய்ச் செத்துப் போயிட்டீர்களா? கதவைத் திறந்து தொலையுங்கோ!" என்று கத்தினார்.

உடனே அதற்கு மேல் ஒரு ஸ்வரம் அதிகமான குரலில் ஜானகி அம்மாள், "வருகிறபோதே என்னத்துக்காக என்னுங் கொன்னும் வெடிச்சுண்டு வறேன்?" என்று கேட்டுக் கொண்டே வந்து கதவைத் திறந்தாள்.

"சரி, யுத்தம் ஆரம்பமாய் விட்டது" என்று ராமு சொன்னான்.

"எப்போ முடியப் போறதோ?" என்றாள் தங்கம்.

அந்தக் குழந்தைகளைப் போலவேதான் நானும் "யுத்தம் எப்போது முடியப் போகிறதோ?" என்று எண்ணினேன். அப்பாத்துரை ஐயரும் அவர் சம்சாரமும் போட்ட சண்டைகள் எனக்கு ரொம்பவும் உபத்திரவமாக இருந்தன. அவர்கள் கீழ் வீட்டில் குடியிருந்தார்கள்; நான் மேல் மாடியில் குடியிருந்தேன். மேல் மாடிக்கு வரும் மச்சுப் படிகளில் உட்கார்ந்து கொண்டுதான் ராமுவும் தங்கமும் மேற்கண்ட சம்பாஷணையை நடத்தினார்கள்.

* * *

மேற்படி தம்பதிகளின் சச்சரவுகள் எனக்கு மிகவும் உபத்திரவமாயிருந்ததற்கு ஒரு விசேஷ காரணம் இருந்தது.

அப்போது நான் அற்புதமான ஸினிமாக் கதை ஒன்று எழுதிக் கொண்டிருந்தேன். திடீரென்று ஒருநாள் அந்தக் கதை என் மனத்திலே தோன்றிற்று. "ஆஹா! ஸினிமாவுக்கு எவ்வளவு பொருத்தமான கதை!" என்று எண்ணினேன். அதனுடைய வாய்ப்பை நினைக்க நினைக்க எனக்கே ஆச்சரியமாயிருந்தது. இந்தக் கதை மட்டும் ஸினிமாப் படமாகப் பிடித்து வந்து விட்டால், தமிழ் நாட்டையே ஒரு கலக்குக் கலக்கி விடாதா? எல்லாரும் அப்படியே பிரமித்துப் போய் விட மாட்டார்களா? என்னுடைய வறுமைப் பிணியும் அடியோடு நீங்கி விடலாமல்லவா? எத்தனை நாளைக்கு மாதம் முப்பது ரூபாய் சம்பளத்தில் தரித்திரக் காலட்சேபம் செய்து கொண்டிருப்பது?

கதையை விற்பது கொஞ்சம் சிரமமான காரியமாயிருக்கலாமென்று எனக்குத் தெரியாமலில்லை. டாக்கி முதலாளிகளும் டைரக்டர்களும் சாதாரணமாக ஒரு மாதிரி பேர்வழிகள் என்பது மிகவும் பிரசித்தமான விஷயம். நல்லது எல்லாம் அவர்களுக்குக் கெடுதலாய்ப் படும்; கெடு

தல் எல்லாம் கல்லதாய்ப் படும். ஆனாலும் எத்தனை பேரில் யாராவது ஒருவருக்கேனும் என்னுடைய கதையைப் பிடிக்காமலா போய்விடும்? பார்க்கலாமே ஒருகை!

இம்மாதிரி தீர்மானத்துடன் அந்த ஸினிமாக் கதையை எழுதிக் கொண்டிருந்தேன். 'ஸீனேரியோ' முறையில் முதல் காட்சி, இரண்டாம் காட்சி என்று எழுதிக் கொண்டிருந்தேன். அப்பாத்துரை ஐயரும் அவர் சம்சாரமும் தினசரி யுத்தம் நடத்தாமலிருந்தால் இத்தனை நாளைக்குள் முழுதும் எழுதி முடித்திருப்பேன். ஆனால், இவர்களுடைய இடைவிடாத் தொந்தரவின் காரணமாக, கதை இருபத்திரண்டாவது காட்சிக்கு மேல் நகர்ந்தபாடில்லை. மாலை வேளையில் மட்டுமே எழுதுவதற்கு எனக்கு அவகாசம். அதே சமயத்தில்தான் கீழ் வீட்டிலும் தாம்பத்யக் கலகங்கள் நடந்து கொண்டிருக்கும். என்றைக்காவது அந்தத் தம்பதிகள் வெளியில் தொலைந்து போனால், நிம்மதியாக இரண்டு மூன்று காட்சிகள் எழுதி முடித்து விடுவேன்.

இன்றைக்கு அப்பாத்துரை ஐயர் வருகிற போதே யுத்த சன்னத்தராய் வந்தபடியால், என்னென்ன நடக்கப் போகிறதோ என்று எனக்குத் திகிலாயிருந்தது. ஆனால் நான் சற்றும் எதிர்பாராத விதத்தில் யுத்தம் வெகு சீக்கிரத்திலே முடிவடைந்து விட்டது!

* *
*

அப்பாத்துரை ஐயர் வீட்டின் உள்ளே பிரவேசித்ததும், "இந்தச் சனியன்கள் இரண்டும் எங்கே தொலைஞ்சு போச்சு?" என்று கேட்டார்.

"உங்கள் நாக்கிலே தான் சனியன் இருக்கு" என்றாள் ஜானகி அம்மாள்.

"உன் மூஞ்சியிலே மூதேவி கூத்தாடறது" என்றார் அப்பாத்துரை ஐயர்.

"நான் மூதேவி தான்; என்னைப் பார்த்தால் உங்களுக்குப் பிடிக்காதுதான்! நான் செத்துப் போய் விட்டால் உங்களுக்குச் சந்தோஷந்தான்..." என்று அடுக்கிக் கொண்டே ஜானகி அம்மாள் அழத் தொடங்கினாள்.

"பின்னே என்னத்துக்காக என் வாயைப் பிடுங்கறே?" என்று அப்பாத்துரை ஐயர் சிறிது அடங்கிய குரலில் அவளைக் கேட்டார்.

"நீங்கள்தானே வருகிற போதே எரிஞ்சு விழுந்துண்டு வரேள்?"

"நீ இப்படி அநாகரிகமாயிருக்கிறதைப் பார்த்தால் எனக்குக் கோபமாய்த்தான் வருகிறது. சாயங்காலம் நாலு மணியானால் முகத்தை அலம்பி, தலையை வாரி அழகாய்ப் பின்னிக் கொண்டு, நெற்றியில் லட்சணமாய்க் குங்குமம் இட்டுக் கொண்டு இருக்கக் கூடாதோ? இந்த மாதிரி தானா மூஞ்சியிலே எண்ணெய் வடிஞ்சுண்டு அவலட்சணமாய் நிற்கணும்?"

"எல்லா அலங்காரமும் பண்ணிக் கொண்டிருந்தால், என்னை நீங்கள் ஸினிமாக்கும், டிராமாக்கும் அழைச்சுண்டு போகிறது தட்டுக் கெட்டுப் போகிறதாக்கும்! வீட்டிலேயே அடைஞ்சு கிடக்கிறதுக்கு அலங்காரம் என்ன வேண்டிக் கிடந்தது?"

"நான் வருகிற போது நீ தயாராயிருந்தால் தானே எங்கேயாவது அழைத்துக் கொண்டு போகலாம்?"

"இப்போ சொல்லுங்கோ ஸினிமாவுக்குப் போகலாம்னு, அரை நிமிஷத்திலே எல்லாம் பண்ணிண்டு தயாராய் வந்துடறேனா, இல்லையா, பாருங்கோ!"

"அரை நிமிஷம் இல்லை, பதினைந்து நிமிஷம் தருகிறேன். அதற்குள் தயாராகிவிடு, பார்க்கலாம்."

"அடே ராமு! தங்கம்! ஓடியாங்கோ! அப்பா ஸினிமாவுக்கு அழைச்சுண்டு போறேங்கறா!" என்று ஜானகி அம்மாள் கூவினாள்.

இதையெல்லாம் ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்த ராமுவும் தங்கமும் குதூகலமாய்க் கீழே ஓடினார்கள்.

* *
*



"நல்ல காலந்தான்" என்று எண்ணி நானும் குதூகலித்தேன். அவர்கள் போய் விட்டால் கதையில் இன்னும் நாலு காட்சிகளாவது இன்றைக்கு எழுதி முடிக்கலாமென்று சந்தோஷப்பட்டேன். மேலும் நான் ஸினிமாக் கதை எழுதுவது பற்றி எனக்கு ஒரு புதிய பெருமை உண்டாயிற்று. எப்பேர்ப்பட்ட குடும்பச் சண்டை சச்சரவுகளையெல்லாம் ஸினிமா தீர்த்து வைக்கிறது? எரிச்சலும் விரஸமும் நிறைந்த இல்லற வாழ்க்கையில்கூட எவ்வளவு இன்பத்தையும் திருப்தியையும் அளிக்கிறது? சில பேர் எல்லாம் ஏதோ

ஸினிமா என்றால் ஒரு மாதிரி முகத்தைச் சுளித்துக் கொண்டு பேசுகிறார்களே, அவர்கள் எவ்வளவு அறியாதவர்கள்?



இம்மாதிரி எண்ணமிடுவதிலேயே வெகு நேரம் போய் விட்டது. ஆனாலும் இன்றைப் பொழுதுக்கு ஏதாவது எழுதிவிட வேண்டுமென்று அவசர அவசரமாக எழுதி இரண்டு காட்சி முடித்து விட்டேன். மூன்றாவது காட்சி எழுதிக் கொண்டிருக்கையில், வாசலில் குதிரை வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

இரண்டு நிமிஷத்துக்கெல்லாம், கீழே பூட்டைத் திறக்கும் சத்தம் கேட்டது. உடனே பின்வரும் சம்பாஷணை ஆரம்பமாயிற்று :—

"ஸினிமாவாம் ஸினிமா! போயும் பொறுக்கி எடுத்து அழைச்சுண்டு போனேனே! சவரணைதான்! யாரோ கட்டேலே போறவனும் கட்டேலே போறவளும் கின்னுண்டு வாயிலே வந்ததைக் கன்னுபின்னுன்னு பேசுகிறதாம், அதை எல்லாரும் பார்த்துண்டு வாயைப் பிளந்துண்டு உட்கார்ந் திருக்கிறதாம். உங்களுக்குத்தான் புத்தி போச்சே!"

"சீ! வாயை மூடு! ஸினிமாக்குப் போகணும் என்று என் பிராணனை வாங்கினதில் குறைச்சல் இல்லை; இப்போது என் மேலே குற்றம் சொல்கிறயே?"

"உங்க வாயை நீங்க மூடிக்குங்கோ! ஸினிமாவுக்குப் போகணும் என்றால், இந்த மாதிரி கழிசடை ஸினிமாக்கா நான் போகணும் என்று அழுதேன்? புருஷான் என்றால் புத்தியே இல்லாமல் போய் விட வேணுமா?"

"ஏ, கழுதை! வாயை இப்போ மூடுகிறயா, இல்லையா?"

"நான் கழுதையாயிருந்தால், நீங்கள் என்ன என்று யோசித்துப் பார்த்துக்குங்கோ!"

"பின்னே, என் மேலே என்னத்துக்குக் குற்றம் சொல்றேன்னு கேக்கறேன்? ஆனை, குதிரைன்னு விளம்பரம் பண்ணியிருக்கானேன்னு பார்த்தேன். இப்படி ஆபாசமாயிருக்கும்னு நான் கண்டேனா?"

"இதைப் போய் ஒரு கதை என்று எழுதினானே கட்டேலே போறவன், அவனைச் சொல்லுங்கோ!"

"கதை எழுதினவன் என்ன பண்ணுவான்? டைரக்டர் அதைக் குட்டிச் சுவர் பண்ணியிருக்கான்!"

"டைரக்டர் குட்டிச்சுவர் பண்ணினால், பணத்தைச் செலவழித்துப் படம் எடுத்தவன் என்னத்துக்குப் பல்லை இளிச்சுண்டு நின்னான்?"

"உன்னைப் போன்ற இளிச்சவாய்ச் சுப்பிகள் பத்து பேர் பார்க்க வருவார்கள் என்றுதான்!"

"நான் ஒண்ணும் இளிச்சவாய்ச் சுப்பி இல்லை. உங்க அம்மா இளிச்ச வாய்ச் சுப்பி; உங்க பாட்டி இளிச்சவாய்ச் சுப்பி......"

இதற்குள் மளமளவென்று மாடிப்படி ஏறுகிற சத்தம் கேட்டது. ராமுவும் தங்கமும் ஏறி வந்து தங்களுடைய வழக்கமான இடத்தில் உட்கார்ந்தார்கள்.

"சண்டைன்னு ஒண்ணு என்னத்துக்குத்தான் வச்சிருக்கோ?" என்றான் ராமு.

"ஸினிமான்னு ஒண்ணு என்னத்துக்குத்தான் ஏற்பட்டிருக்கோ?" என்றாள் தங்கம்.

* * *

மறுநாளே அந்த வீட்டை விட்டு ஜாகை மாற்றி விட்டேன்.

ஆனால் என்னுடைய ஸினிமாக் கதை மட்டும் நாளது வரையில் பூர்த்தியாகவில்லை. அந்தத் தம்பதிகளின் இரண்டாவது சம்பாஷணையைக் கேட்டதும் எனக்குண்டான அதிர்ச்சி இன்னும் நீங்கிய பாடில்லை!

'கல்கி'—1-9-41

## திருப்பூரில் ராமநவமி

பட்னா ஜில்லாவிலுள்ள திருப்பூர் தமிழன்பர்கள் ராமநவமி உற்சவத்தை ஏப்ரல் 1-ந் தேதியிலிருந்து 10-ந் தேதி வரை வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். கடைசி தினத்தன்று ஸ்ரீ சீதா கல்யாணமும் ஸ்ரீ ஹனுமத் ஜயந்தியும் கோலாகலமாக நடந்தேறின. திருப்பூரிலுள்ள தமிழன்பர்கள் அனைவரும் மேற்படி வைபவங்களில் பக்தி சிரத்தையுடன் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

3



# கோகிலா

ரமண்லால் வஸந்தலால் தேசாய்
மொழிபெயர்ப்பு: ரா. வீ

## 50. "கதியிலேன், கிரிதாரி!"

ஆகா! ஜகதீஷ்தான் எத்தனை சரியாக ஊகித்து விட்டான்! அவனது புத்தி சாதுரியத்தைக் கண்டு ஜுகல் கிஷோருக்கு ஏற்பட்ட வியப்பு அடங்கச் சிறிது நேரம் பிடித்தது. தன் வியப்பு ஒருவாறு அடங்கியதும் ஜகதீஷைப் பார்த்து, "ஜகதீஷ்! நீ பலே ஆள், அப்பா! உன் சந்தேகமும் ரொம்ப சரி. உன் நாத்பாபா அன்றிரவு சாந்தாகௌரி மேல் ஆயுதப் பிரயோகத்துக்கு ஆயத்தமானாரே, அப்பொழுது நானும் அதே அறையில்தான் இருந்தேன். அன்று நீ அவர் கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தாமல் இருந்திருந்தால் என்னைப் பார்த்திருந்திருப்பாய். நான் அங்கேயேதான் நின்று கொண்டிருந்தேன்!" என்றான் ஜுகல் கிஷோர்.

"அப்படியா? நிஜமாகத்தான் சொல்கிறாயா? நிஜமாகத்தான் சொல்கிறாயா?" என்று கேட்ட வண்ணமே ஜகதீஷ் அளவிட முடியாத அதிசயமும் வியப்பும் தாண்டவமாட அடிக்கொரு தடவை ஜுகல்கிஷோரைப் பார்த்தான்.

"நீ கோகிலாவைப் பார்த்துவரப் புறப்படப் போகிறாயா? இல்லை, உலகத்தில் இல்லாத உறவு முறைகளைப் பற்றியெல்லாம் கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கப் போகிறாயா? புறப்படு, அப்பா! பொழுது சாய்ந்து விட்டால் அப்புறம் போக முடியாது. குதிரையைத் தயார் செய்து கொண்டு சீக்கிரமாகப் புறப்படுவதற்கான ஏற்பாடு செய்!" என்று அவசரப்படுத்தினான் ஜுகல் கிஷோர்.

அதற்கு மேல் ஜகதீஷ் அங்கே நிற்கவில்லை. புறப்பட்டுவிட்டான். அவன் ஒன்றியாகவே அந்த அறையை விட்டு வெளியேறிப் படி இறங்கிச் செல்லலானான்.

'ஜகதீஷ் வெளியே போய் விட்டான். அறையில் தன்னைத் தவிர வேறு யாரும் இல்லை!' என்ற நம்பிக்கை ஜுகல் கிஷோருக்கு ஏற்பட்டது. அவன் அப்பொழுது உட்கார்ந்திருந்த அறை தான் நாத்பாபா உட்கார்ந்து மக்களுடன் உரையாடும் அறையாகும். மக்களைக் கண்டு பேசுவதற்கும் உபதேசங்கள் அளிப்பதற்கும் நாத்பாபா அவ்வறையைத்தான் உபயோகப்படுத்தி வந்தார். ஆனால் அதில் நாத்பாபாவிடம் முன்கூட்டியே அனுமதி பெறாமல் யாரும் பிரவேசிக்க முடியாது.

அந்த அறைக்கு இரு புறங்களிலும் எதிரும் புதிருமாக இரு பெரிய அறைகள் இருந்தன. அவ்விரு அறைகளின் கதவுகளிலும் பெரிய பெரிய நிலைக் கண்ணாடிகள் பொருத்தப்பட்டிருந்தன. சில சமயம் அவை திறந்திருக்கும். சில சமயம் அவ்விரு கண்ணாடிகளையும் திரை மறைத்திருக்கும். இவ்விரண்டு அறைகளையும் தவிர முன் கட்டில் மிகப் பெரிய இன்னொரு அறையும் கூட இருந்தது. ஆனால் அது எப்பொழுதுமே மூடித்தான் இருக்கும். அதில் நாத்பாபாவைத் தவிர வேறு யாருக்குமே பிரவேசிப்பதற்கு அதிகாரம் கிடையாது.

நாத் பாபாவுக்கு ஜகதீஷின் மேல் அலாதிப் பற்று உண்டு என்பது உண்மைதான். ஆனால் அவன் கூட அந்த அறையில் பிரவேசித்ததில்லை. கண்ணாடிக் கதவு போட்ட அறையொன்றில் தான் ஜகதீஷ் இருந்து வந்தான். இருந்தாலும் நாத் பாபாவைப் பார்ப்பதென்றால் அவனும் வெளிப்புறத்து அறையில் வந்து தான் சந்திப்பது வழக்கம். தனக்கென்று அவன் அதிகச் சலுகை பெற்றதில்லை; நாத்பாபாவும் அளித்ததில்லை.

ஜகதீஷ் படியிறங்கிச் சென்றவன் கடைசிப் படி இறங்கியதும் சற்றுத் தயங்கி நின்றான். யோசனை செய்து பார்த்த அவனுக்கு என்ன தோன்றிற்றோ, தெரியவில்லை! மறுபடியும் ஓசைப்படாமல் படி ஏறி வந்தான். அப்பொழுது நாத்பாபா

வின் ரகசிய அறைக்குள் யாரோ நுழைவது போன்ற நிழல் தட்டியது.

ஜுகல்கிஷோரோடு பேசிக் கொண்டிருந்து விட்டு ஜகதீஷ் வெளியே வந்த பொழுது, ஜுகல்கிஷோர் மட்டும் அவனோடு வராமல் அந்த அறையிலேயே தங்கி விட்டான். அதனால் ரகசிய அறைக்குள் நுழைந்தவன் ஜுகல்கிஷோராகத்தான் இருக்க வேண்டும் என்ற நிச்சயம் அவனுக்கு ஏற்பட்டது. என்னதான் நிச்சயம் ஏற்பட்டாலும் கண்ணால் பார்க்காத விஷயத்தில் சட்டென்று நம்பிக்கை வைக்கக் கூடாதல்லவா? அதனால் சிறிது தயங்கினான். ஆயினும் ஆவல் அவனை உந்தித் தள்ளியது.

நாத் பாபாவின் இந்த ரகசிய அறைக்குள் போக யாருக்குமே அநுமதி கிடையாதே! அப்படியிருக்கும் பொழுது ஜுகல் கிஷோர் மட்டும் எப்படிப் போகலாம்? அதுவும் நாத் பாபாவுக்கு எதிரிடையாகப் பிரசாரம் செய்யும் ஜுகல் கிஷோருக்குத் தனிச் சலுகை என்ன இருக்க முடியும்?

அதோடு ஜுகல்கிஷோர் சாதாரணமான மனிதன் இல்லை. மிகவும் பயங்கரமானவன். நம்பிக்கைக்குப் பாத்திரமானவனாகவும் அவனைச் சொல்லி விட முடியாது. அந் நிலையில் அவன் உள்ளே சென்று ஏதாவது ஒன்றுக்கொன்று செய்து விடுவானாகில்......? யார் கண்டார்கள்? நாத் பாபாவை அவன் கொன்று போடாமல் இருக்க வேண்டுமே!



இந்த எண்ணம் ஏற்பட்டதுதான் தாமதம்; ஜகதீஷின் உடல் ஒரேயடியாகப் பறந்தது. பாய்ந்து சென்று அந்த அறைக்குள் நுழைந்தான். நாத்பாபாவின் அறைக் கதவு சாத்தித்தான் இருந்தது. ஆனால் உள் புறமாகத் தாளிடப்படவில்லை. அதனால் தொட்டதும் அது தானாகத் திறந்து கொண்டது. சத்தம் போடாமல் ஜகதீஷ் உள்ளே நுழைந்தான். உள்புரத்தில் ஒரு சந்து போலப் போய்க் கொண்டிருந்தது. அந்தச் சந்தின் இன்னொரு மூலையில் ஒரு கதவு இருந்தது. அதன் வழியே சற்றுத் தூரம் போனால் ரகசிய அறைக்குக் கொண்டு விடும் வழி போலத் தோன்றியது.

அவன் அந்தக் கதவுக்குப் பின்னாலேயே மறைந்து நின்று கொண்டான். உள்ளே என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைப் பிரயாசைப்பட்டுக் கவனித்துக் கண்டு பிடிக்கவும் முயன்றான்.

அவன் பார்வைக்கு அந்த அறைக் கதவையும் தாண்டிச் சென்று ஊடுருவிப் பார்க்கும் திறன் இல்லை. ஆனால் அவன் காதுகள் மட்டும் அந்த அறைக்குள் இருவர் பேசிக் கொண்டிருந்ததைக் கவனமாகக் கேட்டன. அதில் ஒன்று பெண் குரல்; இன்னொன்று ஆண் குரல். ஆண் குரல் ஜுகல்கிஷோரின் குரலை நினைவுறுத்தியது.

“சாந்தா! நீ இங்கே எங்கே வந்தாய்?”

“உங்களிடம் மன்னிப்புக் கோருவதற்காகத்தான்!”

“என்னிடம் மன்னிப்புக் கோருவதற்கா? பேஷ்! பேஷ்! நல்ல காரியம் செய்தாய்! உன்னைப் போலவே பிஹாரியும் என்னிடம் மன்னிப்புக் கேட்டான். அது மட்டும் அல்ல, தன்னுடைய சொத்து முழுவதையும் பொதுநலக் காரியங்களுக்காக வழங்கி விட்டான். என் விருப்பப்படி ஏழையும் ஆகி விட்டான். இப்பொழுது தான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது. இத்தனை வருஷங்களாக உங்கள் இருவரிடமும் பழி வாங்குவதற்கென்று திட்டம் போட்டுப் போட்டுப் பொழுதைப் போக்கி விட்டேன். பழி வாங்கியே தீருவது என்று உறுதி பூண்டு செயலில் இறங்கிய பொழுதெல்லாம் என் மனம் என்னை மோசம் செய்து விட்டது; சரியான சமயத்தில் காலை வாரி விட்டு, போட்ட திட்டத்தைச் சிதைத்து விட்டது. எப்படித் தான் என் உள்ளத்தில் அம்மாதிரி நேரங்களில் இனம் விளங்காத கோமள பாவங்கள் இடம் பெற்றனவோ, எனக்கே விளங்க வில்லை. இப்படிப் பழி வாங்கத்

திராணியற்றவனாகப் போய் விட்டோமே என்ற எண்ணம் என்னை எத்தனையோ முறை பித்தனாகக் கூட ஆக்கி விட்டது. உங்கள் இருவரிடமும் பழிவாங்கக் கைக்கு வகையாகக் கிடைத்த பல சந்தர்ப்பங்களை நழுவ விட்ட பின்னும் என் மனம் கேட்கவில்லை. கடைசியில் உன்னைக் குத்தி ரத்தக் களறியாக்கி விடுவதென்றும் பிஹாரியைச் சுட்டுப் பொசுக்கி விட்டு மறு காரியம் பார்ப்பதென்றும் உறுதி தளராத நெஞ்சத்துடன் புறப்பட்டேன். இவ்விரு முயற்சிகளிலும் கூடக் கடைசியில் எனக்கு வெற்றி கிட்டவில்லை; தோல்விதான் கிட்டியது. ஆயினும் இத்தனை காலம் கழித்து என் இரு அவாக்களும் இன்று பூர்த்தியுற்று விட்டன. அதாவது, நீங்கள் இருவருமே உங்கள் அகந்தையை விட்டுக் குற்றத்தை உணர்ந்து என்னிடம் மன்னிப்புக் கோரி விட்டீர்கள். பார்க்கப் போனால் இது எனக்கு ஒரு விதத்தில் வெற்றிதானே? வெற்றி கண்டபின் என் வேலைகளெல்லாம் தீர்ந்து விட்டதாகவே நான் கருதுகிறேன். அதனால் இனி இந்த உலகத்துக்கு என்னிடம் பயமில்லை; எனக்கும் இந்த உலகத்தினிடம் பயம் இல்லை. எனவே, இன்றைக்கே நான் எங்கேயாவது கண்காணாத ஒரு இடத்துக்கு ஓடி விடுவதாக இருக்கிறேன். தெரியுமா?" என்றார் நாத் பாபா.

"ஓகோ! இன்றைக்குத்தான் இந்தத் தீர்மானத்துக்கு வந்தீர்களா? அப்படியானால் இது வரை நீங்கள் மறைந்திராமல் வேறு என்ன செய்து கொண்டிருந்திருக்கலாம்? என்னைக் கேட்டால் நீங்கள் இதுவரை தலைமறைவாக இருந்ததே போதும். இனி ஓடி ஒளிந்து அவஸ்தைப் பட வேண்டியதில்லை என்றுதான் சொல்வேன்! உங்களிடம் எனக்கு ஒரே ஒரு வருத்தம் என்னவென்றால் தவறைத் திருத்திக் கொள்வதற்குத் தாங்கள் யாருக்கும் சந்தர்ப்பமே அளிக்கவில்லை. ஏன்! உங்களுக்கே கூட அளித்துக் கொள்ளவில்லை. நீங்கள் மட்டும் ஆற அமர யோசித்து உங்கள் தவறைத் திருத்திக் கொண்டிருந்தால், நான் இப்பொழுதைக் காட்டிலும் உங்களை இன்னும் பன் மடங்கு அதிகமான அந்தரங்க சுத்தியுடன் பூஜித்திருப்பேன். எனக்கு மட்டும் சந்தர்ப்பம் அளிக்கப் பட்டிருந்தால் உங்கள் சந்தேகத்தை அறவே களைந்தெறியவும் வழி தேடியிருப்பேன். நீங்கள்தான் என் சுபாவத்தையே சரியாகப் புரிந்து கொள்ளவில்லையே! அந்தச் சிரமம் எல்லாம் நமக்கு எதற்கு என்றல்லவா ஒதுக்கி விட்டீர்கள்?" என்றாள் சாந்தாகௌரி.

"உண்மையான வார்த்தை! நிஜமாகவே நீ அந்தரங்க சுத்தியுடன் என்னை வழிபட்டிருப்பாய் என்பது எனக்கு இப்பொழுதுதானே தெரிகிறது! நான் உன் அழகை வழிபட்டேன். அதைக் கூண்டில் அடைத்த பறவையாக மதித்தேன்; கட்டுக் காவல் போட்டுக் காக்க முயன்றேன்; சிறை வைத்த சிலையாகப் பூஜித்தேன். உன் குணம் அறிந்து நான் உன்னை உன் இஷ்டத்துக்கு விட்டிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் வளர்த்த பறவை எவ்வளவுதான் உயர உயரப் பறந்தாலும் கடைசியில் வளர்த்தவன் கையிலேயே வந்து உட்காருவது போல நீயும் என் கைக்குள்ளேயே அடங்கி யிருந்திருப்பாய். இப்பொழுது இத்தனை காலம் கழித்து எனக்கு இது விளங்குகிறது. உம்...இனி அதைப் பற்றிப் பேசி என்ன பயன்?



சாந்தா. உன்னிடம் கடைசி முறையாக விடைபெற்றுக் கொள்கிறேன்!"

"கடைசி முறையாகவா? நீங்கள் என்ன பேச்சுப் பேசுகிறீர்கள்? எதற்காக இப்படியெல்லாம் பேச வேண்டும்?"

"எதற்காகவா? ஒருவன் உயிர் வாழ்வதென்றால் ஒரு காரணம் வேண்டும். எனக்கோ வாழ்க்கையில் ஒரு சுவையோ இன்பமோ இருப்பதாகத் தோன்றவில்லை. இந்நிலையில் நான் உயிர் வாழ்வதும் ஒன்றுதான், உயிரை விடுவதும் ஒன்றுதான்: வாழ்க்கையை வாழத் தெரியாமல் வெறும் ஜடமாக இருந்து கொண்டு வாழ்ந்து என்ன பயன்? அதனால்தான்..." என்றார் நாத்பாபா. பிறகு, "அதற்கான ஏற்பாடுகளையும் இதோ செய்து வைத்திருக்கிறேன், பார்த்தாயா?" என்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் 'கடகட' வென்று ஏதோ திரவ பதார்த்தம் ஊற்றும் சப்தம் கேட்டது. அதைத் தொடர்ந்தாற்போலக் காதைத் துளைக்கும் ஒலி அறை கிடுகிடுக்கப் பீறிட்டுக் கொண்டு எழுந்தது. யார் யாருடைய உயிரை வாங்கத் திட்டமிட்டு விட்டார்கள்? எதற்காக அத்தகைய அச்சம் தரும் ஒலி அந்த நேரத்தில் எழ வேண்டும்?

வெளியில் இருந்தவண்ணம் கூக்குரலைக் கேட்ட ஜகதீஷினால் பேசாமல் இருக்க முடியவில்லை. சட்டென்று தன் பலம் அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொண்டு சாத்தியிருந்த அறைக் கதவை ஓங்கித் தட்டினான். அவன் இடித்த வேகத்தில் கதவே பெயர்ந்து அவனுக்கு வழி விட்டது. ஜகதீஷ் ஒரே பாய்ச்சலில் உள்ளே நுழைந்தான். அங்கே அவன் கண்ட காட்சி... அப்பப்பா!

நாத்பாபாவின் கையில் ஒரு கோப்பை இருந்தது. கோப்பையில் உள்ள திராவகத்தைப் பருகுவதற்காக அவர் தம் வாயின் அருகில் கொண்டு போக முயன்று கொண்டிருந்தார். சாந்தாகௌரி பலம் கொண்ட மட்டில் அவர் கையை அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

ஜகதீஷைப் பார்த்த நாத் பாபா, "உன்னை யார் இந்த நேரத்தில் இங்கே வரச் சொன்னது?" என்று சீறினார்.

"ஓடி வா, ஓடி வா! இந்தக் கோப்பையைத் தட்டிக் கவிழ்த்து விடு. இதில் விஷம் இருக்கிறது, விஷம் இருக்கிறது!" என்று சாந்தாகௌரி துடிக்கும் உள்ளத்தோடு ஜகதீஷைப் பார்த்துச் சொன்னாள்.

"என்ன? விஷமா? எதற்கு?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டான் ஜகதீஷ்.

"ஏன்? எனக்குத்தான்! நான்தான் விஷம் அருந்தப் போகிறேன்!" என்றார் நாத்பாபா, உறுதியும் சிரிப்பும் ஒருங்கே

தாண்டவமாட. ஜகதீஷுக்கு அவ்வார்த்தைகளைக் கேட்க வியப்பாயிருந்தது. பிறரைப் பொசுக்கிக் கொன்று போட வேண்டும் என்று சொல்லும் நாத்பாபாவா இத்தகைய காரியத்தில் இறங்கியிருக்கிருர்? சிறிதும் தயக்கமோ யோசனையோ இல்லாமல் விஷத்தைக் குடித்துத் தம்மைத்தாமே காலனின் வாயில்கொண்டு கொடுக்க முயற்சிக்கிருரே, ஏன்? காலனின் அரவணைப்பில் அவர் என்ன இன்பத்தைக் காணப் போகிருர்?

"சாமி, சாமி! இந்த ஏழை மேல் இரக்கம் காட்ட வேண்டும். தாங்கள் என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்? எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே!" என்று கூறி ஜகதீஷ் தன் இரு கைகளையும் பயபக்தியுடன் குவித்தான்.

"ஜகதீஷ்! நீ இன்றுதான் நாத்பாபாவுக்கெதிரே தலை வணங்குகிருய்?" என்று சொன்ன நாத்பாபா இலேசாகச் சிரித்தார். பிறகு தம் கையிலிருந்த கோப்பையை இன்னும் கொஞ்சம் உயரத் தூக்கினர்.

சாந்தாகௌரியின் இரு கைகளும் வலுவிழந்து விட்டன. எத்தனை நேரம்தான் ஒரு பெண்ணின் கரம் வலுவுடன் பிடித்திருக்க முடியும்? நாத்பாபா இழுத்த இழுப்புக்கு அவளது கைகள் செல்லத் தொடங்கி விட்டன.

"சாமி! நீங்கள் விரும்பினல் இன்று மட்டும் என்ன, தினமுமே நான் தங்கள் காலில் விழுந்து கும்பிடத் தயாராயிருக்கிறேன். எதற்காக இந்தப் பயங்கரக் காரியத்தில் இறங்குகிறீர்கள்?" என்று கேட்டான் ஜகதீஷ்.

"வாழ்க்கையில் ஏதாவது இன்பம் இருந்தால் உயிர்வாழ வேண்டும். இன்பம் எதுவுமே இல்லாவிட்டால் உயிர்வாழ்ந்து என்ன பயன்? வாழ்க்கையை நான் எவ்வளவோ பார்த்து விட்டேன். இனி ஒன்றும் அதிகமாகப் பார்ப்பதற்கில்லை. எனக்கு இன்பம் அளிக்கக்கூடிய பொருள் ஏதாவது இருக்கிறது என்ருல் அது சாவுதான். அதைக் காட்டிலும் சுகம் அளிக்கக் கூடிய பொருள் இந்த உலகத்தில் வேறு எதுவுமே இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. அதனல் அதையும்தான் சுவைத்துப் பார்த்து விடுவோமே என்று இச்செயலில் இறங்கியிருக்கிறேன்! கடைசியில் என்றைக்காவது ஒரு நாள் யாரும் இதை நாடித்தானே ஆகவேண்டும்? அதனல் நிகழ் காலத்துக்கும் எதிர்காலத்துக்கும் இடையே தொங்கிக் கொண்டிருக்கும் இந்தப் புரியாத் திரையை நாமே நம் கையால் ஏன் அகற்றிக் கொள்ளக்கூடாது என்று எண்ணி..."

"இந்தப் பேச்சே வேண்டாம், சாமி! நான் இருக்கும் வரை இத்தகைய செயல்

எதற்கும் இடம் கொடுக்க மாட்டேன். இது நிச்சயம்.—அது போகட்டும். ஜுகல் கிஷோர் வந்தானே, அவன் எங்கே?''

''நரகத்தில் நாறுகிறான்! அவன் பேச்சு இங்கே எதற்கு?''– சீறினார் நாத்பாபா.

''உன் ஜுகல்கிஷோர் ஒரு இடத்துக்கும் ஓடிவிட வில்லை. உன் எதிரிலேயேதான் நிற்கிறான். எதற்காகப் புரியாமல் திண்டாடுகிறாய்?'' என்றான் சாந்தாகௌரி.

''என்ன? புரியாமல் திண்டாடுகிறேனா?'' என்று கேட்ட ஜகதீஷ் மேலும் வியப்பு மேலிட்டு இருவரையும் மாறி மாறிப் பார்க்கலானான்.

நாத்பாபா 'கட கட' வென்று நகைத்தார். பிறகு தம்மையே சுட்டிக் காட்டி, ''இதோ பார்! நீ தேடும் ஜுகல்கிஷோர் இதோ இருக்கிறான்!'' என்றார்.

''என்னைப் பைத்தியமாக்கி விடுவீர்கள் போலிருக்கிறதே! நீங்கள் சொல்வதை என்னால் ஒருகாலும் நம்ப முடியாது!'' என்றான் ஜகதீஷ், தீர்மானமாக.

''வாழ்க்கையில் நான் ஏதாவது ஒரு காரியத்தை வெற்றிகரமாகச் செய்திருக்கிறேன் என்றால் இந்த ஒரே ஒரு காரியத்தைத்தான் செய்திருக்கிறேன். ஒருபுறம் ஜுகல் கிஷோராக உருமாறி உலகத்தை ஏமாற்றித் திரிந்தேன். இன்னொரு புறம் நாத்பாபாவாக நடித்தேன். இவ்வளவு செய்தும் என்ன பயன்? கடைசியில் உலகத்தை ஏமாற்றப் போய் நானே ஏமாந்தேன். என்னால் வாழ்க்கையையும் சரியாக அநுபவிக்க முடியவில்லை; பழி வாங்க வேண்டும் என்று போட்டிருந்த திட்டத்தையும் நிறைவேற்ற முடியவில்லை. அப்பப்பா! பழிவாங்கக் கிடைத்த எத்தனை அருமையான சந்தர்ப்பங்களையெல்லாம் நான் கை நழுவவிட்டு விட்டேன், தெரியுமா?'' என்றார் நாத்பாபா.

அப்பொழுதும் ஜகதீஷுக்கு நாத்பாபாவின் வார்த்தைகள் மீது நம்பிக்கை உண்டாக வில்லை. அவனுடைய முக பாவம் அதை நன்றாக எடுத்துக் காட்டியது.

நாத் பாபாவுக்கும் ஜுகல்கிஷோருக்கும் வயதுக் கிரமத்தில்தான் எத்தனை வித்தியாசம்! தங்கள் தங்கள் உண்மை வயதில் பத்துப் பதினைந்து வருஷங்களை மறைத்து மாறுவேஷம் பூணும் விஷயத்தில் பலருக்கு அப்படியொன்றும் பிரமாதமான சிரமங்கள் ஏற்படுவதில்லை. அதுவும், அவர்கள் முகத்தையும் முக பாவத்தையும் மாற்றிக் காட்டும் அபாரத் திறன் பெற்றவர்களாக இருந்து விட்டால், அதைக் காட்டிலும் இன்னும் அதிக வருஷங்களைக் கூட மறைத்து விடலாம். இது சுலபமான காரியம்தான். ஆனால் ஜகதீஷின் கல்லூரிக்கு ஜுகல்கிஷோர் எப்படி வந்து சேர்ந்தான்? உலகத்தின் கண்களில் மண்ணைத் தூவி ஏமாற்றுவதற்கு இது பிரமாதமான வழிதான்! யாரும் மறுக்க முடியாத செயற்கரிய சிறந்த வழிதான்!

பேச்சில் கவனத்தைச் செல்ல விட்ட நாத்பாபா மெதுவாகக் கோப்பையைத் தமது உதடுகள் வரை கொண்டு சென்று விட்டார். ஆனால் ஜகதீஷ் அசதி மறதியாக இராமல் அவர் கைக்கோப்பையிலும் ஒரு கண் வைத்திருந்தான்.

ஜுகல்கிஷோர், நாத்பாபா இருவரையுமே நன்கு அறிந்தவனாயிற்றே அவன்! சிக்கிரத்தில் ஏமாறுவானா? சட்டென்று பருந்து போலப் பாய்ந்து நாத் பாபாவின் கையிலிருந்த கோப்பையைத் தட்டி விட்டான். கோப்பை வெகுதூரத்தில் போய்ச் சிதறி விழுந்தது. ''அட முட்டாளே! அது அக்கினித் திராவகம் ஆயிற்றே! அதோ பார்த்தாயா, அதன் வேலையை!'' என்று கூறிச் சிரித்தார் நாத் பாபா.

அவன் தட்டி விட்ட வேகத்தில் சாந்தா கௌரியின் கால்களில் இரண்டொரு சொட்டுத் திராவகம் சிந்தி விட்டது. மறுகணமே அந்த இடம் வெந்து புண்ணாகி விட்டது. ஆனால் அவள் வெகு அலட்சியமாக, ''இவ்வளவுதானே? பரவாயில்லை! நல்ல வேளையாக உங்கள் ஒருவர் மீதும் விழாமல் என் மேல் விழுந்ததே! திராவகம் பட்டு நான் முழுவதும் எரிந்தே போனால்கூடப் பாதகமில்லை. உள்ளத்தின் எரிச்சலைப் பொறுத்துக் கொள்ளப் பழகி விட்ட எனக்கு உடலின் எரிச்சலைப் பொறுத்துக் கொள்வதென்ன, கஷ்டமான காரியமா?'' என்றாள்.

நாத்பாபா அதற்குப் பதில் சொல்லாமல், ''ஜகதீஷ்! இப்பொழுது நீ கோப்பையைத் தட்டி விட்டு விட்டாய். ஆனால் இரவு பகல் இருபத்து நான்கு மணி நேரமும் உன்னால் காவல் புரிந்து கொண்டிருக்க முடியுமா?'' என்று கேட்டார்.

''முடியுமோ, முடியாதோ! என்னால் இயன்றவரை உங்கள் முயற்சிக்கு இடம் கொடாமல் கட்டாயம் கண்காணித்தே தீருவேன்!'' என்றான் ஜகதீஷ்.

இதே சமயம் வெளியிலிருந்து யாரோ உரக்கக் குரல் கொடுத்து நாத்பாபாவைக் கூப்பிடும் சப்தம் கேட்டது.

யார் கூப்பிடுகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக எல்லோருமே சிறிது நேரம் பேச்சை நிறுத்தினர்.

''சாமி, சாமி! கொஞ்சம் வெளியே வாருங்களேன்! எனக்கு அவசரமாக ஒரு மூடி கயிறு வேண்டும்!'' என்று ஒருவன் உரக்க நாத்பாபாவைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தான்.

உள்ளிருந்த வண்ணமே நாத்பாபா, ''உன்னை யார் இவ்வளவு தூரம் உள்ளே

வர விட்டது? போ, போ! இப்பொழுது ஒன்றும் முடி கயிறு போட முடியாது!" என்று கடுமையான குரலில் விரட்டினார்.

"சாமி, சாமி! இந்த நேரத்தில் அப்படியெல்லாம் சொல்லக் கூடாது. நிலைமை ரொம்ப மோசமாக இருக்கிறது. நம்பிக்கை யிழந்து நிராசையுற்று வெறுங்கையோடு திரும்பிப் போகக் கூடிய நிலைமையில் நான் இல்லீங்க!" என்று காலில் விழாத தோஷமாகக் கெஞ்சினான் வந்த ஆள்.

"ஒரு தடவை சொல்லவில்லை? நான் சொன்னால் சொன்னதுதான். நீ கேட்க மாட்டாய்?" என்று மறுபடியும் அதட்டினார் காத்பாபா.

அந்த ஆள் திரும்பிப் போவதற்குப் பதிலாகத் துணிச்சலுடன் காத்பாபாவின் அறைக்குள்ளேயே வந்து விட்டான். என்றைக்குமே இல்லாத காரியமாக அன்று காத்பாபாவின் அந்த ரகசிய அறைக்கு எத்தனை பேர் திடீர் திடீரென்று விஜயம் செய்து விட்டார்கள்!

கோபம் மூண்டு விட்ட காத்பாபா வந்த ஆளை அடிப்பதற்காக எழுந்து விட்டார். ஆனால் அவனைப் பார்த்ததும் அவர் கை அவரையறியாமலே தொங்கி விட்டது; அவர் எண்ணத்தைச் செயலாக்க மறுத்து விட்டது. "அட, நீயா? உனக்கு எதற்கப்பா முடி கயிறு?" என்று கேட்டார், சற்றுத் தணிந்த குரலில்.

"சாமி, உங்கள் காலில் விழுகிறேன். நீங்கள் என் தலையை இறக்கினாலும் எனக்குச் சம்மதம். ஆனால் அதற்கு முன்னால் நீங்கள் ஒரு முடி கயிறு கொடுத்துத்தான் ஆக வேண்டும்!" என்றான் அந்த ஆள்.

"அது சரி! உனக்கு எதற்காக முடி கயிறு என்று கேட்கிறேன்!"

"எங்கள் அண்ணிக்கு வேண்டும்!" என்றான் அந்த ஆள்.

ஜகதீஷுக்கு அந்த ஆளை எப்பொழுதோ எங்கேயோ பார்த்த மாதிரியிருந்தது. ஆனால் எங்கே பார்த்தோம் என்பதுதான் நினைவுக்கு வரவில்லை.

"உனக்கு அண்ணியா? யார் அப்பா அது? எங்கே இருக்கிறார்கள்? எனக்குத் தெரிந்தவரை அப்படி யாருமே இருப்பதாகத் தெரியவில்லையே?" என்றார் காத்பாபா. அக்கம் பக்கத்துக் கிராமங்களையும் அக்கிராமத்து மக்களையும் அவர் நன்கு அறிந்திருந்தார் என்பது அவருடைய அந்தப் பேச்சிலிருந்தே தெரிந்தது.

"என்ன, சாமி! தெரியாதவர் போலக் கேட்கிறீர்களே! நகரத்திலிருந்து என்னோடு வந்திருக்கிறார்களே, கோகிலா அம்மா! அவர்களைப் பற்றித்தான் சொல்கிறேன்!" என்றான் அவன்.

ஆம்! அவன் வேறு யாரும் இல்லை, வத்ஸராஜேதான்!

"யார்? கோகிலாவா? எங்கே இருக்கிறாள்?" என்று விழி பிதுங்கக் கண்களைப் பெரிதாக்கிக்கொண்டு கேட்டான் ஜகதீஷ்.

"அவர்கள் நினைவு இல்லாமல் படுத்த படுக்கையாகக் கிடக்கிறார்கள். நல்லபடியான பேச்சு மூச்சுக்கூட இல்லை. கடுமையான சுரம் வந்திருக்குதுங்க. என்ன சொல்வேனுங்க, போங்க!" என்றான் வத்ஸராஜ். அப்பொழுது துயரம் அவன் தொண்டையை அடைத்தது.

"அவளை எங்கே வைத்திருக்கிறாய்?"

"கூடவே அழைத்து வந்திருக்கிறேன். பக்கத்தில் ஒரு மண்டபம் இருக்கிறது பாருங்கள், அதில் இருக்கச் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன்!" என்றான் வத்ஸராஜ்.

அதற்கு மேல் ஜகதீஷினால் ஒன்றும் கேட்க முடியவில்லை. எல்லாவற்றையும் அப்படியப்படியே விட்டு விட்டுப் பறந்து விழுந்து கொண்டு ஓடினான். அவன் ஓடின வேகத்தில் பக்கத்து அறையில் இருந்த இரண்டொரு பொருள்கள் இடறிக் கீழே விழுந்த சப்தம் கூடக் கேட்டது. "வத்ஸராஜ். நீ போ, நானும் இதோ

வருகிறேன்!'' என்று கூறி நாத்பாபா புறப்பட ஆயத்தமானார்.

வத்ஸராஜ் முன்னே சென்றான். அவனைப் பின்தொடர்ந்து சென்ற நாத்பாபா சட்டென்று தமது நடையை மெதுவாக்கித் திரும்பிப் பார்த்தார். சாந்தா கௌரி அருகிலேயே நின்று கொண்டிருந்தாள். அவளைப் பார்த்து மெதுவான குரலில், "சாந்தா! இனி நான் சாக முடியாது போலிருக்கிறதே!'' என்றார்.

"அட! அதற்குள் வாழ்க்கை அபாரச் சுவை நிரம்பியதாக மாறி விட்டதா? இத்தனை சீக்கிரம் இப்படி மாறக் காரணம் என்னவோ?'' என்று இடக்காகக் கேட்டாள் சாந்தா கௌரி

"வந்திருப்பது என் பெண். தெரியும் அல்லவா?'' என்றார் நாத்பாபா.

"என்ன! உங்கள் பெண்ணா?'' என்று கேட்ட சாந்தா கௌரிக்கு ஓரேயடியாகத் தூக்கி வாரிப் போட்டது.

"எதற்காக இப்படித் துணுக்குறுகிறாய்? ஜகதீஷின் மனைவியை நான் என் மகளாக மதிக்கிறேன்!'' என்று கூறிய நாத்பாபா, "கணவன்-மனைவி இருவரும் எப்படிப்பட்டவர்கள், தெரியுமா? சொர்க்கப் பிறவிகள் என்றால் சொர்க்கப் பிறவிகள்தான்! என் மகள் கோகிலாவுக்காகவாவது நான் உயிர் வாழ்ந்துதான் ஆக வேண்டும்!'' என்றார்.

வத்ஸராஜ் வெளியே வந்த சிறிது நேரத்துக்கெல்லாம் நாத்பாபாவும் சாந்தா கௌரியும் சேர்ந்தாற் போல் அங்கே வந்து சேர்ந்தார்கள்.

வெளி மண்டபத்துக்கு அருகில் ஒரு வண்டி நின்று கொண்டிருந்தது. மண்டபத்தின் ஒரு புறத்தில் துணிகளால் போர்த்தப்பட்டு ஒரு பெண் படுக்க வைக்கப்பட்டிருந்தாள். ஜகதீஷ் கண் கொட்டாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் மனத்தில் என்ன என்னவெல்லாமோ இல்லாத பல எண்ணங்கள் எல்லாம் இடம் பெற்றுக் கொண்டிருந்தன. அவன் அருகில் சென்று கோகிலாவின் நெற்றியில் கைவைத்துப் பார்த்தான். அனலாகக் கொதித்துக் கொண்டிருந்தது. அவன் தழுதழுத்த குரலில், "கோகிலா! கோகிலா!'' என்று கூப்பிட்டான். அவனுடைய அந்த அழைப்பில், தன் அருமைக் காதலியைப் பிரிந்து அலறும் ஆண் குயிலின் உள்ளத் துடிப்பும் தவிப்பும் பிரதிபலித்தன.

வத்ஸராஜின் பக்கத்து வீட்டில் இருந்த குருட்டுக் கிழவரும் கூடவே வந்திருந்தார். அவர் கோகிலாவிடம் கொண்டிருந்த வாத்ஸல்யத்தைச் சொல்லி முடியாது. ஜுரமாகப் படுத்திருக்கும் கோகிலாவை அனுப்பி விட்டுக் கிராமத்தில் இருக்க அவர் அன்பு மனம் கேட்கவில்லை. எனவே, தட்டித் தடவிக் கொண்டு முதிர்ந்த பிராயத்திலும் அவர் அவர்களோடு அவ்வளவு தூரம் வந்து விட்டார்.

ஜகதீஷின் பரிவு நிறைந்த குரலைக் கேட்ட அவர், "அம்மணி! யார் கூப்பிடுகிறார்கள், பார்!'' என்றார்.

கோகிலா கண்களைத் திறந்தாள். எதிரே ஜகதீஷ் நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்த்ததும் அவள் வெட்கத்தினால் சட்டென்று தன் கண்களை மூடிக் கொண்டாள். அவள் உதடுகளில் ஒரு முறுவல் இழையோடியது. அதைக் கண்ணுற்ற ஜகதீஷின் மனம் அமானுஷிகக் கற்பனையில் இறங்கியது. "திறந்து மூடிய இந்தக் கண்களின் நினைவையும், உதடுகளில் இழையோடி மறைந்த முறுவலையும் மனிதன் மறக்க முடியுமானால் எப்படியிருக்கும்?'' என்று எண்ணினான். அவனது அந்தக் கடுஞ் சுரம்தான் அவனை அப்படி நினைக்கச் செய்தது. ஆனால் அபாக்கியமே உருவான மனிதன் அந்த நினைவையெல்லாம் எங்கே மறக்கிறான்? முறவி முகத்தில் ஒளிரவிடும் கோடுகளைக் கண்டும், காலன் கரிய திரையிட்டு மதி முகத்தை மறைக்கும் விநோதத்தைக் கேட்டும்கூட மனிதன் உயிர் வாழத்தானே செய்கிறான்? உயிரை வேண்டாம் என்று உதறி விடுகிறானா? அத்தனை மாபெரும் வேதாந்தத்தை அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணங்கூட அவனுக்குத் தோன்றுவதில்லையே!

கோகிலா காலை முதல் பேசவே இல்லை. கிழவர் அடிக்கொரு தடவை கூப்பிட்டார். நாத்பாபாவின் சமத்காரங்கள் நிறைந்த இடத்துக்கு வந்து விட்டால் கோகிலா பேச ஆரம்பித்து விடுவாள் என்றே எல்லோரும் எண்ணினார்கள். "அம்மா, பேசு அம்மா!'' என்று கிழவர் மறுபடியும் அவளைக் கேட்டுக் கொண்டார்.

கோகிலா வாய் திறந்து ஒரு பதிலும் சொல்லவில்லை.

கோகிலாவுக்கு அருகில் இருந்த ராதா பிழியப் பிழிய அழுது கொண்டிருந்தாள். அதைக் கண்ணுற்ற நாத்பாபாவுக்கும் வத்ஸராஜுக்கும்கூட மனத்தை என்னவோ செய்தது. ஒளியிழந்த கண்களை உடைய கிழவருக்குக் கடவுளை விட்டால் வேறு கதி இருப்பதாகத் தோன்றவில்லை. முதுமை காரணமாகக் குரல் உடைந்து நடுக்கமுற்று விட்ட பொழுதிலும் அவர் "உன்னையல்லால் கதியிலேன், கிரிதாரி!'' என்னும் பாடலைப் பாடத் தொடங்கி விட்டார். அவரது அந்த இனிய கானம் நாற்றிசையும் பரவி ஒரு தெய்வீகத் தன்மையை உண்டு பண்ணியது. (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor: Mi. Pa. Somasundaram




ஸிம்ஸன் & கோ லிட்.
மதராஸ் - 2

கிளைகள் : பெங்களூர். • திருச்சி. • உதகை • ஹைதராபாத்.

**REGISTERED No. M. 4392**

*Registered as newspaper in Ceylon*










## லைப்பாய் சோப்




இந்தியாவில் தயாரித்தது.

L. 251-40 TM